உ

கடவுள் துணை.

—*—

# வீரகுமார நாடகம்.

இஃது பிரதவம்.

சென்னை மதுரை புதுவை இம்மூச்சங்கங்களிலுந்
தமிழ்த்தலைமைப்புலமை நடாத்திய

———

களத்தூர்.

வேதகிரிமுதலியாரால்

முன்பதிப்பித்த பிரதிக்கிணங்க.

இஃது

மயிலம்.

சுப்பிரமணிய சுவாமிகளால்

பார்வையிடப்பட்டு.

———

சென்னை-இட்டா

பார்த்தசாரதிநாயுடு

அவர்களாற்றமது

ஸ்ரீ பத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1907.

—o—

சென்னை-ஆச்சாரப்பன்தெரு 84-வது நெ.



உ

கடவுள் துணை.

# வீரகுமார நாடகம்.

## விநாயகர் துதி.

வெண்பா-இராகம்-சங்கராபரணம்.

மாமேவுவீரகுமாரனிசையைத்தமிழால்
தேமேவுநாடகமாய்ச்செப்புதற்குப்-பூமேவு
வஞ்சியுமையாளருட்செய்வள்ளலெனுந்தந்திமுகன்
கஞ்சமலர்செஞ்சரணங்காப்பு.

காங்கேயன் துதி-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

திருவளர்விஜய[illegible]றப்பறப்பாதகர்க்கும்
பெருமைசேர்வீரசூரனைப்பெற்றிடும்புதல்வனான
தருமவீரன்குமாரசரிதைநாடகமாய்ப்பாடக்
கருணைசேர்வடிவேலேந்துங்காங்கேயன்கழற்றுதிப்பாம்.

நடேசர் துதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

சீர்நிறைவீரகுமாரசேயனறன்சரிதையாவும்
பேர்பெருந்தமிழினாலேபெருமைநாடகமாய்ச்சொல்லக்
கார்மதியொடுபூங்கொன்றைக்கடிமலரணிகங்காள
னோர்பதம்புகழ்ந்தென்றுநெஞ்சினில்வணக்கஞ்செய்வாம்.

நாமகள் துதி-விருத்தம்-இ-ம்-தோடி.

தமிழ்சொரிம[illegible]ரிமடந்தைதன்கதையதனைப்போற்றி
யமரர்கள்புகழ்ந்துசாற்றவவடனைமெய்யமணிந்து
கமழ்வீரகுமாரநற்சீர்க்கதையைநா[illegible]மாய்ப்பாட
நமதனும்பரமனவ்வியநாமகட்[illegible]திப்பாம்.

அவையடக்கம்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

கற்பனை[illegible]குசெப்பரியகப்பல
காவியமுணர்ந்தருண்மா
வற்புதவுத்தமமுத்தமிழார்ந்திடு
மருவுளபுலவர்முனம
விற்பனவீரகுமாரநற்சரிதையை
வியநா[illegible]கமாய்

அநுபல்லவி.

தருக்களண்டருவும் தாரேக்கமலர்பெய்யும்-
தரணியில்விஜயநக ரதனில்வரசஞ்செய்யும்-குருக்
நீருநெற்றியிற் றன்ன-கதிண
கீர்த்தபொட்டது மின்ன
நாறும்புட்பமாலை கடுக்குடுமியிலாட
நானிலத்தோர்புகழ் நாடிக்கொண்டாட-குருக்
மார்பில்முப்புரி நூலும்இலங்கை
மாதேவரைப் போலும்
சீர்மிகுந்திடமிருந்தவ ரென்னவே
சிவந்தபட்டாடையுந்தோள்களிற் றன்னவே-குருக்
பணத்தில்மிகுந்த பார்ப்பான்-ஒரு
பத்தாகவே சேர்ப்பான்
குணத்தில்மிகுந்தவ னன்றனென்றவன்
கோவில்வரும்படி கூசாமற்றின்னவன்-குருக்

விநாயகருக்கு வேதியர்பூசைசெய்யும் சுலோகம்.

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம்சதுர்ப்புஜம்பிரசன்னவ தனந்தியாயேத் சர்வவிக்கினோபசாந்தயே.

ஓம்சுமுகாயநமா-ஓம்லம்போதராயநமா-ஓம் விகடாயநமாஓம்விக் கினவிநாயகாயநமா-ஓம்கணாதிபதியேநமா ஓம்காட்சிதாயநமாஓம்சாம ளயாணுயநமா-ஓம்சங்குசக்கிராயநமாஓம்பிரணவசொருபாயநமாஓம்வி பூதிகானுவிதகந்தபரிமளபுட்பதீபநைவேத்தியதாம்பூலம்சமர்ப்பயாமி,

பொதுவிருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

மட்டில்லாப்புகழ்பெற்றோருங்கும்மன்னனுமிகவுதார
இட்டசம்பத்துநல்லநகையுமிதக்கமுள்ளோன்
துஷ்டரைதுணிக்கும்வீரகுமாரராஜேந்திரன்வாசற்
கட்டியக்காரன்வந்து களரியிற்றோன்றினனே

கட்டியக்காரன்-வருகிற-தரு-இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

பல்லவி.

காவற்கட்டியக்காரன்வந்தான்-இதோ
காவற்கட்டியக்காரன்வந்தான்

அநுபல்லவி.

மேவும்வீரகுமா ராசகெம்பீரன்வாசற் காவற்கட்டி

சரணங்கள்.

பொன்னுருவிமாலைச்சிர — மிலங்கதோளிற்
பூட்டும்புசகிருதி — துலங்க
மின்னுமார்பிற்பதக்கங் — குலுங்க-விழியின்
மிரட்டாற்பகைவருங் — கலங்க
தன்னும்சல்லடங்கச்சை — தொகுத்திடுப்பினிற்கட்டி
தோள்தட்டிகைகொட்டித் — தோல்புலியினிற்கெட்டி

துரைகள்புகழுவலி — காட்டிபொல்லாத்
துடுக்குசெய்பவர்களை — யோட்டி
மன்னாமன்னவர்க்கெல்லாம்மாண்புறுமதியெனு
மதிகுலத்துறு — மாசாஞ்சிட
மிகுசுந்தர — முடனோரஞ்சித
மகிபனெனும்வீர — குமாரராஜன்
மகிழுமணியொளி — சபையின்வாசல்காவற் கட்டி.

கட்டியக்காரன்சொல்-எச்சரிக்கை

புயல்மேவுவிஜயநகர்தன்னில்வாழ்ராசனிப்
பூவுலகெலாம்பொ க்க
பொற்புடையநங்கன்னியர்களாடிவருகிறார்
புனிதரேயெச்சரிக்கை
நயமுடன்குடிகளைக்காக்கமனவுறுதியாம்
நானிலத்தோர்களிக்க
நகரிவலம்வந்தபின்னாடிசபைவருகிறார்
காவலரேயெச்சரிக்கை
பயங்கொளுமந்திரிபிரதானிசேனாதிபதி
படைகளோடுசிங்காரமாய்
பணிசிம்மாதனமீதுகொலுவாகவருகிறார்
பாருளோரெச்சரிக்கை
ஜெயமேவுதிண்புயக்கோலழில்பகையவர்கள்
ஜெயவெற்றிமாலைபூண்டு
ஜெயப்புகழ்வீரகுமாரராசன்வருகிறார்

கட்டியக்காரன்சொல்.

வீரகுமாரராஜன்வருகிற-பொதுவிருத்தம்.

கதிர்மதியுலவுஞ்சோலைக்கடிமலரெடுத்ததேனும்
நதியெனப்பெருகியோடுநாடிடும்விஜயநாடன்

# வீரகுமாரநாடகம்.

அதிபதிமகுடதாரி யரசர்கட்புகழுந்திர
துதிபெரும்வீரசூர துரந்தரன்கொலுவந்தானே

வசனம்.

அதேதெப்படியென்றால் இப்போது விஜயநகராளுகின்ற இராஜாதிராஜன் இராஜமார்த்தாண்டன் இராஜகெம்பீரன் இராஜ உத்தண்டன் இராஜபரமேஸ்வரன் வீராதிவீரன் வீரபராக்ரம ரணசூரனாகிய வீரசூரமகாராஜன் தமது மந்திரிபிரதானிகளோடு இரத்தினகசிதமான சிம்மாதனத்திற் கொலுவிருந்தாகபுரிய வருகிறவிதங்காண்க.

இராஜன்வருகிற-தரு-இ-ம-புன்னாகவராளி-ஆதிதாளம்.

வீரசூரராஜன்வந்தான் கொலுவிருக்க
வீரசூரராஜன்வந்தான்
மாரனைப்பழிக்குந்தக்க வடிவழகனைப்பெற்ற வீரசூ

நவரத்னமுடி சொலிக்க புஜகீர்த்தி
நாகமணிபோற் கதிக்க
கவரிக்குடைகள் பிடிக்க-வாணர்கள்மிகக்
களித்துவாழிகள் படிக்க
புவனத்தரசர்களும் புகழ்ந்துவந்தடிபோற்ற
புண்ணியமிகச்செய்த விண்ணவர்மலர்தூற்ற-வீரசூர

மந்திரிப்பிரதானி இலங்க-சேனைத்தலைவர்
வந்தித்தடியை வணங்க
சுந்தரமின்னார்க ளாடவேசிலமாதர்கள்
சோபனக்கவி பாடவே
அந்தரவிந்திரன்போ லரசாட்சிதனைச்செய்ய
ஆலவட்டம்பிடிக்க வலக்கைக்கோணைத்துய்ய-வீரசூர

வாத்தியத்தொனி பெருக-வேதம்புகலு
மறையோர்கள்புறம் வருக
மாற்றலர்வந்து பணிய-அவர்கள்மேல்
வைத்தவருள் தணிய
சாத்திரநூல்கட்சேர்ந்த தன்மமனதிலுற்றேன்
சதுர்விதத்திலுபாய தந்திரங்களைக்கற்றேன்-வீரசூர

விருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

நான்மறைமுடிவில்நின்று நடம்புரிநாதாபோற்றி
கான்மலர்க்கொன்றைதும்பைக் கனமுஞ்செஞ்சடையாய்போற்றி
வான்படாதிங்கடன்னை மருங்குறத்தரித்தோய்போற்றி
மான்மழுவிலங்கையில் மகிழ்வுடன்தரித்தாய்போற்றி

முதல்மந்திரி-சத்துவப்பிரதாசன்-இராசனுக்குச்சொல்
போற்றி விருத்தம்-இ-ப-ஆனந்தபைரவி.

விசையநன்விரையன்பாய் வியமுடனுளுகின்ற
இசைபெரும்ராஜதீர விறைவனேநின்றாள்போற்றி
சுசிகரவீரசூர தாரதாவணியேயல்ல
வசிகீர்முடையனால மன்னவாபோற்றிபோற்றி.

உ-வது-ஞானப்தேசமந்திரி-இராசனுக்குச்சொல்
போற்றி-விருத்தம்-இ-ப-கல்யாணி.

படிமிசைபுகழ்பெற்றோங்கும் பச்சைமாமணியும்வச்ர
முடிபுனைந்தலகையாளு மூவகைராசேந்திராபோற்றி
கெடிபெறும்வீரசூர கிரீடாதிபதியேஉந்தன்
அடிமிசைமுடிகுனிந்தே னரசர்களரசேபோற்றி

கட்டியக்காரன்-இராசனுக்குச்சொல்போற்றி
விருத்தம்-இ-ம்-அடாணா.

வங்கர்விராடர்மச்சகர்தூடர் வடுகர்இங்குடவர்களுங்
கொங்கணரீழர்கள் குருதராமாடருங்குஞ்சரப்பப்பாருஞ்
சிங்களர்மததாகடுளுவர்கள் சினர்மதினம்வந்தடிதாழும்
அங்கமெனும்வீரசூர தூரந்தர தூரையேநின்னடிபோற்றி.

இராசன்-தேசவிசாரணை.

இராசன். சிரணிந்திடுவிசைய மாநகரில்யாவருஞ்
வினா. செழுத்திருக்கின்றார்களா
மந்திரி. செகமேவும்புவிராசர் கவிராஜர்யாவருஞ்
விடை. செழித்திருக்கிறார்களையா
இராசன். தாரணியில்மன்னவர்களென்பகுதியைச்சீராய்
வினா. தர்அவருகின்றார்களா
மந்திரி. தடைசெய்வாரோஉமது செங்கோன்முறைப்படித்
விடை. தந்துவாராரையனே
இராசன். தாரணிந்திடுமிலேநின் வாழ்குடிகள்பயிர்செய்து
வினா. சுனமுடனிருக்கிறரா
மந்திரி. கர்த்தனேநின்கிருபையால்வருமாறிலோர்
விடை. கடைத்தந்திடுகிறார்கள்
இராசன். வதணிந்திடுஞ்சிவாலயங்கடேவாலய
வினா. மெங்குந்திருவிழாநடக்குதா
மந்திரி. வகதக்ர்ஷிபதியேதிருவிழாநடக்
விடை. தெப்போதஞ்சுபக்ஷேமமே

நாட்டியப்பெண்கள்வருகிற பொதுவிருத்தம்—இ-ம்-கல்யாணி.

ஆடகமண்டபத்தி லணியாசனத்தின் மீது
நீடியவீரசூர நிருபன்வீற்றிருக்கும்போது
பாடியேநடனஞ்செய்து பட்டாடைபரிசுவாங்க
நாடகசாலைப்பெண்கள் நலமுடன்வருகின்றாரே.

கட்டியக்காரன் வசனம்.

அகோ தெப்படியென்றால் அந்தப்படிக்கு ராசாதிராசனான வீரசூர மகாராஜன்கொலுவில் நாடகசாலைப்பெண்கள் நடனஞ்செய்ய வருகிறவிதங்காண்க.

நாட்டியப்பெண்கள்வருகிற—தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நளினமலர்வதன அதிகஅழகுடைய
நடனமாதர்கள் வந்தார்
அளியைப்பழித்தவிழி யமுதைநிகர்த்தமொழி
அன்னநடையைவென்ற மின்னரசியும்வெகு
உன்னதமாய்க்காம சன்னதம்பேசி. நளின

சரணங்கள்.

சந்திரனைப்பழித்த நெத்தியும்-யோக
சாதனரைமயக்கும் சத்தியும்
விந்தைக்கல்விசெய்யும் யத்தியும்-கண்ணால்
மிரட்டிப்பொருள்பறிக்கும் பத்தியும்
அந்தமுடையவில்லின் புருவமும்-ஒளி
யனங்கன்றேவியைவென்ற வுருவமும்
சுந்தரமிகுவிரு கைகளும்-கதலித்
துடைகளொளிசேர்சிற் றிடைகளும்
கொந்தாரணிபுரத்தில் கூடயிலங்குந்திவ்ய
குங்குமச்சேரணிந்து லங்குபடச்செய்ய
கொங்கைகுலுங்கச் செங்கையிலங்கத்
திங்களெனும்படி யங்கந்துலங்க
கொப்பொடுசெப்பரி யப்பலபொற்பணி
முற்றுமெடுத்து தொடுத்துதரித்து
கோதிலாதவீர சூரன்வாழ்ச்சபையிற்
காதற்கொண்டதிக வேகமதாகவே-நளின

நடனமாதர்போற்றிகொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி,

தேசதேசத்தரசர் திறைகள்செய்திடவேம்செங்கோல்
மீதரமாய்க்கொண்டாளு மேன்மையுறுமெங்கோனே

ஆசிரியர் தங்களுக்குத் தனமிகவேதானளிக்கும்
பாகமுள்ளவினரீமாநகர் பதியேயின்றுள்போற்றி

வசனம்.

சரணஞ்சரணம் விசையநகராளுகின்ற மகாராசனே சரணம் இராசராசாக்கள புடைசூழச் செங்கோலேந்தி யரசாட்சிசெய்யுந் தமது கொலுவிற்குவந்தோம் ஆசையால்தங்கள்மேல் யாங்கள் மிகவும் மோகங்கொண்டபதம்பாடி நடனமாடுகிறோம்மகாராஜனே.

இராசன் பெண்களுக்குச்சொல்-வசனம்.

ஆஆ பெண்களே நீங்கள்என்மேலே மோகங்கொண்டபதத்தைச்சொல்லி நடனஞ்செய்யவாவந்தீர்கள் நல்லதுசற்றே நடனஞ்செய்யுங்கள் பார்ப்போம் நடனமாதர்களே.

நாட்டியப்பெண்கள்சொல் மோகபதம்.

இ-ம்- ஆதிதாளம்.

பல்லவி.

அதிசூர அழகினில்மார

அநுபல்லவி.

துதிமுதலேத்தார சூரியேவிரக்தீர

சரணங்கள்

காதல்கொண்டதாலே கலங்குமுன்றினாலே
வேதனைநின்னாலேவிளம்பப்போமோ என்னாலே-அதி

விரகசையோகா வேளேனும்போகா
தரணியாளிர்வாகா தனமருட்டியாகா-அதி

வஞ்சனைமீது பருமிகழ்க்கோது
மஞ்சிமேடில்வாது மன்னுசெய்யத்தகாது-அதி

இராசன் மந்திரிக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

மந்திரிகேளாயிந்த மாதர்கணடனமிக்க
விந்தையாயிருந்ததாலே வேணதோர்பொருளுமல்லாற்
சுந்தரபணிபட்டாடை அலக்கமாயவற்குநல்கி
அந்தமாயவர்பதிக்கே யன்புடனனுப்புவாயே.

வ-ம், கேளாய் தத்துவப்பிரகாசமந்திரீ நமது சபையில் நடனஞ்செய்த மாதர்களுக்கு வேண்டியதிரவியங்களும் அழகுபொருந்திய ஆடையாபரணங்களுங்கொடுத்து அவர்களேமனமகிழ்ச்சிசெய்து அனுப்புவாயப்பாமந்திரி.

மந்திரி இராசனுக்குச்சொல்-வசனம்

அப்படியே தங்களுத்தரவின்படி தப்பாமற்கொடுத்தனுப்பிவைக்கிறேன் மகாராசனே.

தத்துவப்பிரகாசமந்திரி கட்டியக்காரனுக்குச்சொல்
விருத்தம்-இ-ம்-தோடி

கதித்தகிண்டோள்கொண்டோங்கும் கனசூரராசன்
மதித்தநற்சபையிலுட்டிய மாதியமாதருக்குப்
பதித்தநல்லாடைபொன்னும் பரிசதுகொடுக்கவேந்தன்
விதித்தனர்கட்டியக்காரா விதமுடன்கொடுத்திடாயே.

வ-ம்-கேளுமப்பா ஆசாரவாசல்காக்குங்கட்டியக்காரா நமதாண்டவராகிய வீரசூரமகாராஜனுத்தரவின்படி சபையில் நடனஞ்செய்த நாட்டியப்பெண்களுக்கு ஆடையாபரணங்களும் பரிசுகொடுதநனுப்புமப்பிள்ளாய் கட்டியக்காரா

கட்டியக்காரன் மந்திரிக்குச்சொல்-வசனம்

அப்படியே கொடுத்தனுப்புகிறேன்சுவாமி

பொதுவிருத்தம்-இ-ம்-தோடி

நடனஞ்செய்திட்டமாதர் நன்மனைசென்றபின்பு
திடமுறும்வீரசூர தீரரைசமுகந்தேடி
அடல்கொண்டாமிருக்மேவி யவ்வூரின்பயிரையெல்லாம்
இடருடனழித்ததாலே இன்றுட்டகுடிகள்வாரார்

வ-ம்-அதேதெப்படியென்றால் இராசசபையில் நாட்டியஞ்செய்தபெண்கள் தங்கள்பதிக்கு போனபிறகு விசையநகரிலுள்ள குடிகளிட்டபயிரை மிருகங்களழிக்கும் உபத்திரத்தால் பயமடைந்து வீரசூரமகாராசன் கொலுவிற்கு குடிகள் வருகிறவிதங்காண்க

குடிகள்வருகிற-தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி

விசையநகர்குடிகள்வந்தார்-இதோ
விசையநகர்குடிகள்வந்தார்

அநுபல்லவி

திசையிலுண்டானபல் தீமிருகங்களுந்
தினைப்பயிரழித்ததால் மனங்கலங்கியேநல்ல

சரணங்கள்

ஐயோசிவனேயென்று-நல்ல
அரிவாளுங்கைக்கொண்டு

துய்யபாகைசிரத்திற் றெடுத்துவேட்டியணிந்து
துரைமன்னர்சூழ்வீர 2 சூரர்தனைப்பணிந்து-விசை

நெற்றியிற் றிருநீறு-மின்ன
நிலைமையா யனைவோரும்

தொற்றவனூர் திருக் கொலுவினைத்தேடியே
கிழவிகளுடன் சேர்ந்து வின்றவுடனோடியே-விசை
ன்னபயிர் போச்சுதென்றும்-இலர்
ஏண்ணியே துயரடைந்தும்
இன்னகர் தன்னிலிர்ந்த விடுக்கமும்வந்தது
என்னசெய்வோமென்று மன்னரிடமிப்போது-விசை

குடிகள்-இராசனுக்குச்சொல்-போற்றிகவி

இ-ம்-ஆனந்தபைரவி

ஐயனே சரணமெம்மை யாண்டவா சரணநல்ல
துய்யனே சரணம்வீர சூரனே சரணமையா

இராசன்குடிகளுக்குச்சொல்-விருத்தம்- ஆனந்தபைரவி

இன்னகர் தன்னில்வாழு மென்குடிகளேநீர்கேளீர்
ஒன்னலர்ப்பகையுமுண்டோ ஒதுவீர்குறைதானென்ன
உன்னதம்ரகவிங்கே உகந்துமேவந்தொன்றாய்
ன்னகாரணமோநன்று மெடுத்துரைசெய்குவீரே

வ-ம்-கேளுங்கள் குடிகளே நீங்கள்பாவரு மொன்றுய்க்கூடி நமது கொலுவினைத் தேடிவந்தகாரணமென்ன உங்களுக்கு என்னகுறை யிருக்கின்றது அல்லது பகையாளிகளினால் வருத்தமுண்டோ எனக்கு நன்றாய்த்தெரியச்சொல்லுங்கள் குடிகளே

குடிகள்-இராசனுக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-முகாரி

குறையொன்றுமில்லையெப்போதும் கொற்றவாநின்றுட்போற்றி
தரைதனில்நாங்களிட்டுத் தழைக்கச்செய்பயிரையெல்லாம்
மிருகங்கள்வந்துவீழ்ந்து ப் தித்தாலாகோலஞ்செய்ய
முறையிடவந்தோமையா முன்னின்றுகாத்திடீரே

வ-ம் கேளுமையா இராசபரமேஸ்வரா தங்களுடைய கிருபையினாலே எங்களுக்கொரு குறைவுமில்லை பகைவருமில்லை நாங்கள் பூமியில் உதித்து பயிரிட்டதானியங்களை மிருகங்கள்வந்து அழித்ததனால தங்களிடம்முறையிடவந்தோம் ஆகையால் எங்கள்மேற் கிருபை வைத்து எங்கள் துயரைநீக்கி ரட்சிக்கவேணுமையா மகாராசனே

இராசன் குடிகளுக்குச்சொல்—வசனம்

ஆ-ஆ-ஆமல்லது அப்படியே நீங்களுங்கள்பதிக்குப் போய்ச்சேருங்கள் நான்போய்க்காட்டில் வேட்டையாடி மிருகங்களைவதைத்து உங்கள் மனவருத்தத்தைதீர்க்கிறேன் பயப்படவேண்டாம் குடிகளே.

சரணஞ்சரணம் அப்படியேபோய்வருகிறோமையா மகாராசனே.

இராசன்-மந்திரிக்குச்சொல்-வசனம்.

கேளுமப்பா தத்துவப்பிரகாச மந்திரி நமதுநகரின் பயிர்களைமிருகங்களவந்து அழிப்பதால் இதற்குள் என்னயோசனைசெய்யலாம்சொலலும் மந்திரியே.

மந்திரி ராசனுக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-கருட்டி.

மன்னனேகேளாயத்த மாவனந்தன்னிற்சென்று
நன்னயப்பணியானை நவிலுஞ்சூராங்கட்சிங்க
முன்னியமிருகமெல்லா முயர்சாயகிரியிலேகி
முன்னநாம்வேட்டையாடித் துரிதமாய்வருகுவோமே.

வ-ம்-கேளும்மகாராசனே இப்போது அடவியிலதிகமாய் கரடி புலிசிங்கம் காட்டானை பன்றிமுதல் இவைமுதலாகியமிருகங்கள் விஸ்தாரமாய் வாசஞ்செய்கிறபடியால் நமதுகுடிகளுடைய பயிர்களை அழிக்கின்றது அதற்குபாயமென்னசெய்யலாமென்றால் அவ்விடம்சர்வகிரிக்குப்போய் சீக்கிரம்வேட்டையாடி வருகிறதுதான் உபாயம்மகாராசனே.

இராசன்-மந்திரிக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-தோடி.

மந்திரி அப்பாய்நீதான வழுத்தியஉபாயமிக்கச்
சிந்தையிற்களிப்புண்டாகச் சீக்கிரமாய்நாளுமிப்போ
விந்தையாய்வேட்டையாட வேடர்வில்லியர்க்குநீதான்
சுந்தரத்துடனே துரிதமாயழைத்திடாயே.

வ-ம்-கேளாய் தத்துவப்பிரகாசமந்திரி நாம்சர்வகிரியிற்சென்று அடவியிலுண்டாகிய மிருகங்களை வேட்டையாட வேணுமென்று நீ சொன்னசொல்சரியே ஆகையால் இப்போதுநாம்வேட்டைக்குப்போகவேணுமேம் நமதுநகரில்வாசஞ்செய்கின்றவேடர்வில்லியர்களை சீக்கிரமாக அழைப்பியுமப்பா மந்திரியே.

மந்திரி-இராசனுக்குச்சொல்-வசனம்.

மகாபாக்கியம் தங்களுத்தரவின்படி அப்படியேயழைப்பிக்கிறேனையா வீரகுமாரமகாராசனே.

மந்திரி-கட்டியனுக்குச்சொல்-வசனம்.

ஆரடா அடா ஆசாரவாசற்காக்குங் கட்டியக்காரா நமதுஆண்டவராகிய வீரகுமாரமகாராசா இப்போதுவனத்தில் வேட்டையாடப்போகின்றார் ஆகையால்வேடர்வில்லியரை அவர்களுடைய ஆயுதவரிசைகளோடு அதிசீக்கிரமாய் அழைத்துக்கொண்டு வாரும்பிள்ளாய் கட்டியக்காரா.

கட்டியக்காரன்-மந்திரிக்குச்சொல்-வசனம்

சரணஞ்சரணம் மகாபாக்கியம் மகாபாக்கியம் அப்படியேயழைத்துக்கொண்டு வருகிறேனையாசுவாமி

வேடர்வருகிற-பொதுவிருத்தம்-இ-ம்-தன்னியாசி

கூறியபூகிசெல்லைக் கொடியகாவலன்சொற்கேட்டு
பாரியசூரியீட்டி பணிவில்லுங்கரத்திலேந்தி
சீறியநாய்கட்டன்னை சேரவேகூட்டிக்கொண்டு
வீரியமிருகத்தைமாய்க்க வேட்டைக்காரர்கள்வந்தாரே

வ-ம்- அதோ தெப்படியென்றால் இந்தப்பிரகாரம்தத்துவப்பிரகாசமந்திரி அரசனுத்தாரப்படிக்குகட்டியக்காரனுக்குச்சொல்லகட்டியக்காரன் சொற்படிக்கு சகல ஆயுதங்களோடு வேட்டைநாய் சூழ வேடர்வில்லியர்கள் வருகிறவிதங்காண்க.

வேடர்வில்லியர்வருகிற-தரு-இ-ம்-தன்னியாசி-ஆதிதாளம்

பல்லவி

வனத்தில்வேடர் நாங்களே-வலை
வாழும்வில்லியர்கள் நாங்களே
இனத்தில்மிருகத்தப் பன்றிமான்கலையைச்
சிக்கெனப்பிடித்துப் பக்கத்திலடக்கும்-வன

சரணங்கள்

ஓடுஞ்சிங்கத்தையும் பிடிப்போம்-தப்பி
ஓடினாற்கணையா லடிப்போம்-சிறு
நாடுபுலிவந்தாற் கடிப்போம்-சிறு
நரிகளுதிரங் குடிப்போம்
தேடுவோமின்பசெந் தேனைகுலைநாடி
தேமாங்கனிகளுந் தின்றிடுவோம்கூடி-வன

போவார்வருவாரைத் தடுப்போம்-தப்பி
போனாலவருயிர் குடிப்போம்
சாவாதமூலிகைக் கொடுப்போம்-எங்கள்
சத்துருவின்மேற்போர் தொடுப்போம்
பாவாடைராயனைப் பரிவாய்த்துதிப்போம்
பாசமாய்நந்தரைப் பணிந்துமதிப்போம்-வன

அயலார்பொருளைப் பறிப்போம்-சடுதில்
அஞ்சாமற்சிரத்தை தறிப்போம்
புயத்தால்மலையை முடிப்போம்-தம்பி
பெண்டையும்பெண்டாகக் குறிப்போம்
ஜெயம்பெறவீர குமாரராசர்
செங்கோலின்கீழே யடங்கும்விசுவாசர்-வன

வேடர்கள்-இராசனுக்குச்சொல்-போற்றிவிருத்தம்

இராகம்-ஆனந்தபைரவி

மன்னர்க்கரசேபோற்றி மணிமுடிதரித்தாய்போற்றி
ஒன்னலர்நடுங்கவெற்றி யுயர்செங்கோல்கொண்டாய்போற்றி

வெற்றிசேர்வனத்திற்சென்று வேட்டைகளாடிவாரேன்
பத்தியாயரன்மனைக்குட் பதனமாயிருந் திடுவையே.

வ-ம்-கேளும்பெண்ணே சொர்னகாந்தி நெடுநாளாய்இ அவனைக் கும் புத்திரனில்லாமலிருந்து கடவுளருளால் இப்போது நீ கெற்ப மாயிருக்கிறபடியால் வனத்திற்கு வரக்கூடாது ஆகையால் அரண்ம னையிற்றானே பதனமாயிரும்பெண்ணே சொர்னகாந்தி.

சொர்னகாந்தி-இராசனுக்குச்-சொல்-வசனம்.

பொதுவிருத்தம்-இ-ட்-அடாணா.

இயம்பியசொர்னகாந்தியிடத்தினில்விடைகள்பெற்று
நயம்பெறுபடைகளான்குடைத்திடச்சொல்லிதானுஞ்
செயம்பெறுமந்திரியோடுசிலரையுங்கூட்டிக்கொண்டு
வியம்புயசர்வவெற்றிவேட்டையாடவுஞ்சென்றானே.

வ-ம்-அதேதெப்படியென்றால் வீரகுமாரராசன் தமது மனை வியாகிய சொர்னகாந்தியிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மந்திரிபி ரதானிசேனாபதி வேடர் சில்லியர்களுடன் சேனைநன் புறப்பட்டு சர் வகிரியில் வேட்டையாடப்போகிறவிதங்காண்க.

இராசன்-வேட்டையாடப்போகிற-தரு.

இ-ம்-அடாணா ஆதிதாளம்.

பல்லவி.

ஆடுவோம்வாரீர் வனவேட்டை யாடுவோம்வாரீர்

அநுபல்லவி.

காடுங்கடம்பைக்கரிகரிகள்பரிகள்வேட்டை ஆடு

சரணங்கள்,

சிங்கங்கரடி
செழிப்புருவயல்களை
சங்கரித்துவருவோம்
சாற்றுவனுகையால்
செந்நாய்மலைமிருகஞ்
யழிக்குங்கோனுய்களுஞ்
என்றுதத்வப்பிரகாசன்
கற்றுவன்வேடர்களே-ஆடு

கட்டுக்காடையுடனே
காணுங்கோழிகளுவை
எட்டுதிக்கிலுஞ்சென்று
எல்லாமொருமிக்க
சிட்டுக்குருவிகளும்
காட்டுப்பன்றிகளும்
இசைந்துவலைபிணித்து
கொல்வோமிந்தக்கணம்-ஆடு

சிறுக்கண்ணிப்பெருங்கண்ணி
தீவிரமாய்கட்டுஞ்
பருத்தவில்லுசளம்பும்
பதனமாகவெடுத்து
சிக்கான்வலைகளை
சிலமள்ளகயர்களும்
டாங்கானபொற்கவுண்டும்
பரிவாய்வாரும்போது-ஆடு

பொருநவிருத்தம்-இ-ம்-ரீதிகெளளி.

கரிபரிதளங்கள் வீரர்கணத்தோராணுமெல்லாந்
திரமுடனடத்திக்கொண்டுசிலமதவீரசூரன்
அரியதோர்நகரையும்விட்டடர்வனஞ்செல்லும்போது
தருமவீரேந்திரன் துற்சகுனங்களை திர்காண்பானே.

வ-ம்- அக்கோதெப்படியென்றால் வீரசூரமகிராசன் காட்டில் வே ட்டையாடப் போகும்வழியில் துற்சகுனங் காணுகிறவிதங்காண்க.

இராசன்-அவசகுனங்காணும்- தரு- இ-ம்-ரீதிகெளளி-ரூபகதாளம்.

பல்லவி.

பொல்லாச்சகுன மிகவும்காணுதே-புகல்வாய்நீமந்திரி
பொல்லாச்சகுன மிகவுங்காணுதே-புகல்வாய்நீமந்திரி
பொருந்துமனமும்வருந்தி நாணுதே

அநுபல்லவி.

எல்லாங்கடவுட்செயலோவையா
எனதகமுமே மிகமெலியுதே
மனமனமில்லை யதுசோருதே பொல்

சரணங்கள்,

சாரையுஞ்சிறு முசலுமோடுதே-சீராய்ப்பாருமந்திரி
சஞ்சலமடைந்தென் னகமும்வாடுதே
காருதிர் மழைசொரியுதே
கனற்கொள்ளியு மெதிர்வீழ்ந்துதே
ஆனசூரிய னொலிதாழ்ந்துதே பொல்

ஒற்றைப்பார்ப்பான் உகந்துவருகிறான்-நமக்கெதிரிலிதோ
ஒருவனெண்ணெ குடங்கொண்டுதிரிகிறான்
உற்றுப்பாராதோட சத்ரமுதிருது
ஓகோகெருடன் சுட்டுது
வாகாய்முகுடந் தட்டுது பொல்

தாண்டியொருத்தி யாகப்புலம்புகிறாள்-ஐயையோவிப்போ
வொருவிதவைப் பெண்ணுந்துலங்குகிறாள்
கண்டாயென்வலக் கண்ணுந்துடிக்குது
கருதாய்பொல் லாக்காலம்
கர்த்தர்க்கொப்போ மூலம் பொல்

இராசன்-மந்திரிக்குச்சொல்-விருத்தம்- இ-ம்-காம்போதி

நந்தலாஞ்சகுனந்தன்னைநானுமேகண்ணிற்கண்டு
சிந்தையிற்கவலையாச்சுதிகழ்மந்திரிநீயேகேளாய்

அந்தமாம்வனத்திற்செல்லலாகாதுநாமுமிப்போ
வந்தநல்வழிதிரும்பிமாநகர்க்கேகுவோமே

வ-ம்-கேளாய் தத்துவப்ரகாசமந்திரி இப்போது நாம்கண்ட அவசகுனங்களை யோசனை செய்து பார்த்தால் மனதிற்கு மிக்கவும் விசனமாகவிருக்கின்றது ஆகலால்நாம்வனத்தில் வேட்டையாடப் போகலாகாது நம்முடைய நகருக்கேகுவோம் வாராய் மந்திரி.

மந்திரி-இராசனுக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

கண்டதோர்சகுனமெல்லாங் கனதடையாகுமென்னீர்
நின்றவிவ்வளவுதூர நடந்து சம்பந்தபின்பு
நின்றிடுமென்றவார்த்தை நெடுங்கடற்றாண்டிக்கால்வாய்
சென்றிடப்பயம்போலாச்சு செயித்துநாம்வருகலாமே.

வ-ம்-கேளும் மகாராசனே தாங்கள் கண்ட சகுனமெல்லாந் தடையாயிருக்குமென்றும் போகக்கூடாதென்றும் நகருக்குச் செல்வோமென்றுஞ் சொல்லுகிறீர் அதுஎப்படியிருக்குமென்றால் கடலெல்லாந்தாண்டி கடைசியில் கால்வாயைத் தாண்டப்பயப்படுவதுபோல் இருக்கிறது ஆகலால் சர்வகிரிக்குச் சென்று சீக்கிரமாய் வேட்டையாடி வருவோம்மகாராசனே

பொது-விருத்தம்-இ-ம்-அடாணா,

மந்திரிசொன்னமொழிப்பு மனதினிற்கவலைதீர்ந்து
சுந்தரவீரகுமா ரநந்தராசன்றானும்
தந்திரிகள்பரிகள்சேனைச் சதுரங்கதளங்கள்சூழ
வந்ததோர்கிரிக்குட்சென்று வனுவேட்டையாடலுற்றார்

வ-ம்-அதேதெப்படி யென்றால் வீரகுமாரமகாராசன் மந்திரிசொல்லியதை யங்கீகரித்து நால்வகைச்சேனைகளுந் தன்னைச்சூழ சர்வகிரிக்குச்சென்று வேட்டையாடுகிற விதங்காண்க

இராசன்வேட்டையாடுகிறதரு-இ-ம்-அடாணா-ரூபகதாளம்

கண்ணிகள்

சிங்கங்கரடிபுலியும்பன்றிகள் சினந்தெதிர்வந்ததோணுதே
பொங்கமுடன்வலையதனைக்கட்டி பொருதடாவதைக்கருதடா
செங்கைக்கணையைத்தெரியவரைபுலி திகைத்துகதித்துவருதடா
தங்கப்பதுமைபோலுமானைத் தாவிக்கையாற்பிடியடா
கரடியெதிர்த்துவருகுதேமிகக் கனத்தசண்டைகள்வருதே
திறமுடனதைப்பிடித்துநிலத்திற் றிருகரக்கொண்டுறையடா
அருகில்மீறிவருகுதேயதையடுத்துக்கொள கணைதொடுதுங்கொன்
றரியடாநெடுங்கணைகளாலே யிருந்தடாவதைவருத்தடா
பண்டிவருதேபன்றிக்கூட்டங்க ளண்டருலகநடுங்கவே
செண்டுபோலெழுந்தோங்கிக்கணையுந் சோவேலொன்றுப்செலுத்த

வ-ம். ஆ-ஆ வேடர் வில்லியர்களே நான் வேட்டையாடினதில் அநேகமிருகங்கள் அதிகமாய்விட்டது ஆகையால்நீங்கள் தனியே வேட்டையாடுங்கள் பார்ப்போம்வேடர்வில்லியர்களே

வேடர்சொல்-வசனம்.

அந்தப்படியே செய்கிறோம் மகாராஜனே.

வேடர்சொல்-கந்தார்த்தம்-இ-ம்-தோடி-அடதாளம்.

திக்கினிலிருந்தமான் கடிகைகுத்தியதோவாராதையே
பக்கமார்பரியவீரர் பதனமாயிருங்கடையே
நோக்குசிக்காரீங்கள் குறுக்காகத்திரியாதையே
இக்கவேகலேடனெல்லாஞ்

சேருநடையேநம்மைக்கண்டு
சீறுநடையே

சேருறுசீறுறுவாராறுபொறுபொறு
சிதைக்கலாம்வதைக்கலாம்பதைக்கவேமுறிக்கலாம் சேரு
பருவலையெடுத்துயிர்தப்பக்கத்தின்மாத்திரைட்டி
பொருவலையதற்குநோபொடுக்கவேட்டுமையே
மிருகங்கள்தனில்மெத்தவிழ்ந்துமேபிளிக்குமையே
பொருவில்லைகையிலேந்திப்

புறப்படுமையே-அம்பையெடுத்து
சிறப்புடனேயே

புறப்படுஞ்சிறப்புடன்போர்க்கடம்பையைக்கொல்ல
பொரிக்கவாமுருக்கமாயறுக்கலாமோடையே புறப்பட்டு
கானகக்கடம்பாவாடாகள்ளர்கட்கிறைநீயவாடா
எனமூநமக்குமெத்தவெளிதினிற்கிடைக்குமையே
தானுஇபதிக்குநல்லத்தசையெலாமளிப்போநாமு
முனையில்லாமலவேட்டைக்கு

ஓடுவோமையே-வில்லையெடுத்துச்
சாடுவோமையே

ஓடுவோங்கூடுவோம்நாடுவோந்தேடுவோம்
சூடுவோஞ்செயமாஞ்சாடுவோநாமும் ஓடுவோம்
புதருக்குள்முசற்கூட்டங்கள்புறப்படுவாரரையே
பதறுகில்நீங்களெல்லாம்பதுங்கியேயிருங்களையே
எதிரச்சென்றுவெல்லாமேகுமொன்றாகவையே
மிருகமற்றுமிங்கேயல்லா

மேவுநடையே-கிக்கியென்று
கூவுநடையே

மேவுறகூவுறயிரேயிரே
மேன்மையாயேபிடிக்கலாம்மான்களையடிக்கலாம்மவுறு

விரகக்குரோதமத லோபம்யாவும்மென்று
விருதுபெற்றியர்கல்விசைப்பகைசரினின்று — குரு
ஐம்புலன்களையடக்கிவாசியை
அகப்புகவுமேயொடுக்கி
சம்பிரமுடன்மதந்தனைநிலைசெய்ய
சதுமறைதுதிகணபதிக்குமலர்கொய்ய — குரு

குருக்கள்பிள்ளையாருக்குமலரெடுக்குங்கண்ணிகள்.

இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

நந்தியாவட்டமெல்லாங் கணநாதருக்கேபறிப்பேன்
விந்தையாமல்லிகைகள் விநாயகருக்குப்பறிப்பேன்
கொன்றைமலர்களெல்லாமொற்றைக் கொம்பனுக்குப்பறிப்பேன்
வென்றுமலர்களெல்லாமைங்கரநிமலருக்கேபறிப்பேன்
முல்லைமலர்களெல்லா மூஷிகமூர்த்தியர்க்கேபறிப்பேன்
மல்லிகைமலரெல்லாம் மாயன்மருகனுக்கேபறிப்பேன்
தும்பைமலரெல்லாமெங்கள் தும்பிமுகத்துக்குப்பறிப்பேன்
சண்பகமலரெல்லாஞ்சண்முகர் தமையனுக்கேபறிப்பேன்
வன்னப்பவளகல்லிமெங்கள் வக்ரதுண்டர்க்குப்பறிப்பேன்
சொர்ணநிறமலர்கள்ப்ரணவ சொரூபருக்கேபறிப்பேன்
அறுகெ டெருக்கின்மலரெங்களத்திமுகர்க்குப்பறிப்பேன்
நறுமலரிருவாட்சிசித்திபுத்திநாதருக்கேபறிப்பேன்
மந்தாரைமலர்கள்வல்லபமணவாளருக்கேபறிப்பேன்
செந்தாமரைமலர்கள் பார்வதிசெல்வருக்கேபறிப்பேன்

பொதுவிருத்தம்-இ-ம்-முகாரி.

குருக்களும்வில்வமாக்கிளிலையி
கோதிலாத்தளங்களையெடுத்துக்
கொண்டிருக்கும்போதரசனமைச்சன்
குளிர்மதிமுகந்தனைநோக்கி
பெருக்கமாஞ்சுனைநீரெவ்விடத்திருக்கும்
பெற்றிகொண்மந்திரியேயென்னப்
பேணியேயவனும்புகலுவன்வடக்கே
போயினாற்புனலுண்டென்ன
உறுக்கமாய்த்துணைகேட்டு
முகந்துமேவென்றனனங்கே
உறுஞ்சிலைதனிலேயூத ளினுரையா
லுன்னதமன்னனுயிரிழப்பார்
திருக்கமாகவுமேன்றிருந்ததைப்பார்த்துச்
சிலைகுறிசிற்சிரசசைந்தான்
தீதுறமந்திரியச்சிலைநோக்கித்
திகைத்துமேபுலம்பலுற்றனனே

வ-ம் அகோதெப்படியென்றால் குருக்களானவர் புட்பமெல்லாம் பிள்ளையாருக்குப் பறித்தபின்பு வில்வம் பறித்த வில்வமரத்திலேறிக் கொண்டிருக்க அதற்கருகாமையி லொரு மரத்தின்கீழிருந்த வீரகுமாரன் மகாராசன் தாகவிடாய் கொண்டு மந்திரியைச் சலங்கேட்க மந்திரியானவன் ஜலம்வடக்கே போனாலிருக்குமென்ன அந்தட்சணம் அரசன் அங்குசென்றக்குளத்தின் கரையில் அவ்விடத்தி லொருகல்லில் மந்திரிவார்த்தையைக்கேட்டவர் தேசமிழப்பாரென்று யெழுதி யிருக்கக் கண்ட அரசன் திகைத்து யோசித்துக் கொண்டிருக்க மந்திரியானவனன்தானும் பின்சென்று அந்தக்கல்லினெழுத்தை வாசித்துப் பார்த்தாரேயென்று புலம்புகிறவிதங்காண்க

மந்திரிபுலம்பல்-இ-ம்-முகாரி-ஆதிதாளம்-கண்ணிகள்

என்னசெய்வேனிந்தக்கல்லில்
இப்படியெழுதலாமோ — தெய்வமே

மன்னவனிதனைக்கண்டு
மயங்கிநின்றானேஐயோ — தெய்வமே

மந்திரியின்வார்த்தைகேட்ட
மன்னனுயிரிழப்பானென்று — தெய்வமே

இந்தக்கல்லிலெழுதி
யிருக்குதேயென்னசெய்வேன் — தெய்வமே

பார்த்துமன்னன்முகச்செழிந்து
பதறித்தலையசைத்தான் — தெய்வமே

வார்த்தைதள்ளாமன்னனென்மேல்
மனதுப்விடுத்தானேயோ — தெய்வமே

பட்டணத்தில்சென்றாலவர்
இஷ்டமென்னமோவறியேன் — தெய்வமே

வெட்டவாக்கினைசெய்வாரோ
வேந்தன்மனதறியேன் — தெய்வமே

இதுவு மந்திரிசொல்வசனம்

ஆ-ஆ தெய்வமே நாங்கள் வந்தயிடத்தி லிந்தகல்லில் இராசன் கண்முன் இப்படியு மெழுதியிருக்கலாமோ இதற்கு நானென்ன செய்வேன் இராசனால்நமக்கென்ன கேடுவிளையுமோநானறிகிலேனே இவர்நமக்குத் துன்பத்தைவிளைப்பாரோ அல்லது யென்னசெய்வாரோ தெரியாது ஆகையால் அவ்விதம் நடவாமுன்னிவனைக் கொன்றுவிடுகிறதே காரணமாகவிருக்கிறது இதுதான்யோசனையென்னசெய்வேன் தெய்வமே.

மந்திரி இராசனுக்குச்சொல்-கலி-இ-ம்-மத்தியமாவதி

சந்தோஷப்பட்டுலங்குநாம்வேட்டை
விந்தையாய்ப்புரிந்தோஞ்சிந்தையிற்றுயரேன்

வ-ம் கேளுமையா மகாராசனே நாம் வனத்திற் சந்தோஷமாய் வேட்டையாடினோம் இப்போதுநீர் மிகவும் விசனமாயிருக்கவேண்டிய காரணமென்ன எனக்குத்தெரியச்சொல்லவேண்டுமையா மகாராசனே

மகாராசன்-மந்திரிக்குச்சொல் வசனம்

கேளாயப்பா தத்துவப்பிரகாச மந்திரி எனக்கொன்றும் வியாகுலமில்லை ஆனபடியினால் தாகவிடாய்தீர்ந்து நாம் இப்போ சர்வகிரியைச்சுற்றி வேடிக்கைபார்த்து வருவோம்வாரும்மந்திரி

மந்திரி-சொல் வசனம்.

அப்படியே அதோ ஒரு விநோதமாகக்கிணறு காணப்படுகிறது அங்கேபோய்சலமுண்டுசாப்பிட்டுச் இவகிரியைச்சுற்றி வேடிக்கைபார்ப்போம் வாரும்மகாராசனே

பொது விருத்தம் இ-ம் இரெகுபதி

நடுக்கங்கள்தீர்ந்தென்று நல்லதண்ணீர் கொண்டுவந்து
கொடுக்கெனமன்னர்க்கீய்ந்து சோகமுங்கணிந்தபின்பு
அடுக்குடன்கிணற்றிற்றள்ளி மூடினான்கல்லினாலே
அடுக்குடன்கிணற்றிற்றள்ளி மூடினான்கல்லினாலே

வ-ம், இந்தப்பிரகாரம்பயந்துநடுநடுங்கிக் கொண்டிருந்த மந்திரியானவன் தன்மனதைத் தேற்றி இராசனுக்கு சலங்கொண்டுவந்து கொடுத்து இராசன் தாகவிடாய்தீர்ந்தபின்பு அவாங்கிருக்குங் கிணற்றையெட்டிப்பார்க்க மந்திரி அரசனை அதிற்பிடித்துத்தள்ளி ஒரு பெரிய பாறையாகிய கல்லையெடுத்து மூடினபோது அரசன்கிணற்றிற்சொல்லுகிறவிதங்காண்க

இராசன்சொல்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்

தாரினில்விழுந்தேனேயோ தெய்வமேகைலைவாழும்
அரகாசிவனே தில்லையம்பலத்தாடுந்தேனே
திரிபுரதகனனெங்குந்திகழ்வியாதனைத்தியாகா
நிருபரேயின்னிடத்தில்நேசமாய்வைத்தாள்வாயே

வ-ம்—அரகாசிவசிவா என்ன செய்வேன் மந்திரிகிணற்றிற் தள்ளிவிட்டானே என்னைப் பாதுகாத்து நின்னிடம் என்னைரட்சியுமையா சுவாமிதிரிபுரதகனா

பொதுவிருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

கல்லினால்மூடிப்போட்டு கடுகெனநடந்தானிப்பால்
வில்விநாயெடுத்துநானேலனுன் வெய்யவேசிவனேயென்று
சொல்லிப்பிக்கொடும்பாவத்தைத் தொலைத்திடவேணுமென்று
கல்லுமாமலையைவிட்டுக்கலங்கியேபுலப்புவானே:

வசனம்.

அதோதெப்படியென்றால் வீரசூரமகாராசனின் மந்திரிகுணற்றிற்ற ன்னினையும் கல்லோடியனையும் பார்த்திருந்த வேதியனைக்கண்டு ஆராகாசிவாவென்று செவியிற்கரத்தைவைத்து இதைப்பார்த்தபாவம் எப்படித்தொலையுமென்று மனதிலெண்ணி புலம்புகிறவிதங்காண்க.

வேதியன்-புலம்புகிற-தரு-இ-ம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயோயிதென்ன விப்பரீதம்-கைலாயநாதா
அநேக்குமோனவழிதத்தோதகம்
பொய்யோவேதாகமம் புராணம்புகலவந்து
புண்ணியவறிவைக் காண்றோ கண்யப்படுவது

சரணங்கள்,

மாதாபிதாகுருதமையன்-மாமன்பெண்டு
மனைவியும்மாநிலத் தரசன்
குகாயிவர்க்கொரு இடுக்குஞ்செய்பவரோமே
சந்திராசன்மேற்பட்டகை மந்திரிபுக்தே லாமோ-ஐயோ
தண்ணீரைப்பார்க்க வந்தானே-அரசனுந்
தன்னிருள் மந்திரிஎன் கோனே
வெண்ணீரணிந்திடு மேகப்பொருளேபொல்லா
னைசெய்கலிகாலக் கொடுமையேமனங்கல்லா-ஐயோ
வையகமுமண்டு தாங்காதி-தீர்த்தங்களு
மாடினாலும்வினைகள் நீங்காது
உய்யுமந்திரியுங்கொல்லவுருதிடானுனென்னகண்டோ
உண்டவர்வீட்டினில் ரெண்டகஞ்செய்வதுண்டோ-ஐயோ

பொதுவிருத்தப்-இ-ம்-தோடி.

சென்றவனன்னாலோன் தீர்த்தயாத்திரையாடவெண்ணி
குன்றிலாரோடுசேனைக் கூடியேநகரைநோக்கி
நன்றிகோடார்தமந்திரி கடத்தினன்துரிதமாக
துன்றிடும்விசையநாரிற் றலங்கிடவ்வேவனுந்தானே.

வசனம்.

அதோதெப்படியென்றால் வேதியனானவர் புலம்பிதாதியாத்திரைக்குப்போனபின்பு மந்திரிவேடர்வில்லியர் சேனைகளையழைத்துக்கொண்டுவிசையநாரில்கொலுவில்வந்துசேர்ந்து சொல்லுகிற விதங்காண்க

மந்திரிசொல்-விருத்தம்-இ-ம்-காம்போதி

மகுடமண்டலீகர்போற்று மண்டபந்தனிலிருக்குந்
தடிமந்திரிமாரேசேனைத் தலைவரேசொல்லக்கேளீர்

செகமகிழிந்நாட்டின் செங்கோனுளவேண்டும
புகழுடனெந்தநாளும் பொருந்தவேயிருந்திடரே

வசனம்.

ஆ-ஆ-கேளுங்கள் மந்திரிப்பிரதானிகளே இந்த விசையநூர் ராசன்புலிபால் மாண்டாராகையால் இந்தச்செங்கோலை நாளுளவேண்டு மினிநீங்களென தாக்கிணைக்குட்பட்டு சாக்கிரதையா யிருங்கள் மந்திரிமார்களே

இரண்டாவது மந்திரிபிரதானிகள்சொல் கல்யாணி

அந்தப்பிரகாரமே தங்களாக்கிணைக்குத்தவறுமல் காத்துக்கொண்டிருக்கிறோம தத்துவப்பிரகாசமந்திரி

பொதுவிருத்தம்-இ-ப்-கண்டா

சென்றநான்மகுடஞ்சூட்டிச் சிறந்தசிம்மாதனத்தில்
மண்டலாதிபன்போல்வந்து மந்திரியரசையாள
வெண்டிசைபுகழும்ராச னின்னமும்வரவேகாணே
னென்றீமேசொர்ணகாந்தி யேங்கியேபுலம்பலுற்றாள்.

வசனம்

அகோதெப்படியென்றால் தத்துவப்பிரகாசமந்திரி வீரசூரமகாராசனுடைய இராச்சியபரிபாலனத்தைத் தான்கைக்கொண்டாளுகையில் வேட்டைக்குப்போன அரசன் இன்னமும்வரக் காணேமென்று சொர்ணகாந்திபுலம்புகிறவிதங்காண்க.

சொர்ணகாந்திபுலம்பல்-கண்ணி-இ-ப்-கண்டா-ஆதிதாளம்.

பல்லவி.

என்ன காரணமோ-என்நாயகர்
இன்னம் காணேனே

அநுபல்லவி.

அன்னமேநானென்ன செய்குவேன் ஐயையோ
அடவிதனிற்சென்ற புடவியாளுநாதன்-என்ன

சரணங்கள்

கட்டியக் காரர்களும்-அரிக்காரர்
காரியக் காரர்களும்
மட்டில்லாசேனை மருவிமந்திரியும்
மகிழ்ந்துவந்தானெந்தன் மகிபனவாராதது-என்ன
பேரிகை பூரிகையும்-எக்காளமும்
பேசுந்துத் தாரிகையும்
காரியர்செய்யு நடனசிங்காதனத்தின்
காதங்கேட்குதேப்ராண நாதன்வராதது-என்ன
மதனமாயிரு பெண்ணே-வனவேட்டைப்
பார்த்துவருவேன் கண்ணே
மதிகலங்கவேண்டா மென்றெனைத்தேற்றிச்சென்ற
மணைனுக்குண்சய பனைனவாராதது-என்ன

பொது இ-ம்-மத்யமாவதி

என்னகாரணங்கடாறோ வென்றுமேசொர்ணகாந்தி
தன்னிடமிக்கைதயிக்கத் தளர்ந்துதானிருக்கும்போது
வண்ணநற்சோலையின்ன பகிழுடன்பணிகள்பூண்டு
சொர்ணகாந்திக்குமுன்பாய் தோழியுந்தோன்றினளே.

வசனம்.

இந்தப்பிரகாரமாய் சொர்ணகாந்திப் புலம்பிக் கொண்டிருக்கும் போது அவாது தோழியாகிய சித்திரவல்லிவருகிற விதங்காண்க.

தோழி-சித்திரவல்லி வருகிற-தரு-இ-ம்-மத்தியமாவதி-ஆதிதாளம்

பல்லவி.

வந்தாளேசித்ரவல்லி-வந்தாளேமெல்லி
வந்தாளேசித்ரவல்லி

அநுபல்லவி

செந்தாமரைமலர்போற் திங்கள்முகமிலங்க
சுந்தரத்தோகையால் சொர்ணகாந்திக்குமுன்பு வந்

சரணங்கள்.

சொன்னப்பணியணிந்து சோலைக்கிளிபோல்மொழிந்து
அன்னநடைநடந்து அணங்குசனமகிழாது வந்
கொங்கைக்குடங்களென்ன குழலவண்டிசைகள்பன்ன
செங்கைவளையலின்ன சித்தஜஜோதியென்ன வந்
சரிகைச்சேலைரவிக்கை தளதளென்றுசொலிக்க
வரிசைதண்டைகொலுசு வனசப்பதமொலிக்க வந்

தோழிசொர்ணகாந்திக்குப் போற்றிவிருத்தம்.

இராகம்-மத்தியமாவதி.

மங்கைலட்சுமியைப்போலும்வனப்புறுமாதேபோற்றி
திங்களைநிகர்த்தமேனித்திகழுமெல்லியரேபோற்றி
எங்களையாளமிக்க வெண்ணிடமரசேபோற்றி
நங்கையேசொர்ணகாந்தி நற்குணவதியேபோற்றி.

வசனம்

சரணஞ்சரணமம்மாதாயே மகாலட்சுமியைப்போல அழகில்மிகுந்த சொர்ணகாந்தித்தாயே

சொர்ணகாந்தி-தோழிக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-மோகனம்

ஆதியாஞ்சித்ரவல்லித்தோகையேசொல்லக்கேளா
யேதுகாரணங்கடாறோவென்னிடநாயகன்றானு
நீதியாய்வரவுங்காணே னிலையொன்றுந்தெரியவில்லை
தாதியேமந்திரிதன்னை தயவுடன்கேட்டுவாடி

வ-ம்-கேளாய்தோழிப்பெண்ணே வேட்டைக்குப்போன மந்திரி ஆனைசேனை பரிவாரமுதலானவர்கள் வந்திருக்க என்னுடைய பிராண

நாயகன் வீரமலிருந்தகாரண மென்னமோ தெரியவாறு ஆகையால் மந்திரியிடத்திற்போய்ச் சீக்கிரமாகக்கேட்டுவாடிதோழி

சொர்ணகாந்தி தோழிக்குச்சொல்- புலம்பல்

கண்ணிகள்—இ-ம்-முகாரி-ஏகதாளம்

| | | |
|---|---|---|
| கேட்டுவாடிசித்ரவல்லி | மந்திரிதன்னை | சகியே |
| இந்நீவுள்ளராசதுரை | யெங்கேயென்று | சகியே |
| வேட்டைக்குப்போவார்கள் | வந்துவிட்டாரே | சகியே |
| வேந்தன்வாராததென்ன | கேளடிபெண் | சகியே |
| பேரிகைமுரசபேள | வாத்தியங்கள் | சகியே |
| பெருக்கமுழங்கக்காணேன் | என்னமோஎன் | சகியே |
| அதிர்ந்திடும்டங்காவங்கா | எக்காளமுஞ் | சகியே |
| அறைபடகாணேனயோ | சித்ரவல்லி | சகியே |
| வலதுகண் துடிக்குதடி | சித்ரவல்லி | சகியே |
| மயங்குதேஎன்மனதில் | சித்ரவல்லி | சகியே |
| செய்யவென்மலர்மாலைக் | கருகுதடி | சகியே |
| சித்தம்வேறுகுதடி | சித்ரவல்லி | சகியே |
| பொல்லாக்கினவுகண்டேன் | சித்ரவல்லி | சகியே |
| புருடன்வரக்காணேன் | சித்ரவல்லி | சகியே |
| என்னகாரணங்களோ | சித்ரவல்லி | சகியே |
| எவ்வகைபுகாணறியேன் | சித்ரவல்லி | சகியே |

தோழி-வசனம்

நல்லதம்மாதாயே அப்படியேநான்போய் மந்திரியைக்கேட்டுவாறேன் பயப்படவேண்டாஞ் சொர்ணகாந்தித்தாயே

பொதுவிருத்தம்-இ-ம்-ஆரபி

கேட்டுவாவென்றுமந்தக் கிளிமொழிசொல்லக்கேட்டு
வாட்டமாய்மனதுவாடி வையகமாளுமன்னர்
காட்டினிலிருப்பதென்ன காரணமறியோமென்று
நாட்டமாய்சபையில்வந்து நற்றோழியுரையுசெய்வாளே

வ-ம்-இந்தப்பிரகாரம் சொர்ணகாந்தி சொன்ன வார்த்தையைக் கேட்டுமனம்வாடி காட்டுக்குப்போனமகாராசன் இன்னம் வாரமலிருந்தகாரணமென்னமோ மந்திரியைக்கேட்போமென்று தோழிசபையில்மந்திரியைக் கேட்கிறவிதங்காண்க

தோழி-வ-ம்-சரணஞ்சரணமையா தத்துவப்பிரகாசயந்திரி

மந்திரிசொல்-வ-ப்-வாருஞ்சித்திரவல்லி நீஇவ்விடம்வந்தவிதமென்ன எனக்குத்தெரியச்சொல்வாய்தோழி

தோழிசொல்-விருத்தம்-இ-ம்-முகாரி

விளம்புவேன்கேளாய்மந்திரி வேட்டைக்குப்போனமன்னன்
தளத்துடன்வாராமற்றான் தனித்தங்கேநின்றதென்ன
இளமுலைசொர்ணகாந்தி யிச்சேதிதெரியவும்மை
வளமெலாங்கேட்கச்சொன்னாள் வழுத்துவீரெனக்குத்தானே

வ-ம்-கேளுமையா தத்துவப்பிரகாசமந்திரி காட்டில்சேனைகளோ டுதனியேவேட்டையாடப்போன மகாராசன் தங்களுடன்கூட வாராம ல் நீர்மாத்திரம் வந்ததென்னவென்று அதை யெங்கள் அரசியாகி யசொர்ணகாந்தியம்மாள் கேட்டுவரச்சொன்னாளையா மந்திரி.

மந்திரிதோழிக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

சொல்லுவேன்கேளாய்நல்ல தோழியேவனத்திற்சென்று
கல்லுமாமலையிலேறிக் கனத்தகோர்வேட்டையாடி
வல்லவீரேந்திரராசன் வனப்புலியடித்துமாண்டான்
எல்லையிற்பலிகொடுத்து என்னுயிர்பிழைத்துவந்தேன்

வ-ம்-சித்ரவல்லியென்னும் தோழிப்பெண்ணே நாங்கள்சர்வகிரி யினுச்சியிற்சென்று வேட்டையாடும்போது நமதரசனைப்புலியடித்து இறந்துவிட்டார் ஆகையால்யான்மாத்திரம் உயிர்தப்பிப்பிழைத்துவந் தேன் பெண்ணேதோழி.

தோழி-சொல்-வசனம்.

ஐயோசிவனே இதென்னகாரணமோ ஒருநாளுமில்லாததிருநா ளாயிருக்குதே இந்தவரிபாயப் எங்கேயாவனுண்டோ குடிகளுக்குப்புண் ணியந்தேடப்போனவிடத்தி லுன்பாவம்வந்து சம்பவித்ததே இனி யென்னசெய்வது ஆனாற்போய் சொல்லுகிறேனமந்திரி

மந்திரிசொல்-வசனம்.

அப்படியே உங்கள்சொர்ணகாந்திக்குச் சொல்லும் பெண்ணே தோழி

தோழிசொல்-விருத்தம்-இ-ம்-கெண்டா

என்னமாய்சொல்வேனையோ விச்சேதியெந்தன்வாயால்
அன்னிதமாகவிந்த வரசனுமாண்டாரென்று
துன்னுமென்சிந்தைமிக்க துடிக்குதேயவளறிந்தால்
பன்னியேயென்னபாடு படுவாளோவறிகிலேனே

வ-ம்-ஆ-ஆ-தெய்வமே அரசனைப்புலியடித்து காட்டில்மாண்டா ரென்றுஎன்வாயால்நானது அரசிக்குஎப்படிசொல்லுவேன் இந்தச்சே திகேட்டஎன்னிடவுடல்மிகவும்நடுங்குதே அவள்கேட்டால்என்னபா டுபடுவாளோ நானொன்றும் அறிகிலேனே தெய்வமே

பொது-வசனம்.

இந்தப்பிரகாரம் சித்திரவல்லித்தோழிபர்ன்வள் விசனமுற்றஇந்தசேதியை எப்படிச்சொல்லுவதென்றஞ்சி சொர்னகாந்தியிடத்தில் வந்துசுமமா நின்றுக்கொண்டிருக்க சொர்னகாந்தி தோழியைக் கேட்கிறவிதங்காண்க

சொர்னகாந்திசொல்-விருத்தம்-இ-ப்-தோடி

நின்றதோர்தாதியேகேள் நிஃழ்சபைதன்னைநோக்கி
சென்றதோர்சேதியென்ன செவ்வையாய்முற்றநீயு
நன்றாகவிளங்கவிப்போ நானறிந்திடவுமேதான்
ஒன்றேனுமொளித்திடாமல் உண்மையாயோதுவாயே

வ-ம்-கேளுந்தோழிப்பெண்ணே என்முன்னே தயரத்தோடுசும்மாய்வணங்கி நின்றுக்கொண்டிருப்பதென்ன மந்திரியிடத்திற்போனசங்கதிகளை ஒளியாமல்உண்மையாய் எனக்குத்தெரியச்சொல்லுவாய் தோழிசித்திரவல்லி

தோழிசொல்-விருத்தம்-இ-ம்-கண்டா

உரைக்கநாவெழுமோவம்மா உத்தமிவுந்தவார்த்தை
கரத்தில்விற்பிடித்தமன்னன் காட்டினில்வேட்டையாட
துரத்தினில்வேங்கைகொல்லத் துடித்துயிர்மாண்டாரென்று
வருத்தமாயெர்தனோடு மந்திரிசொன்னாரம்மா

வ-ம்-கேளுமம்மா சொர்னகாந்தித்தாயேநான்என்னென்றுசொல்லுவேன் சொல்லவேனுமென்றால்நாவும்வரயில்லையே ஆகிலுந்தைரியத்துடன் கேளுஞ்சொல்லுகிறேன்காட்டில்வேட்டையாடப்போனவரசன்புலியடித்து மாண்டாரென்றுவருத்தத்தோடு மந்திரிசொன்னாரம்மா சொர்னகாந்தித்தாயே

சொர்னகாந்திசொல்-வசனம்.

ஆ-ஆ-ஐயையோஎன் பிராணநாதன் புலியால் மாண்டாரா நான் என்னசெய்வேன் இந்தமந்திரிவந்தவன் எனக்கு ஒருவார்த்தைசொல்லவந்தானோதோழி

தோழிசொல்- வசனம்.

கேளுமம்மாதாயேமந்திரி என்னமோ மோசஞ்செய்தாப்போற்காண்கிறதுயில்லாவிடில் வந்தவனெனக்குச் சொல்லாமலிருந்தகாரணமென்ன இதுமந்திரிசெய்த சூதுதானம்மா சொர்னகாந்தித்தாயே.

பொது-விருத்தம்-இ-ப்-சாவேரி.

சொன்னதோர்வார்த்தைகேட்ட தோகையும்புவியில்வீழ்ந்து
என்னிடவிதிவசந்தா னிப்படியாச்சோவென்று

கன்னியுமனதுவாடக் கணவனூர் தன்னைநெஞ்சி
லுன்னிமூர்ச்சையாகி யுடல்மெலிந்திடவுஞ்சொன்னாள்

வ-ப-இந்தப்பிரகாரம் தோழிசொன்னவார்த்தையைக் கேட்ட சொர்ணகாந்தியம்மனானவள் பூமியில்சரசரவென்றுபுரண்டு என்விதி இப்படிக்காச்சோவென்றுகண்ணீராறாய்ப்பெருக அழுதுகணவனை நினைத்து மூர்ச்சையாகி ஒருமுகூர்த்தகாலமிருந்து சொல்லுகிற விதங் காண்க

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-முகாரி.

விதிவசபலித்ததையோ விடையிசையேறுநாதா
பதிதனைதாங்குமிந்தப் பாரினில்வாழ்கலாமோ
பதியிலாயிரவைப்போலு மனத்திலிலுண்டாச்சோ
துதிபெறுமெந்தன்வீர துரையைநானினிக்காண்பேனோ

வ-ம்-ஐயோவிதிவசமே எனக்குத்தானாவரவேண்டும் எனதுபுருடனைப்பறிகொடுத்து காணிப்பூமியில்வாழ்வலாமா இந்த இராச்சியத்தில் அவரில்லாதது சந்திரனில்லாத இராத்திரியைப்போலாகிவிட்டதே என் ஆசைக்கிசைந்தமணவாளனை என்றைக்கு காண்பேனையோதெய்வமே

சொர்ணகாந்திசொல்-புலம்பல்-கண்ணிகள்-இ-ம்.

நாடிழந்துமென்னைகிழந்தேன் — காஞ்சிநாதா,ஒரு
சோடிழந்தகிளிபோலானேனே — காஞ்சிநாதா
மன்மதனையென்மணவாளனைக் — காஞ்சிநாதா-பொல்லா
கணமவிதிவசத்தாலிழந்தேன் — காஞ்சிநாதா
மாநிலம்புகழ்மன்னனையிழந்தும் — காஞ்சிநாதா-இப்போ
தேனிலீயைப்போற்றயங்குகிறேனே — காஞ்சிநாதா
மந்திரியுலகத்தையாளவைத்தாய் — காஞ்சிநாதா-என்
சொந்தக்கணவனைவானுளவைத்தாய் — காஞ்சிநாதா
பாரினிற்பரதேசிபோலாக்கினாய் — காஞ்சிநாதா-இரு
ஊரிலெனக்குற்றதுணையார் — காஞ்சிநாதா
தப்பிதம்செய்மந்திரிதன்யனாகினான் — காஞ்சிநாதா-ஐயோ
குப்பையுயர்ந்துகோபுரந்தாழ்ந்ததே — காஞ்சிநாதா
ஆருமற்றபாவியாகினேனே — காஞ்சிநாதா-இனி
சீருமென்செல்வமும்பேணின்னமும் — காஞ்சிநாதா
மஞ்சளிழந்தேன்வளையலிழந்தேன் — காஞ்சிநாதா-நல்ல
பஞ்சணைதானுமிழந்தேனையோ — காஞ்சிநாதா
குங்குமமுமலர்த்தாரிழந்தேன் — காஞ்சிநாதா-எந்தன்
மங்கிலியமுமிழந்தேனையோ — காஞ்சிநாதா
கந்தபரிமளவாசமிழந்தேனா — காஞ்சிநாதா-இது
வந்தனசெயலோவுளவரியேன் — காஞ்சிநாதா

பொதுவிருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

கொந்தளகங்குலைந்துவிழமணிகள்சிந்த
குளிர்ந்தமதிமுகஞ்சோரமேனிகுன்ற
சிந்தையதின்னுதலில்வியர்வையாட
திரந்தரசனிருந்தபொற்சிம்மாதனத்தை
வந்துலந்துபார்த்துமனந்தியங்கிவாடி
வந்தமண்டபஞ்சென்றுமன்னுவென்பால்
பந்துமுலைதனிலறைந்துமெலிந்துநொந்து
பகருகின்றாள்கண்கள்நீர்சொரிகின்றாளே

வ-ம்-இந்தப்பிரகாரம் சொர்ணகாந்தியானவள் தலைமயிரவிழ்ந்து பூமியில்விழுந்துபுரண்டழுதும் அரசன்சிம்மாதனத்தின் கோரகவந்து மன்னவாவென்றுகூப்பிமார்பிலறைந்தும் இன்னமும்புலம்புகிறவிதங் காண்க

சொர்ணகாந்தி-புலம்பல்-கண்ணிகள்.

இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

என்னசெய்வேனையோஎங்குத்தி காந்திநாதா-இனி
இப்படியுஞ்செய்யலாமோதிரு காந்திநாதா

காம்போதி-அடதாளம்

வஞ்சகஞ்செய்மந்திரிவார்த்தைகேட்டு பிராணநாயகா-நீர்
வனத்தினில்வாணாள்மாய்ந்திட்டாயோ பிராணநாயகா
அஞ்சவேண்டாமென்றுசொல்லுவார் பிராணநாயகா-யான்
ஆறுமற்றபாவியாகினேனே பிராணநாயகா
விதிவசமிப்படிவிளைந்ததோவென் பிராணநாயகா-உந்தன்
விகசிதவதனத்தையென்றுகாண்பேன் பிராணநாயகா
சுதனில்லையென்றுசெந்தூழுதவஞ்செய்தீர் மன்னவா-உயர்
சுதனுண்டானவுடன்சொற்கத்திற்சேர்ந்தீரோ மன்னவா
உனைவிட்டுப்பிரிந்திலெனைநீரிங்காளினில் மன்னவா-இப்போ
ஒண்டியாகவிட்டுப்போகலாமோவெந்தன் மன்னவா
மனையிலிருவேட்டையாடிவாரேனென்றீர் மன்னவா-நீரும்
வனவேட்டையாடப்போய்மாண்டீரோவெந்தன் மன்னவா
கலையைப்பிரிந்தமான்போலுமாகினேனினி மன்னவா-வந்தென்
கருத்தைத்திருத்தி அஞ்சாதேபெண்ணேயென்பாய் மன்னவா
மலையில்வாழ்வேங்கைக்குவஞ்சமுண்டோவெந்தன் மன்னவா-சொல்
மலாயனெழுதினவன்மையிதாரோ மன்னவா

அரசன்மனைவியென்றவாணையும்போச்சுதே காஞ்சிநாதா-எந்தன்
பரவசமெல்லாம்பாழாச்சுதையோ காஞ்சிநாதா
மந்திரிஎன்னவகைசெய்வானோ காஞ்சிநாதா-பொல்லா
எந்தனைப்போற்பாவியெங்குமுண்டோ காஞ்சிநாதா
காணச்சென்றவென் கணவன் வந்தால் காஞ்சிநாதா-உமக்கு
ஊனமிலாமணிமேடைகட்டிவைப்பேன் காஞ்சிநாதா
நீரதெய்வமல்லால்வேறுமுண்டோ காஞ்சிநாதா-இதோ
வாறேனின்கோவில்வலமாகவும் காஞ்சிநாதா
காப்பதுன்பாரங்கடைக்கண்ணால்பார் காஞ்சிநாதா-கையைக்
கூப்பினேனின்பாதங்கோதிலாமற் காஞ்சிநாதா

சொர்னகாந்திக்கு தோழி சொல்-விருத்தம்-சுருட்டி.

அழுதுநீலாடினந்தா டைவியிலிறந்துபோன
தொழுநரும்வருவாரோதான் கோதையேசொல்லக்கேளாய்
பழுதுசெய்மந்திரிமோசம் பண்ணினானஞ்சவேண்டாம்
தொழுதிடாய்கடவுள்பாதந் துன்பமும்நீங்குமம்மா.

வ-ம். கேளாயம்மா சொர்னகாந்தி காட்டிலிறந்துபோனகணவனார் இனிமறுபடியும் வருவதுண்டோ பாவியாகிய மந்திரிமோசம்பண்ணினானகையால் இதற்குபயப்படலாமா சுவாமியைத் துதிசெய்தால் உன் னுடையதுன்பநீங்குந்தாயே.

சொர்னகாந்தி-தோழிக்குச்சொல்-புலம்பல்.

கண்ணிகள்-இம்-கெண்டா-ஆதிதாளம்.

பாங்கிமாரேயென்னசெய்வேன் பாங்கிமாரே-இப்போ
பதறுதேயென்றேகமெல்லாந் தோழிமாரே
ஓங்குமனமெழுகதுபோல் பாங்கிமாரே-என்றன்
உளமுனைக்க உருகுதடி தோழிமாரே
நாதிமாரேயென்னசெய்வேன் பாங்கிமாரே-மனது
சகிக்கமுடியவில்லைத் தோழிமாரே
பூவலம்புகழ்நரேந்திரன் பாங்கிமாரே-என்னை
புலம்பவிட்டேகினாரே தோழிமாரே
மன்னர்புகழ்வீரேந்திரன் பாங்கிமாரே-என்னை
மதிமோசஞ்செய்தாரையோ தோழிமாரே
என்னமாய்மனஞ்சகிப்பேன் பாங்கிமாரே-இப்போ
தென்னுயிரிழந்திடுவேன் தோழிமாரே
பாண்டுமடிந்தாலல்லாற் பாங்கிமாரே-எந்தன்
மனதிற்றுக்கமாறாது தோழிமாரே

புண்ணிற்கோலிட்டாப்போல் பாங்கிமாரே-நல்ல
புத்திமயங்குதடி தோழிமாரே
கண்ணிற்றிருமுகத்தைப் பாங்கிமாரே-நான்
காண்பதென்றுசொல்லுங்கடி. தோழிமாரே

தோழிசொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

சஞ்சலம்வேண்டாமம்மா சதுர்முகனருமன்று
வஞ்சகமுஞ்செய்தார்நீ வாடினாற்பலனுமுண்டோ
நெஞ்சினிற்றுயரமெல்லா நீக்கியேகடவுள்பாதம
தஞ்சமென்றெண்ணிநீயுஞ் சதிருடன்றுதிசெய்வாயே.

வ-ம். கேளுமம்மா எங்கட்காசியாகிய ராசபத்தினி நீமனதிற்சஞ்சலப்படவேண்டாம் அன்றுபிரமதேவன் வஞ்சமாயெழுதினார்போலக்காணப்படுகின்றது அதையால்நீவிசனப்படாமற் கடவுளைத் துதிசெய்துக்கொண்டிருப்பாய் சொர்ணகாந்தித்தாயே.

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-முகாரி.

தேறியேயிருப்பாயென்று கேடியேயுரைத்தாய்துக்க
மாறுவதில்லையையோ வன்னிதமாகக்காட்டில்
கூறியபுலியாலெந்தன் கொற்றவனமடிந்தபோது
வேறினிக்குண்டோமண்மேல் விளம்பிடாய்சித்திரவல்லி.

வ-ம். அடிதோழி சித்திரவல்லி என்னைத் தேற்றும்படி வகைசொல்லுகிறாய் பூட்டிவவ்விதமாய் புலியால் மாண்டகணவனை நினைத்துக்கொண்டால் என்விசனந்தீரவில்லையே இந்தவுலகத்திலெனக்கு அவரைப்போலவேறு துணையுமுண்டோ நான்என்ன செய்வேனடிதோழி.

பொது-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வடிவுகொள்சொர்ணகாந்தி வயிற்றினிலன்குமாரம்
குடிகொள்ளலாயிருந்து குணமானசேதிகேட்டு
மட்டமயில்நடையாளைநல்ல மைந்தனைப்பெருவாளென்று
துடியுடனவளைக்கொல்லத் துட்டமந்திரிநினைத்தான்.

வ-ம். அகோதப்படியென்றால்சித்திரவல்லியெனுந்தோழியோடுபுலம்பிக்கொண்டிருக்குஞ் சொர்ணகாந்திக்கு வயிற்றில் நன்குமாரன்கெர்ப்பமென்றறிந்து மந்திரியானவன் இவள் வயிற்றில் புத்திரனுண்டானால்பட்டத்திற்கு வருவானென்கிற ஞாபகங்கொண்டு சொர்ணகாந்தியைக்கொல்லநினைந்தவிதங்காண்க.

மந்திரிகாவற்காரருக்குச்சொல்-விருத்தம்-இ-ம் காம்போதி.

மனைக்குநேரிழையாவாழும்வாசலைக்காக்கின்ற
சனங்களேகேளீர்மிக்கச்சதுருள்ளவாசன்தேவி

தனித்திருக்கின்றதாலே சற்பனையாதவாளால்
மூனைந்துமேகொரவீமரன்றன் மொழிதவறுமற்றனே.

வ-ம். கேளுங்கள் சொர்ணகாந்தியின் வாசலைக்காக்கும் காவலாளிகளே நமராசனுடையதேவி தனித்திருக்கின்றசமயத்தில் நீங்கள் சூதுசெய்து உங்களுடையவாளாலே வெட்டிப்போடுங்கள் காவலாளிகளே.

காவலாளிகள சொல்வசனம்.

அப்படியேவெட்டிப்போடுகிறோமையா சுவாமி

மந்திரிசொல் வசனம்.

ஆளற்சமயம்பார்த்து சீக்கிரமாய்வெட்டிப்போடுங்கள்பிள்ளாய்.
சொன்னாரேமந்திரிபொல்லாத் துன்பத்திற்காளாகத்தான்
என்னபாதகங்களையோ டெப்படிக்கொல்வோம்நாமுந்
துன்னியவீரசூர துரையுமேமாண்டதாலே
கன்னியைவெட்டலாச்சுக் கருத்தாய்த்தப்புவிப்போம்வாராய்.

வ-ம் ஆ-ஆ தெய்வமேமந்திரி நமதரசியை வெட்டச்சொன்னானல்லவா ஆகிலும்நமதரசியைநாம்வெட்ட மனம்வருமா ஐயையோநமதரசனிறந்தல்லவோ அந்தம்மாளுக்கிவ்விதிவந்தது ஆகிலும்நாம் வெட்டக்கூடாது இந்தச்சங்கதியை சித்திரவல்லியென்னுந் தோழிக்குச்சொல்லித்தப்புவிக்கவேண்டுங் காவலாளிகளே.

காவலாளிகள் தோழிக்குச்சொல்விருத்தம்-இ-ம்-ராகம்.

தோழியேசித்திரவல்லித் தோகையேசொல்லக்கேளாய்
வாழ்சூழுலகிலிந்த வனியாயந்தானுமுண்டோ
பாழும்மந்திரியும்ராசன் பவையைக்கொல்லவேண்டி
யூழிபோலவனுமெங்கட் குரைத்திட்டானீபோய்ச்சொல்வாய்.

வ-ம. கேளுஞ் சித்திரவல்லித்தோழி இப்போக்கொத்தவனியாயம் எந்தவுலகிலுங்காணகண்டதில்லை நானசொல்லவென்றுநினைத்தால்கைகால்நடுக்குதுவாய்குளறுதே என்னசெய்வோம் நம்முடைய வரசன்றேவியைவெட்டச்சொல்லி எங்களுக்குத்தாவுசெய்தான் ஆகையால் நீபோய் சொர்ணகாந்தியம்மாளுக்குச் சொல்லுமம்மாதோழி.

தோழிசொல் வசனம்.

அப்படியேசொல்லுகிறேனப்பா காவலாளிகளே

தோழிபுலம்பல்-தரு-இ-ம்-தோடி-அடதாளம்

பல்லவி.

இனியென்னசெய்வ தையோவிதிவசம்
இப்படியாச்சு தையோ

அநுபல்லவி.

அனியாயந்தானுண்டோ, அவனியில்இந்தவிதி-இனி
அரசன்தேவியைக்கொல்ல வாளனுப்பினாபர்

சரணங்கள்.

சதியெனுஞ் செந்தேனேபாவிமந்திரி
குறிக்கத் துணிந்தானே
பேண்கமாண்டக்கொல்லப் பாதகமினைத்தானே-இனி

போங்கால மிதநானேபாரிலிவன்
புழிகாகி இங்கிவானே
சாடகாலமுங்கிட்ட சம்பவித்துதைபோ
சற்பனைநினைத்தானே கெற்பவதியைக்கொல்ல-இனி

புருஷனில்லாப் பெண்ணுமேபாழுமிந்த
புவியிலிருக்க லாமோ
பெருமைசொர்ணகாந்திப் பெண்ணைக்கொல்லமனதிற்
பேதகநினைந்தானே குதகனுகியபாவி-இனி

தோழிசொல் வசனம்

சரணஞ்சரணமம்மா சொர்ணகாந்தித்தாயே

சொர்ணகாந்திசொல் வசனம்

வாரும்பெண்ணே தோழிசித்திரவல்லி.ஏது உன்னுடைய முகம் வாடி முன்னிருந்தவயாதிற்கு மேலாயிருக்கிறது ஆகையாலே என க்குத் தெரியச்சொல்லடி பெண்ணேதோழி,

தோழிசொல்-விருத்தம்—இ-ம்-எதுகுலகாம்போதி

என்னென்றுசொல்வேனம்மா வெஞ்ஞிலக்காரணங்கள்
சின்னமாய்விளைந்துதென்று செப்புவதுண்டோதாயே
வன்னமாமுலேயினுளே மந்திரியுன்னைக்கூட்ட
மின்னடியாய்க்கொல்லவேதான் பேதகநினைந்திட்டானே

வ-ம் நானென்னென்றுசொல்வேனம்மாஉன் னுடைய விதிவசம் அந்தப்பாவியாகியமந்திரி உன்புருஷனைச்சூதினுற்கொன்றது மல்லாம ல் உன்னையுங்கொல்லவிணைந்துகாவலாளிகளையனுப்பியிருக்கிறுன் அவ ர்களும் மனந்தாளாமல் உமக்குப் போய்ச்சொல்லச் சொன்னுர் சொர்ணகாந்தித்தாயே

சொர்ணகாந்தி சொல்-விருத்தம் - இ-ம்-முகாரி

இடியிடித்ததுபோலெந்த னிறைவன்மாகுருக்கள்நானும்
படிமிசைவிழுந்தவரடிப் பதறியேயழுகுடிபோது
கடிமனதுடையபொல்லாக் கன்மியாம்பாவிமந்திரி
துடியுடனென்னைக்கொல்லத் துட்டனுநினைத்திட்டானே

வ-ம் ஐயையோதெய்வமே•என்மணவாளனிறந்த சங்கதியைக்கே ட்டு நான்விசாரபாயமுதக்•கொண்டிருக்கும்போதுபொல்லாத துஷ்

டமூந்திரி என்புருஷனைக்கொன்றது நல்லதமற் றெற்பவதியென்று சற்றும்மனமிரக்காமலென்னையுங்கொல்ல நினைத்தானல்லவா. ஆ-ஆ-ஆ-தெய்வமே.

சொர்ணகாந்தி-புலம்பல்-கண்ணிகள்-இ-ம்- ஆகிரிதாளம்

என்னசெய்வேன் காஞ்சிராதா
இதற்கோநான் பெண்பிறந்தேன்
வஞ்னமதில்சூழ்விசைய
மானகரைத்தானுமாண்ட
மன்னவனைப்பலிகொடுத்து
வருந்தியவேளைதன்னில்
என்னுயிரையாய்க்கவென்று
எழுகிறானேபிர்மதவன்
சற்பனையாய்மன்னவனைச்
சதிசெய்துகொன்றபாவி
இப்போதுமனந்துணிந்து
என்னைக்கொல்லநினைந்தானே
தப்பிவிடுவேனோஇனி
சங்கரிக்கும்போடுவானோ
கெற்பத்தினைமடிந்தால்
கிடைக்குமோசெய்தாலும்

பொதுவிருத்தம்-இ-ம் எதுகுலகாம்போதி

சுந்திரவீரசூர தூரந்தரனரசையாளும்
மந்திரிசொல்வாளென்று மாநகர்தன்னைவிட்டு
இந்துசேர்வதனமின்னு ளேங்கியேமனங்கலங்கி
மந்தமாமிருகங்கள்வாழு மடவியில்வருகின்றாளே

வ-ம் அகோதெப்படியென்றால் விசையங்காருகின்ற வீரசூரமகாராசன் மனைவியாகிய சொர்ணகாந்தியானவள் மந்திரி கொல்வானென்றறிந்து தன்னகரைவிட்டு புலம்பிக்கொண்டு இரவில் மிருகங்கள்வாழும் அடவியில்தனித்துவருகிறவிதங்காண்க

சொர்ணகாந்திபுலம்பல்—கண்ணிகள்-இ-ம்
எதுகுலகாம்போதி—ஆதிதாளம்

அந்தமாய்காட்டிலாருமற்றபாவிபோ
லலையவிட்டாயேபாழுந் தெய்வமே
பட்டணம்விட்டுமென்னைப் பரதவிக்கவிட்டாயோ
பாவிபெற்றனைப்பாழுந் தெய்வமே

திக்கும்வேறில்லையோ திகைக்கிறேனே காட்டில்
திவிரமாய்வருவாய் மன்னவனே
ஆனைசேனைகளுங் கன்னைத்தகையும்நீர்விட்டு
அலைகிறீரோ தனித்து மன்னவனே

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

ஆரணங்களடர்வனத்தில ஆதரவில்லாமல்
வீரகுமாரனை நினைந்து விம்மியழுதேங்கிசெல்ல
பூரணமாய்கீழ்த்திசையிற்பொங்கதிருதித்தபின்பு
பாரவனங்கடந்துமதிசந்த்ரகிரியும்வந்தாள.

பொது-வசனம்

அகோ தெப்படியென்றால் சொர்ணகாந்தியம்மனுனவள் வீரகுமாரராஜனை நினைந்துக்கொண்டு காடெல்லாந் தாண்டி சூரியோதயகாலையில் சந்திரகிரிபட்டணத்திற்சேர்ந்து சொல்லுகிற விதங்காண்க.

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-செண்டா

இன்னகர்தன்னிலேபோ எப்படிபிழைப்பேன்பாவி
பின்னொருவரையுங்காணேன் பேதையுங்கெல்லுகுத்தித்
துன்னியவிரகுவிற்றுந்தலைத்திடவேண்டுமானே
என்னதான்செய்வேன்கச்சியேகம்பாநின்றாட்போற்றி

வ-ம் ஆ-ஆ-ஆ-தெய்வமே இந்தச்சந்திரகிரிபட்டணத்தில் எனது சாண்வயிற்றைவளர்க்க வெனனவேலைசெய்தால் சீவனஞ்செய்யலாம் கெல்லுகுத்தி யுண்ணவுந்தெரியாதே விரகுவிற்றுசீவனஞ்செய்து நாளைப்போக்குவதேசரி பின்னை என்னவேலை எனக்கு தெரியுமையா தெய்வமேகாஞ்சிநாதா

சொர்ணகாந்திபுலம்பல் கண்ணிகள்-இராகம்
புன்னாகவராளி-அடதாளசாப்பு

அர்சுனாடமிழுந்துவர்னையுமிழந்தே ஈஸ்வரா-இந்தக்
கசிலைகாட்டிற்கையால்விறகொடிக்கவிதியோ ஈஸ்வரா
அருகுதும்பையணிமாலையணிந்திடும் ஈஸ்வரா-இப்படி
விரகுசுமக்கத்தலைவிதிவசமோகாஞ்சி ஈஸ்வரா
பிறர்நகரில்வந்துபிச்சைக்காரியைப்போல் ஈஸ்வரா-தலையில்
விறகுசுமக்கவும்விதிவசம்வந்ததோ ஈஸ்வரா

காலைக்கொடுமையோதன்மவசமோகாஞ்சி ஈஸ்வரா—பிரமா
கூலிக்குளடுக்கருதித்தானோசென்னியில் ஈஸ்வரா
கல்லாழியுந்திவ்யகடகமணிநகையால் ஈஸ்வரா—இப்போ
செல்விரகைப்பொடிக்கவைத்தாயோஎன்னை ஈஸ்வரா
ராசாராசாக்களுமெய்க்கவேவாழ்ந்தேனே ஈஸ்வரா—எந்தன்
வேஷமாகிப்பொல்லாவிறகுவிற்கலானேன் ஈஸ்வரா

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

விறகுபோகுமிவீதிகடோறும்வந்தேன்
தறையினில்வாழும்பெண்கடான்விலைகேட்பார்காணேன்
இறையவன்செய்கைதானோவென அதிவினைகடானோ
கரையுறுங்கண்டனுரே கடவுளேகலங்கிறேனே

ல-ம் ஆ-அ-தெய்வமே காஞ்சிபுரநகர் யான் இந்த வீதிகளெல்லாம் விறகுவிற்றும் விலைகேட்பவரையுங்காண்கிலேனே தெய்வமே

சொர்ணகாந்தி-விறகுவிற்குந்தரு

இ-ம்-சாமரா-அடதாளம்

பல்லவி

விறகு விறகு

அநுபல்லவி

விறகுவாங்கலையோ அம்மா விறகு

சரணங்கள்

புங்கம்விறகுபுளியம்விறகு
விறகுவாங்கலையோ அம்மா விறகு

அக்கிவிறகு ஆலம்விறகு
விறகுவாங்கலையோ அம்மா விறகு

அரசம்விறகு அச்சாவிறகு
விறகுவாங்கலையோ அம்மா விறகு

காரைவிறகுகள்ளிவிறகு
விறகுவாங்கலையோ அம்மா விறகு

சொர்ணகாந்திசொல்-வசனம்

ஐயையோ இந்தத்தெருவீதியெல்லாம் விலைகூறிவந்தும் ஒருத்தராவது இந்தவிறகுச்சுமையைவாங்கிக் கொள்ளும்படியாய் கேட்கவில்லையே சிவனே

சொர்ணகாந்தி-புலம்பல்-கண்ணிகள்-இ-ம்-கெந்டா-ஆடதாளம்.

சிவனே விதிவசமே என்ன
தீவினை செய்தேனோ பாதகிநான்
பரமனே எனையீன்ற தாயின்
பாலிக்குடல் செய்தவினையோ
வாழ்ந்தேன் சிலகாலம் இந்த
வையகமெல்லாம் நான் பேரும் பெற்றேன்
தாழ்ந்தேன் பிறகுயிற்க வில
தானமிந்துகொள்வாராருமில்லை
சொர்ணப்பணியணிந்தேன் இப்போ
சேலை நிறத்துகிலுமில்லை நைந்தேன்
கர்ணக்குடையணிந்தேன் நான்
கஞ்சிதண்ணீர்க்கு மயின்றலைந்தேன்
மருவுமலரணிந்தேன் நல்ல
வாசங்கொண்டொழிந்து சுகங்கொண்டேன்
பச்சைசமிறந்துவோ பெரும்
பாரமலைபோலிருக்குதையோ
உச்சிவெறியுதையோ எந்தன்
உள்ளங்கால் கொப்பளங்கொள்ளுதையோ
தலையில் பிறகொடுக்க விதி
தானெழுதிபாவி விட்டானே
கலையுமழுவேத்தும் எந்தன்
கர்த்தனே தீவினை கண்டாயோ

பொது-விருத்தம்-இ-ம்-தோடி

இந்தநேர்வதனமாது மிவ்விதப்புலம்பும்போது
அந்தணன்னகரின்வாழு மதிசந்திரகிரியின்மன்னன்
சுந்தரவாசர்கார்க்குஞ் சகுணமாந்திரவீரன்
கந்தமாமலர்த்தார்பூண்ட கட்டியக்காரன்வந்தான்

வ-ம் அதுகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் சொர்ணகாந்தியம்மனானவள் சந்திரகிரிவீதியிலதலையில் விருசுமையோடு புலம்பிக்கொண்டிருக்கும்போது அந்தநகரமாளுஞ்சந்திரகிரிராசன்வாசற்காக்குங்கட்டியக்காரன் கொலுவிற்கு வருகிறவிதங்காண்க.

கட்டியக்காரன்-வருகிற-தரு-இ-ம்-தோடி- ஆதிதாளம்

மாசிலாதசந்திரகிரிமகாராசன்வாசல்
வாழுங்கட்டியக்காரன்வந்தான்
தேசதேசாசாதிராசர் துதிதிரளைப்
பொருளோர்புகழும் — மாசி

சிகைபிற்பதித்தகொண்டையாட — சுற்றும்
சிறகுழித்துவண்டோடுங்கூட
நகைசேர்பச்சைவச்சிரீட — மிகப்ரகாச
நன்மலர்மாலைசூட
வகையாயப்புசகிருதிவழங்க — வெள்ளிதட்டியும்
வாள்சமுதாடுகத்திவரிசைப் — பட்டையங்களும்
வலிபெறக்கட்டிப் — பலியெனக்கெட்டி
வலதுகைகட்டிப் — பொலிவுடன்கிட்டி
வடிவுகொள்சிங்கமென — மீசைமுறுக்கிப்
படிமிசைபாம்பைகைவரகத்தை — புருக்கி-மாசி.

கட்டியக்காரன்சொல்-பொதுவிருத்தம்-இ-ம்-கல்யாணி

துஷ்டரையடக்கும்வேந்தன் தொல்புவிமதிருந்நீலன்
மட்டில்லாப்புகழ்பெற்றோங்குமகாராசதிரவீரன்
நட்டணைபரிகள்சேனைநன்குருமமைச்ச ருஞ்
சட்டமாய்சபையிற்சந்திரகிரிராசன்வருகின்றானே

வ-ம் அகோதெப்படியென்றால் இராசாதிராஜன் ராசமார்த்தாண்டன்ராசகெம்பீரன் ரசவுத்தண்டன்ராசபரமேஸ்பரனாகிய சந்திரகிரி மகாராசன் மந்திரிபிரதானிகள்புடைசூழ கொலுவிற்கு வருகிறவிதங் காண்க.

இ-ம்-கல்யாணி- ஆதிதாளம்

பல்லவி

சந்திரகிரிராசன்வந்தான் கொலுவிருக்க

அநுபல்லவி

மந்திரிகளுஞ்சேனைமன்னர்கள்புடைசூழ
மாசிலாநவரத்னகசுருஞ்சைவாழ — சந்திர

சரணங்கள்

மகுடமுடியுமின்ன — அணிநவ
மாணிக்கபதக்கங்களின்ன
தருமமறைபுவர்மறைபன்ன — சூழ்ந்திருக்கும்
மந்திரிமார்புகழென்ன
செகதலத்துதிப்புரிதிமனேன்மாலை
செழிக்கவுந்தரித்துச்செங்கையினிற்செங்கோலை

புகழுடன்ருனேந்திபொங்கமுடனேதீர
போரின்வல்லமென்னப்புறப்பட்டொனிவால்வீர

கட்டியக்காரன்சொல்-வசனம்.

கேளுங்கள் சபையோர்களே இராசாதிராசன் ராசமார்த்தாண்டன் ராசவுந்தண்டராசபரமேஸ்வரரான சந்திரமகாராசன்கொலுவில் வந்திருக்கின்றார் சந்தடிசெய்யாதிருங்கள்ஜனங்களே

இராசன்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

சீர்பெருங்கயிலைவாழுந் திகழ்கணபதியேபோற்றி
ஏர்தருமயின்மீதேறு மெந்தன்வேலவனேபோற்றி
பாரினிற்புகழ்பெற்றோங்கும் பசுபதிநின்றாட்போற்றி
தாரணிகுழலாளான கௌரியேபோற்றிபோற்றி

முதல்மந்திரி-போற்றிகவி-இ-ம்-ரெகுபதி

இன்னகர்தன்னையெழிற்பெறவேண்ட
மன்னனேயுமதுமலரடிபோற்றி

இரண்டாவது-மந்திரிசொல்-கவி-இ-ம்-ரெகுபதி.

வேதியபூசைவிருப்பமாச்செய்யும்
மோதனமேயுமதுபொன்னடிபோற்றி

இராசன் தேசவிசாரணை

இராசன் இப்புவியிலுள்ளவர்கள் மன்னர்மண்டலீகர்முத
விடை லெவர்களுஞ்சுபட்சேமமா
மந்திரி இறைவனேவுமதுவெண்ணத்திறைப்புவிக
விடை ளெங்குஞ்சுபட்சேமமே
இராசன் தப்பிதஞ்செய்திடுங்கொலைப்பாதகர்க்குநற்
விடை றண்டனைநடக்குதுவருதா
மந்திரி தார்வேந்தனேயுமதுதண்டனைநள்ப்போதுந்
விடை தவறுமாநடக்குதையா
இராசன் செப்பமுடன்மன்னவர்களும்பகுதிப்பணமுற்றுஞ்
விடை செலுத்திவருகின்றார்களா
மந்திரி ஜெகதலம்புகழ்வீரசிங்கமேபகுதிகள்
விடை செலுத்திவாரரையனே
இராசன் வைப்புகளிலேதாவததிசயமிருந்தியால்
விடை வண்மையுடனேநடக்குதா
மந்திரி வகையுடன்விரகுதலைகொண்டொருவர்விற்கிறுள்
விடை. வனத்திலிற்கிளிபோலவே

இராசன் வசனம்,

ஆஆஆ மந்திரிபிரதானிகளே அப்பேர்க்கொத்தஅழகுடையபெண்ணும்நம்முடைய பட்டணத்தின் வீதியில் விறகுவிற்கின்றாளாம் ஆச்சரியமாகவிருக்கின்றது ஆதலால் அவளை இவ்விடம் அழைத்துவாச்சொல்லுங்கள்பார்ப்போம் மந்திரிமார்களே

மந்திரிசொல்-வசனம்.

அப்படியேசம்முடைய தோழிகளுடன்சொல்லி அழைத்துவரச் சொல்லுகிறேன் சுவாமி

மந்திரிதோழிகட்குச்சொல்-விருத்தம்-இ-ம்தோடி

அரிவையின்சாதிமசரேயன்பாயென்வார்த்தைகேளீர்
தெருவினில்விறகுவிற்குஞ்சிற்றிளங்கொடியாளான
கருமுகிலனையகூந்தற்கன்னியையழைத்துக்கொண்டு
ஒருமிவிஷத்திற்குள்ளாயோடியேவருகுவீரே

வ-ம் ஆரடிதாதிபெண்களே நமதுபட்டணத்தில் சிரியபுருவத்தோடு இராஜஸ்திரீயைப்போல் ஒருபெண் நூதனமாகவந்து வீதிகளில்விறகுவிற்கின்றாள் அவளையழைத்துக்கொண்டு வாருங்கள் தோழிப்பெண்களே,

அப்படியேயழைத்துக்கொண்டுவருகிறோமையா சுவாமி

தொ விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி

வீருகுவாயென்றுசொன்னமந்திரிவார்த்தைகேட்டு
தெருவினில்விறகுவிற்குஞ்சேயிழைதன்பால்மேவ
ஒருவிழிமாதராளேர்காதல்கொண்டோடிவந்து
ஒருமிவிஷத்திற்குள்ளாயொண்டொடிக்குரைப்பார்தானே

வ-ம் இந்தப்பிரகாரம் மந்திரிசொன்ன வார்த்தையைக்கேட்டதோழியாளவள்தெருவில்விறகு விற்கின்றசொர்ணகாந்தியைத்தேடியழைத்துக்கொண்டு போகவரும்சமயத்தில்சொர்ணகாந்திவிறகுவிற்றுவிதங்காண்க

சொர்ணகாந்திசொல் வசனம்

விறகுவாங்கிலேயோ அம்மா ஆவின்விறகு அரசன்விறகு புங்கம்விறகுபுளியன்விறகு வாங்கிலேயோ அம்மா விறகோவிறகு

தோழிசொல்வசனம்

ஆரடியம்மா விறகுக்காரி உன்னைப்பார்த்தால் மகாலட்சுமியைப்போலுமிருக்கிறதே நீ விறகுவிற்கவேண்டியகாரணமென்ன இப்படிவாடியம்மா எங்களரசன் உன்னையழைத்துக்கொண்டுவரச்சொன்னாரம்மா விறகுக்காரி

சொர்ணகாந்திசொல் விருத்தம் இ-ம்மோகனம்

என்னையேனழைத்தாரம்மா என்னையொருபொருட்டாவெண்ணி
நன்னயமுள்ளவெங்கணரேந்திரன்கொலுவிற்கிப்போ
கன்னிநான்வருவேனென்னகாரணமறிகிலேனே
செந்நியின்விறகையெல்லாந்தேர்மன்னன்சொன்னாரோ

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்

மன்னனேநீர்வினவியமொழிக்கென்னூரும்
வகையுடனேயென்பெயருமிக்கச்சொல்வேன்
என்னுடையநாயகனுநானும்வாழ்ந்து
இருந்திட்டோம்விசையநகர்தன்னிலேதான்
தன்னுடையதலையெழுத்தமுடிந்துமாண்டார்
தன்னகரைவிட்டுயிந்தவனத்தில்வந்து
வனமுள்ளவிறகுவிற்றுப்பிழைத்தேனையா
வண்மையாயென்தனிவரலாறுதானே.

வ-ம் கேளும்மகாராசனே நானும் என் கணவரும் கூடி வாழ்ந்திருந்தவூர் விசையநகரம் என் பிராணநாயகர் தலைவிதிமுடிந்துமாண்டுபோய் விட்டார் அதன்பின்பு இந்தவனத்தில்வந்து விறகுவிற்றுப்பிழைக்கிறேன் ஆதலால் என்னுடையவரலாறு இது தான் தெரிந்துகொள்ளுமகாராசனே.

சந்திரகிரிராசனுக்குஞ் சொர்ணகாந்திக்கும் வ[illegible]தம்

இராசன்சொல்.

சோலையிலேயடிசித்திரரேகையேஉன்னிட
துணைவன்பேரென்னசொல்வாய் பெண்ணே

சொர்ணகாந்திசொல்.

தரணியிலேவிறகுதலையனெனப்பேருண்டு
சாற்றினேன்கேள்துரை மன்னா

இராசன்சொல்.

கேட்டேனின் துரைபெயருன்பெயரென்னமோ
கிருபையாய்ச்சொல்லடி பெண்ணே

சொர்ணகாந்திசொல்.

சொல்லுவென்பெயர்விறகுதலைச்சியென்பார்
சூதுநான்சொல்லவில்லை மன்னா

இராசன்சொல்.

ஆதென்னவாதென்ன உன்னைப்பார்த்தால்நல்ல
துரைப்பெண்போலிருக்குதே பெண்ணே

சொர்ணகாந்திசொல்.

துரைப்பெண்ணல்லவையா தணிவாய்க்கட்டில்வாழ்ந்
தோகையென்றறிந்திடு மன்னா

இராசன்சொல்.

காட்டில்வாழ்பெண்ணென்றகதையைச்சொல்லவந்தாய்
கன்னிகையேசொர்ண — வன்னமே

சொர்ணகாந்திச்சொல்.

அன்னமேயென்றென்னையழைக்குநீரதமெத்த
வனியாயமல்லவோவர — மன்னா

இராசன்சொல்

அநியாயமென்னநீயறிந்துவிட்டாயுன்மேலாசைக்கொண்டேனடி — பெண்ணே

சொர்ணகாந்திச்சொல்

இந்நகரிலில்லாதவேந்திழையாளோநான்
உந்தன்மேலாசைகொண்டீர் — மன்னா

இராசன்சொல்

ஆசைகொண்டேவிரகவேதனையானேனே
யுனையொருமுத்தந்தாடி — பெண்ணே

சொர்ணகாந்திச்சொல்

முத்தந்தந்திடுமென்றுமொழிகிறீரென்மேல்
மோகப்[illegible]ந்தையும் — மன்னா

இராசன்சொல்.

மோகமதாலுனக்குமொழியுமந்தப்படி
மோகனமாலைதருவேன் — பெண்ணே

சொர்ணகாந்திச்சொல்.

மாலைவேண்டியேநானும் வந்தேனுமிடத்தில்
மகிழ்ந்தாசைகொள்ளவேண்டா — மன்னா

இராசன்சொல்

உந்தன்மேலாசைக்கொண்டோர்பூணிமுற்றுமீவேன்
உண்மைநம்புவாயடி — பெண்ணே

சொர்ணகாந்திச்சொல்

நம்பினேனந்தப்படியாகட்டுமென்றால்
ராத்திரியாகட்டும், — மன்னா

இராசன்—சொல்—வசனம்

நல்லதுஇந்ததோழிகளோடேகூட நம்மரண்மனையிற் போயிரும் பெண்ணே.

சொர்ணகாந்தி—சொல்—வசனம்

அப்படிவேண்டாம்நான்நடுச்சாமத்திற் வருகிறேன்மகாராசனே.

இராசன்-சொல்-வசனம்

அப்படியல்ல இந்தத்தோழிகளோடேகூடநீயும்பெண்ணே.

சொர்ணகாந்திசொல்-வசனம்

அப்படியே நல்லதையா

இராசன்-தோழிகட்குச்சொல்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

அந்தமுறுந்தோழி யர்களேசொல்லைக்கேளீர்
எந்ததேசத்துமிந்த வொண்டிழையாள்போற்காணேன்
தந்திரத்துடனேநீங்கள் தனியரண்மனையினுள்ளே
கொந்தளகத்தினளைக் கூட்டிக்கொண்டேகுவீரே

வ-ம். கேளுங்கள்தோழிப்பெண்களே எந்ததேசத்திலுமிப்பேர்க் கொற்ற பெண்ணினழகைக்காணேன் ஆதலால் நீங்கள் மகாரண்மனைக்குள் அழைத்துக்கொண்டுபோங்கள் தோழிமார்களே.

தோழிசொல்-வசனம்

நல்லதப்படியேமகாபாக்கியஞ்சுவாமி

தோழி-சொர்ணகாந்திக்குச்சொல்-வசனம்

கேளுமம்மா இராசனுத்திரவின்பிரகாரம் அரண்மனைக்குப்போவோம் வாருமம்மாதாயே.

சொர்ணகாந்திசொல்-வசனம்.

அம்மாதோழிப்பெண்களே நீங்கள்போய்வி[illegible]ள் நான்நடுச்சாமவேளையிலுங்களிராசன் அரண்மனையில்வருகிறேனம்மா தோழிமார்களே.

தோழிகள்சொல்-வசனம்

அப்படியேநல்லதம்மாதாயே.

பொதுவிருத்தம்-இ-ம்-ஈ துகுலகாம்போதி.

இந்தவிதமரசனுக்குயிதவுசொல்லியேமாற்றிவெளியில்வந்து
கொந்தருழல்மாதிரவில்வனம்புகுந்து கூசாமற்சென்றாள்மெய்யிற
றொந்தரவாய்முள்ளுதைக்கக்குலதிரமனிதர்களுங்கணையுமீறி
விந்தைசெய்யிருசமுழ்வாழுடர்ந்தவனத்தினில்வீழ்ந்துபுலம்புவாளே,

வ-ம். அதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் சொர்ணகாந்தியம் மனவள் சந்திரவிராசனுக்கும் அவனுடையதோழிப்பெண்களுக்கும் ராத்திரிக்கு நடுச்சாமவேளையில் வருகிறேனென்றுசொல்லி அந்தகைவிட்டு அடவியில்வீழ்ந்து அந்தகண்டாகியமுள்ளுக்குள் காலிற்றைக் கப்புலம்புகிறவிதங்காண்க.

சொர்ணகாந்தி-புலம்பல்-இ-ம்-ஈ துகுலகாம்போதி-ஆதிதாளம்

இந்தவிதிபெற்றனுக்குவாலமோஐயோ
இன்னமென்னவிதிவசமோ தெய்வமே
அந்தவிதியென்கணவன்பிழைத்திப்போ
அலையநான்வந்ததையோ தெய்வமே

விறகுவிற்றுச்சீவனஞ்செய்யுமூரிலும்பாவி
　　வில்வேந்தனுசைகொண்டான் தெய்வமே
பிறர்மாதென்றுணராமற்சண்டாளனுமென்னைப்
　　போகிக்கவந்தானே தெய்வமே
பிழைக்கவந்தவிடத்திலங்கும்விடாமனல்லப்
　　பிழையுமோசம்வரத்துணிப்பேடா தெய்வமே
அழைக்கவந்தானே என்னையணைப்பாவியுமவன்
　　அகங்காரமுங்கொண்டையோ தெய்வமே
சந்தனஞ்சவ்வாதுபூசுமெழிலுடையவென்றன்
　　சரீரமெலியுதையோ தெய்வமே
விந்தைமல்லிகைப்பூமென்றலையிற்காட்டின்
　　வீறகின்முட்கிழிக்குதே தெய்வமே
சம்பங்கிவெண்ணிலமென்றலையிற்போ
　　தைக்கிதேசெடிமுள்ளுந் தெய்வமே
நம்பினபேரைநட்டாற்றினில்விட்டமோசம்
　　நாஞ்செய்தேனறியேன் தெய்வமே
ஆரமுள்ளுகளெல்லாமென்கால்களிலேதா
　　சுருக்கெனத்தைக்குதையோ தெய்வமே
சாரையோடுநெருஞ்சிமுட்களெல்லாமென்றன்
　　காலிற்றைக்குதேஐயோ தெய்வமே
திக்கிலிருந்தமிருகங்தெய்வமேஇதோ
　　திசைத்தெதிர்வருகுதே தெய்வமே
மிக்ககோரமும்வாய்நகாடியெல்லாமென்னை
　　மிரட்டியெதிர்க்குதையோ தெய்வமே
சிங்கங்களெல்லாமொன்றாய்ச்சீறிவருகுதெதிர்
　　திகைக்கிறேனேகாணகம் தெய்வமே
பொங்கும்புலிகளெல்லாங்கிட்டிவருகுதிதோ
　　போகவில்லையேபிராணன் தெய்வமே

சொர்ணகாந்திசொல்-வசனம்

ஐயையோ இந்தக்காட்டில் அர்த்தராத்திரியில் வந்து வழிதெரியாமற்றிகைக்கிறேனே தெய்வமே

பொதுவிருத்தம்-இ-ம்-தன்னியாசி.

துக்கமேவிட்டுமெந்தத்தோகையுமழுதுவாடி
திக்குகள்மாறிக்காட்டிற்றிகைத்துதானிருக்கும்போது
சிக்கினளென்றுசொல்லித்திசையினிலிருந்தப்பேய்கள்
பக்கத்திற்சூழ்ந்தமாதைநப்பட்கொட்டவருகுதானே

வ-ட்-அகோதெப்படியென்றால் இப்படிக்குச் சொர்ணகாந்தியா னவள் இரவினில் காட்டினிலழுதுக்கொண்டு திசைதடுமாறி வருகும் போது அவ்விடத்துண்டாகியபேய்களும் பக்கத்திற்பயங்காட்டி பிடிக்கவருகிறவிதங்காண்க

பேய்கள்வருகிற-தரு-இ-ம்-தன்னியாசி-ஆதிதாளம்

பல்லவி

பேய்களும்வந்ததே-வனத்தில்வாழ்
பேய்களும்வந்ததே

அநுபல்லவி.

பேய்களும்வந்தது பிச்சித்தின்பேனென்று
பெருமையுடனிவளை யுறுமிப்பார்த்துக்கொண்டு-பேய்

சரணங்கள்.

ஓவென்று மலரியே-நடுங்கிட்
உறுமியு மதட்டியே
ஆவென்றவாய்தனி லடர்சிங்கப்பல்லைக்காட்டி
ஆரடியென்றிவ சரமாய்க்கையைநீட்டி-பேய்

தலையிற்சுருண்ட மயிரும்-கோர
தந்தங்களும் வயிறும்
மலையைப்போல்வே வளர்ந்திடுதேகமும்
மங்கையரைச்சுற்றி வளர்ந்திருபாகமும்-பேய்

கண்களிற் பொறிபறக்க-பூதத்தின்
கையினிற் றடிசிடுக்க
பெண்களைத்தொட்டும் பிரமராக்கதரோ
பிணங்களைக்கரங்கொண்டு பெருமையுடனேபடு-பேய்

பேய்கள்-சொர்ணகாந்தியைகேட்கும்- விருத்தம்- இ-ம்-நாட்டை.

இந்தாத்திரிகாலத்திலேந்நேரவேளைதன்னில்
வந்தீயாதரணிப்போவாய்திறந்தெமக்குச்சொல்வாய்
உந்தனையெடுத்துநாங்களுணவாக்கித்தின்னப்போறோம்
முந்தியெங்கட்குச்சொல்லும்னேந்துநீபோகவேண்டாம்

வ-ம்-அடிஆரடிமனிதருபமாயிருக்கிறாய் இந்தஅர்த்தராத்திரிகாலத்தில் ஒண்டியாய்வருவதென்ன உன்னையெடுத்து முழுங்கிப் போடுவோம் எங்கேசீக்கிரமாகப்போகிறாய் நில்லடிபெண்ணே நில்லு.

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-புன்னாகவராளி.

சித்தகர்மேவுகின்ற விசயமாககரைவிட்டு
மெத்தவும்வருத்தமுற்று மீண்டுநான்தப்பிவந்து

யத்தராத்திரிநேரத்திலத்வானமானகாட்டில்
பித்தநான்தின்பேனென்னும்பேய்க்கிரையாகினேனே.

வ-ம் ஐயோபாழுந்தெய்வமே என்னுடைய விசையமாங்கரத்தைவி ட்டு மிகவும்வருத்தமடைந்தநானித்த அத்வானமானகாட்டில் நடுநே ரத்தில் இராவில்வரும்போது பித்துகாலை தின்பேனென்று சொல்லும் பேய்களுக்கு இரையாகி விட்டேனே என்னசெய்வேன் ஐயோ தெய் வமே

சொர்னகாந்திபுலம்பல்-இ-ம்-கெண்டா-திருவதாளம்

இத்தனைநாள் தப்பிவந்து-உயிர்
இக்கிழக்க நாளுமாச்சே
கொற்றவனை புலிக்கிழந்து-இந்தக்
கூளிக்கென் னுயிரிழந்தேன்
இந்தவிதி வரலாமோ-பேய்கள்
என்னுயிரை யினிவிடுமோ
மந்திரகா ஏறிவேனோ-விதி
வந்ததை யறிகிலேனே
பேய்களென்னை செய்திடுமோ-என்னைப்
பிடித்தபொல்லாச் சனிவிடுமோ
மாய்கையாக லேய்த்துவருமோ-சிறு
வயதிலித்த விதிவருமோ
கட்டவரு தொருபேய்தான்-நெஞ்சைக்
கடிக்கவரு தொருபேய்தான்
வெட்டவரு தொருபேய்தான்-ரத்தி
மிரட்டவரு தொருபேய்தான்
கையைப்பற்றி யிழுக்குதையோ-மெத்தக்
கடினமாய்ப் பிடிக்குதையோ
பையவொரு பூதம்வந்து-என்னை
பழிக்குதையோ வகமகிழ்ந்து

பொதுவிருத்தம்-இ-கல்யாணி

பேய்க்கிரையானேனென்று பேதையாளழுதபோது
கூக்குரல்தன்னைக்கேட்டுத் தோகையரிடுகரந்தன்னை
நீக்கிநாம்விடுவோமென்றன் னிமிடத்தினைகரைக்காக்கும்
பாக்கியவுமையாம்யோக பத்ரகாளியுமலந்தாளே

வ-ம்-இந்தப்பிரகாரம் சொர்னகாந்தியம்மன் பேய்களோடு வாதுபு ரிந்து பிறலாபிக்கிறதைபறிந்த அநேகரைக்காக்கும் பத்திரகாளியம் மனவள அவ்விடம் வருகிறவிதங்காண்க

நயப்பிடனினைத்தவேளைநான்வந்துன்றயவாய்நீக்கிச்
செயப்படக்கொல்லிவேன்பேயுந்தானந்திரிணையுடனே.

வ-ம் ஆஆ மகாசந்தோஷம் உனக்கிப்பேர்க்கொத்ததினையும் வந்த
தாதுஇலும்பயப்படவேண்டாம்காளிந்த உலகத்தைக்காக்குப்பத்திர
காளி உன்னுடையகணவனை மந்திரிணைற்றிறந்தனினுன் உன்னுடை
யசங்கதி எனக்குத்தெரியும் பேயைந்தாத்திரியன் உனக்கிடுக்கம்
வருங்கலையிலென்னை நினைத்தால் அப்போதுவந்து உன்னைக்காப்பாற்
றுகிறேன் நீ அஞ்சவேண்டாமம்மா.

சொர்ணகாந்திசொல்-வசனம்.

நான் அந்தப்பிரகாரமே உன்னைநினைக்கிறேன் அந்தவேளையில்நீ
வந்து என்னைக்காத்து ரட்சிக்கவேண்டுந்தாயே.

பத்திரகாளிசொல் வசனம்.

ஆனல்அப்படியேசொல்லுது என்னிருப்பிடம்போய்வாரேனம்மா
சொ-வ-ம். சாணஞ்சரணம்அப்படியேபோய்வாருமம்மா

பொதுவிருத்தம்-இ-ம்-கலரோஸ்.

எனவுடனேந்து இருகாதவழிநடந்து
வேகமாய்நடந்துவோடிமெத்தவுநொந்தி
சோகமுந்துயரமுற்றுஸ்மானையுந்தப்பிமேலும்
தேகமும்படபடத்துத்திகைத்துவீழ்ந்தெழுந்திருந்தாள்.

வ-ம். இந்தப்பிரகாரமாகச்சொர்ணகாந்தியம்மனவள் பத்திரகாளி
யம்மன்வரமீய்ந்துபோனபிறகு அடவியில்இரண்டுகாதவழிநடந்துசோ
கமுந்துயரமுமிருந்துகொண்டுமூர்ச்சையாய்கீழேவிழுந்து மறுபடியும்மூ
ர்ச்சைதெளிந்தெழுந்திருந்து புலம்புகிறதைக்காண்க.

சொர்ணகாந்தி-புலம்பல்-சண்ணிகள்-இ-ம்-கலரோஸ்-அடதாளம்

செய்யாதசோதனைசெய்கிறுபென்னிடம் ஈஸ்வரா-என்ன
தீவினைசெய்தேனோமுன்சன்மந்தன்னிலே ஈஸ்வரா
ஐயோஇவ்வனத்தினிலண்டுப்பேய்களைப்போல ஈஸ்வரா-மெத்த
அலறியுமென்வாய்குளறிப்போகுதுகாந்தி ஈஸ்வரா
பேருலகமெய்க்கப்பெருக்கவாழ்ந்திருப்பேன் ஈஸ்வரா-துஷ்டப்
பேய்களிருக்குங்காட்டிற்பேதையுனைகாந்தி ஈஸ்வரா
வத்தனையாபத்துக்கினிபொறுப்பேன்காந்தி ஈஸ்வரா-அப்பேர
பென்றலைவிதிப்பிரம்மாவிப்படிவிதித்தானே ஈஸ்வரா.

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

பத்திரகாளிதன்றற்பாதிடந்தனக்குத்தப்பி
இத்தனைதூரம்வந்துமிதுவென்னவிபரீதந்தான்
மெத்தவேவகையியாறோடிவருகுதேயெங்குமேனிக்
கர்த்தனேயென்னசெய்வேனக்கரைதாண்டவழிகாணேனே

வ-ம். இதென்னகாரணம்பத்ரகாளியம்மனால் பேய்களுக்குத்தப்பி ப்பிழைத்து இத்தனைதூரம்வந்துவிட்டோம் இப்போதுகணையாறு இவ் விடத்தில் மிதியாய்ப்பாய்ந்து துக்காக ஓடுகிறபடியால்நானெப்படிஇ ந்த ஆற்றைத்தாண்டிப்போகப்போகிறேன்காஞ்சிபுரிநாதா.

சொர்ணகாந்தி-புலம்பல்-கண்ணிகள் இ ம் காம்போதி ரூபகதாளம்

ஆறுகதியல்லால்வேறுகதியுண்டோ ஐயோ-இதில்
யாறும்வீழ்ந்திறந்தால்மேன்மையிலேப்பது பொய்யோ
தேசங்கள்மெய்த்திடும்ராசனையும்பரி கொடுத்தேன்-எந்தன்
சீமையுள்ளபொருள்பூமியையுநான் விடுத்தேன்
ஆசையினியென்றேபேசாமலென்னுயிர் மாய்ப்பேன்நானும்
ஆதியிலேசெய்தபாதகமெல்லாப்போ தீர்ப்பேன்
நாசிலிருப்பையாலிந்தவாற்றினி விழுந்திடுவேன்-இப்போ
என்னையுன்னிடஞ்சேர்த்துக்கொள்ளுநான் போற்றினேன்
வீழ்ந்துமென்னுயிரிழக்கக்காணுமென்ன மாயமோ-என்ன
விந்தையோநானதியேனின்னிட சகாயமோ
செத்தபிணத்தைநான்கட்டைகட்டையென்று பற்றியே-இதோ
சேர்ந்தேன்சுடுகாடுமார்க்கமெனிற்சோலையை சுத்தியே
ஐயோசுடுகாட்டிலாரெதிர்வருமொரு சேதியே-யார்
ஆருமில்லையிசாவருநீரெங்கும் மறுதியே
இந்தவழியெந்தவூர்க்குப்போகுமோதா ஈஸ்வரா-இனி
என்னைக்காத்தருள்வேணியிதுபார் பேஸ்வரா

வ-ம். ஆ-ஆ-ஐயையோதெய்வமே நானடவியெல்லாந் தாண்டிவந் து கடைசியில் பேய்களிடஞ்சிக்கித் துய்ரமடைந்து மகாகாளிவரம்பெ ற்று வேதனைதீர்ந்து கண்ணைமூடிக்கொண்டுவந்து இந்தகணையாற்றில் விழுந்து சலத்திலடித்துக்கொண்டுவரும்பிணத்தைக்கட்டையென்று பி டித்து இங்குவந்துசேர்ந்தேன் இங்கேபார்த்தால் சுடுகாடுகாணப்பட் டு அதிலொருபிணமும் எரிந்துக்கொண்டிருக்குதே இதைத்தாண்டிப்

போவோமென்றால் வழியுந்தெரியவில்லை ஒருவருங்காணவில்லையெனக்
குபசியினால் மூர்ச்சையாய்வருகின்றதிதன்னை செய்வேன் தெய்வமே.

சொர்னகாந்தி சுவாமியைதுதித்துப்புலம்பல்.

தரு-இ-ம்-ஆகிரி-அடதாளம்.

பல்லவி.

தெய்வமேஓ தெய்வமே

அநுபல்லவி.

தெய்வமேநீயும் செய்யும்வகையறிவேனோ
பையரவமணிந்த பரமசிவனேபாரும்-தெய்வமே

சரணங்கள்.

அன்னந்தண்ணீரனக் காதரவுமில்லாமல்
கண்ணுங்காதடைக்குதே கைலைமலையில்வாழும்-தெய்

அலையவிட்டென்னை யழகுபார்க்கின்றீரோ
மலைபோலநீயிருந்தும் வகையென்னதானையோ-தெய்

வழிதெரியாமல் மயங்குறேன்சுடுகாட்டில்
பழிபாவஞ்செய்தேனோ பரமசிவனேஉன்-தெய்

வருமனைகாணேன் ஒருவர்திக்குங்காணேன்
வேறேவகைகாணேன் விதிவசமோவையையா-தெய்

பொதுவிருத்தம்-இ-ம்-பந்துவராளி.

இந்திரன்சிலைக்குநேரியலங்குநற்புருவமின்னாள்
நொந்துமெபுலம்பிச்சேரிநோக்கியேவருகும்போது
விந்தையாமணிகள்பூண்டுமெய்யில்வெண்ணீறணிந்து
தந்திரமாகநந்திச்சாம்புவன்வருகின்றானே.

வ-ம். இந்தப்பிரகாரம் சொர்னகாந்தியம்மனவள் சுடுகாட்டைவி
ட்டுப் பறைச்சேரியைநோக்கித் தியங்கிக்கொண்டிருக்கும்போதுசூரி
யனுதயமாக அந்தவிடத்தில் ஆடையாபரணாலங்கிருதனாய்மெய்யில்வெ
ண்ணீறுபூசி நந்திச்சாம்புவன் வருகின்றான்.

நந்திச்சாம்புவன்வருகிற-தரு-இ-ம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

நந்திச்சாம்புவனானே-ஆண்டே
நந்திச்சாம்புவனானே

அநுபல்லவி.

சந்திரலோகமுமிருந்தசாம்புவர்க்கு
எஜமானாகவும்இசைபெற்றிடும்வீர

சரணங்கள்.

சுடுகாடதனிலே காத்திருப்பேன்மெத்த
கூடத்திருக்கும்பிணங்களைச் சுட்டிடுவேன்
இவ்வாய்க்கரிசியி டினியகாற்பணமு
மெனக்குள்ளமுழக்குண்டுங் கணக்காகவாங்கும்வீர-நந்தி

காட்டையுமடக்கிக் கொள்வேன்பிணங்
கால்பாட்டினிற்றனல் மூட்டிடுவேன்
சண்டைபண்ணுமவர் சாம்பலாக்கினதை
தாணியாண்டைகளுக்குங் காட்டிடுமேவீர-நந்தி

ஆண்டைகளியா ணத்திறன்பிசவும்
அந்த போய்பறை யறைந்திடுவேன்
மாண்டவர்க்குப்பறை யறைந்திடும்பெரிய
மாடுசென்றிடினும் வலியுறத்தோட்டிவீர-நந்தி

நந்திச்சாம்புவன்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

ஆரம்மாவிந்தச்சேரி யருகினில்நிற்குந்தாயே
சூரியவுதயம்போலத் துலங்கியவன்னையாரே
வீரியராசவம்சம் விளங்கியதாயேநீதான்
சீருடனாருபேருந் தெரிந்திடசெப்புமம்மா.

வ-டை. ஆரம்மாதாயேஇந்தப்பரச்சேரியருகாண்டைகுந்து சூரியப்பிரகாசம்போலும் ராஜகன்னிகையைப்போலும் விளங்கியிருக்கின்றாயே உன்னுடையபேரென்ன நீயார் இவ்விடத்தில் நீவந்தகாரணமென்ன எனக்குத்தெரியச்சொல்லுமம்மா தாயே.

சொர்ணகாந்திசொல்-வசனம்.

கேளுமண்ணாவேநான் என்தலைவிதி என்னென்றுசொல்லப்போகிறேன் உம்மைப்பார்த்தால் என்சகோதரனைப்போலிருக்குதே நீயார் உன்பெயரென்ன நீயெனக்குச் சொல்லுவாயாகில் நானென்வரலாற்றை பின்னால் சொல்லுகிறேனப்பா.

நந்திச்சாம்புவன்சொல்-வசனம்.

கேளுமம்மாதாயேநான் இந்தச்சேரியிலிருக்கும் நந்திச்சாம்புவன் நீபயப்படாமல் உன்னுடையவரலாற்றை ஒளியாமல் சொல்லுமம்மா தாயே.

சொர்ணகாந்திசொல்-அகவல்-இ-ம்-எதுகுலகாம்போதி.

அதிசயமதிசயமண்ணேநீகேளென
விதிதனைவிட்டோவிபரமாய்க்கேளும்
விசையமாநகரில்வெகுகீர்த்திபாகத்
திசையெலாம்பாக்குஞ்செயக்கொளுமன்னன்

புருஷசிகாமணி புண்ணியனெங்கள்
துரைவீரகுமாரராசன்
திறமுடன்சென்றோர்செலுத்துகாளையினிற்
சருவமாகிரியிற் சதிருடன்சென்று
வேட்டையாடுவோமென வேந்தனைமந்திரி
கூட்டிப்போய்க்காட்டிற் கொலைசெய்துவிட்டுப்
பட்டணந்தன்னிற் பரிவுடன்வந்து
மட்டிலாதவமணி மகுடமுஞ்சூட்டி
இராஜனெக்கேயென நயந்துகேட்டவர்க்கு
வாசமாமலையில் வனப்புலியடித்தது
தானுயிர்விடுத்தார் தப்பியான்வந்தேன்
நானென்னசெய்வேனம்மாவெனச்சொல்லி
நாலுமாதமுமேநடந்திடுமெனக்கு
குலனைத்தெரிக்க துடுக்கனுமறிந்து
என்னையுங்கொல்லவெண்ணினன்யானு
தன்னையதாதிகளவின்றிடவறிந்தேன்
அறிந்தவந்தனமே யணிநகர்தன்னைப்
பிரிந்துதான்றனியே பெருவனந்தன்னில்
இருபதின்காதமேகினேன்காட்டில்
வரும்புலிமிருகம் வாதையாற்றப்பி
காற்சொப்பளிக்கக் கனசோகமேறி
மேற்குவழியா யிதித்திடும்போது
சந்திரகிரியெனுஞ் சதிருளநகரின்
வந்துநான்காளின் வாசிறகெடுத்து
விற்றுநான்பிழைக்க வீதிகடனிலே
புற்றுமேவிற்று முயிருடனிருந்தேன்
இருந்திடுநாளி லெனைக்கண்டவர்களும்
பரிந்தாசைகொண்டு பார்த்திபரிடத்தில்
கன்னிகையொருத்தி கலைமதிபோலே
வின்னகர்தன்னில் விளங்குறுள்மன்று
விறகுகாரியைப்போல் வேஷமேகொண்டு
தெருவினில்விறகு திறமாய்விற்கின்றாள்
என்றுமேசொல்ல விராஜனுந்தன்னிட
வண்டையிலென்னை யழைக்குவாவென்ன
தாதிமார்சேவகர் தனியரிக்காற
காதரவுடனே யவர்களும்வந்து
அழைக்கவேநானு மறிந்துவந்தேனே

பிழைக்கவுகடந்தேன் பேணியேவரசன்
என்னைக்கண்டு யேந்திழையாளே
உன்னூர்பேருமுறையெனக்கேட்க
விறருக்ஷ்த்ரியெனவிளம்பினேனும்
திறமுளநெஞ்சாய்த் தேர்வேந்தன்கேட்டு
ராஜவம்சத்து நங்கையென்றென்மே
லாசையாய்த்தன்னிட வந்தரங்கத்திற்
கூட்டிவாவென்று கூறினான்பாவி
காட்டியதாதிய ரெந்தனையழைக்க
பேதகம்தினைப் பேதையானதிந்த
நீதியாயன்று நிசிராத்திரிவேளையில்
வருகிறேனென்று வாக்குதத்தஞ்செய்து
தொருமையாளப்போ தொண்டியாய்நானும்
அந்நகர்தனைவிட் டர்த்தராத்திரியி
லென்னிடத்கலையி னெழுத்தின்படியே
அந்தகாரமான வாரணியத்தில்
வந்திடும்போது வழிதெரியாமல்
செடியிலேவிழுந்து தேகம்வருந்தி
கடுமுள்ளுந்தைத்துக் கால்களயர்ந்தே
கல்லுகளிடாக் காயமாய்முழங்காற்
சில்லுகட்பெயர்ந்து செந்நீர்வடிய
வன்மிருகங்கள் வந்துதான்மறிக்க
முனியுப்பிசாசு முன்புவந்ததட்ட
சனபேய்வந்து எந்தனைச்சனையிற்
றுஷ்டையாகத் தான்கொண்டுபோகக்
காளிவந்தென்னைக் கைபிடித்தழைத்து
கூளியைமிரட்டிக் கொடுமையைத்தீர்த்து
பாதையுங்காட்டினாள் பத்திரகாளி
யாதரவாக யான்வரும்வேளையிற்
கடலதுபோல கணையாறெதிர்பட
உடல்களும்மெலிய வூழ்வினையென்று
நண்ணியிற்குதித்துக் கூசிருடனீந்தி
புண்ணியவசத்தாற் பொருந்தியுமந்தக்
கணையாறுந்தாண்டி கரைவந்துசேர்ந்தேன்
அணிமேவுருத்திர னவனியைக்கண்டேன்
மெத்தவும்பயந்து விதிவசமெனவும்
ருத்திரபூமியி லோடிநான்வந்தேன்
கோழிகள்கூவும் குரலோசைகேட்டு
வாழுமுன்சேரியில் வந்துநின்றேன்காண்
ஆதரவென்றனை யண்டினேனப்பா
நீதியாய்க்காக்க நின்பொறுப்பாமே

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

காத்திரட்சிக்கவுன்னை கருதினேன்னீயெனக்கும்
மாத்திரஞ்சகாயஞ்செய்தால் மறந்துநான்போவதில்லை
கோத்திரமிகுந்துவாழ்வாய் குடிசையொன்றியற்றித்தந்தால்
னேர்த்தியாய்க்குடியிருந்து னிகழ்காலங்கழிப்பேனப்பா.

வ-ம். கேளுமையா நந்திச்சாம்புவரே நீ எனக்கொருவுதவி செய்ய வேண்டும் அவையென்னவென்றால் நான்னேர்ப்புவதியானதால் ஒரு குடிசை கட்டிக்கொடுத்தால்நானதிலிருந்து காலங்கழிப்பேன் உனக்கு புண்ணியமாகவிருக்குமையா சாம்புவா.

நந்திச்சாம்புவன்சொல்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

குடிசையுங்கட்டித்தாரேன் கோதையேசொல்லக்கேளாய்
படியிசையுமகருவேண்டும் பதார்த்தங்களுனக்குத்தாரேன்
கொடியினிலுனக்குவேலை னுட்பமாய்ச்செய்யவேண்டி
அடியாளென்மனைவியைத்தா னனுப்புறேன் பயப்படாதே.

வ-ம். கேளுமம்மா ஆண்டிச்சிபாரே அப்படியேஉன்மனசுபடி ஒரு குடிசை கட்டித்தாரேன் உமக்குவேண்டிய பதார்த்தங்களுந் தாரேன் வேலைக்காகவென்பெண்சாதியையும் வைக்கிறேன் நீ பயப்படவேண்டாமம்மா.

சொர்ணகாந்தி-சொல்-வசனம்.

அப்படியே செய்யுமையா நந்திச்சாம்புவரே.

நந்திசாம்புவன்சொல்-வசனம்.

ஆனவிதோ கட்டிவைத்தேன் இந்தக் குடிசையிலிருந்தால் உனக்குவேண்டிய பதார்த்தமுங்கொண்டு நன்றாகக் கிட்டவிருக்கவும் கோட்டிச்சிபாவிய எனபெண்சாதியை அனுப்பிவைக்கிறேன் நான்போய்வாறேன் ஆண்டைச்சி.

நந்திச்சாம்புவன்சொல்-இ-ம்-தெம்மாங்கு"

தெந்தினுனே தென்னானே

அடியேபறச் சிறுக்கி-நல்ல
ஆசாரமில்லாமுவிச் சிறுக்கி
கொடித்தநடைச் சிறுக்கி-நல்ல
நாய்பிச்சோறுண்ணும்வரப் போக்கி (தெந்தி)

மஞ்சா குளிச்சவளே-சின்ன
மாப்பிள்ளைகளுடன் பேசுவளே
பஞ்சும்போல் நரைத்தவளே-தீயில்
பசுமாட்டைப்போடாம டின்னவளே (தெந்தி)

சொர்ணகாந்தி-புலம்பல்-இ-ம்-செண்டா-துருவதாளம்.

முத்துமணிமண்டபத்தில் மொய்குழலாரிதாதிமார்கள்
தன்னைமொழுபாங்கிமார்கள் தையலர்களநேகிருக்க
மெத்தவும்லங்கரித்து மேன்மையாய்சகத்துடனே
வைக்கிருப்பாரோவிசைய மாநகரின்மன்னவரும்
மட்டையோங்கிநிம்விசைய மாநகரில்வாழ்ந்திருந்தால்
கட்டியக்காரர்தாதிமார்கள் காவலர்கள்மெத்தவுண்டு
இட்டமானதோழியர்கள் தீதிலாமற்சூழ்ந்திருப்பார்
வெட்டியான்தன்பெண்டேயல்லால் வேறாகநிக்கேனிங்கு
வண்டுகளார்ந்திடுமிந்த வனத்திலுள்ள துயிலினங்கள்
தொண்டுகளுமன்னங்களுந் தோகைமயிற்கூட்டங்களும்
துண்டரிகமிருகமல்லாற் றுணையுமெனக்காருங்காணேன்
அண்டர்களேயன்புமிகுந் தாதரவுசெய்வீர்களே.

தோட்டிச்சிசொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அம்மவனம்வந்தோமென்று மஞ்சவேவேண்டாமாதா
குருபரனருளால்நல்லக் குழந்தையைப்பெற்றெடுப்பாய்
திருவிழிமாதேதேகந் தியங்கவும்வேண்டாமின்னம்
ஒருநிமிஷத்திற்பிள்ளை யுதயமாகுதுபார்தாயே.

வ-ம் கேளுமாதா ஆண்டைச்சியாரே நீவனத்தில் வந்துதானென்னபயப்படாதே ஈஸ்வரன் தயவாலே ஒருநிமிஷநேரத்தில் ஆண்குழந்தையைப்பெறப்போறாய் சும்மா இருநீபாத்தா நான் உன்னுடன் கூடவேஇருக்கிறேன்.

பொதுவிருத்தம்-இ-ம்-செஞ்சுருட்டி.

உருகியேதவிக்கும்போது வுமையெனும்பத்ரகாளி
பெருமைசேர்மருத்துவஞ்செய்ய பெருங்கிழவியைப்போற்றனு
மொருகையிற்றடியுமூன்றிக்கொண் டுடலதுகூனியாகி
மருவியமனத்தோடன்பாய் மருத்துவக்கிழவிவந்தாள்

வ-ம் இந்தப்பிரகாரம் சொர்ணகாந்தியம்மன் கெற்பவேதனைப்படுகிறசமையத்தில் காட்டில் அபயஸ்தங்கொடுத்தபத்திரகாளியும் ஒரு மருத்துவக்கிழவியாய்வேஷங்கொண்டு சொர்ணகாந்தியம்மனிடம்வருகிறவிதங்காண்க

மருத்துவக்கிழவிவருகிற-தரு-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி

கிழவியும் வந்தாளே-மருத்துவக்
கிழவியும் வந்தாளே

அநுபல்லவி

பழமையாய்மருத்துவம் பார்த்தவள்போலேயடிக்-கிழவி

சரணங்கள்

கோலுங்கையிற் பிடித்து-உடலைக்
குறுக்கியேமிக கடித்து
வாலைமந்திரம் வாய்தனிற்படித்து
வலியவினைகணிக்க வேலனென்றுதுதித்து (கிழ)

எந்தன்மகளே இன்று-வேதனை
ஏதுனக்கினி என்று
சொந்தமாகவே அந்தமுடனன்று
தோகையைப்பார்க்க கூடியுந்தான்று (கிழ)

நரைத்ததலையும் நடுக்க-இருகாலும்
நடக்கையிலே தடுக்க
உரைத்திடுஞ்சொல்லி ளுளறதுகொடுக்க
உன்னதவரசியின் துன்பம்வடுக்க (கிழ)

மருத்துவச்சிசொல் விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி

ஏதடிமகளேநீயு மிந்தனல்வனத்திலேதான்
போதுகாலத்திலேநோயைப் பொறுக்கவுமாட்டேனென்று
ஆதரவில்லையென்று மழுகிடும் விதமுமென்ன
போதனைப்பாயெனக்குப் பொருந்தவேபுகலுவாயே

வ-ம். ஆரடியப்பா இந்தவனத்தில் எனக்காதரவில்லையென்று பிள்ளை நோய்பட்டு அழுகிறாய் ஆகையால் நான்மருத்துவம் பார்க்கவந்தேன் எங்கேநோகுதுசொல்லடியம்மா நான் பார்த்துத் தீர்த்துவிடுகிறேன் மகளே:

சொர்னசாந்தி-சொல்-இ-ம்-முகாரி.

புகலுவேன்கேளாயிந்தப் பூதலம்புகழ்செய்கின்ற
நாரெனும்விஜயநாட்டி னற்செங்கோலுடையவேந்தன்
பகவனருளால்மாண்டார் பட்டணம்விட்டுவந்திச்
செகந்தனிற்பிள்ளைநோயாற் றியங்கினேனென்தன்றாயே;

வ-ம். ஆரடியம்மாபாட்டி என்வாலாற்றைக் கேட்டாயல்லவா நான் விஜயநகராளும் அரசன்மனைவியர் விதிவசத்தால் மாண்டாராகையால் நானிவ்விடம் வனத்தில்வந்து தவிக்கும்போது என்பரிதாபத்தைக் கண்ட நந்திச்சாம்புவர் மனதிறங்கியுடற்பிறப்பைப்போல் பாதுகாத்துவரும்போது வந்தவிடத்திலிந்தப் பிள்ளை நோயுண்டாச்சுதம்மா. நான்என்னசெய்வேனடி பாட்டி.

மருத்துவச்சிசொல்- விருத்தம்-இ-ம்-தன்னியாசி

அன்னமேயான்பயின்ற யறிவையேசொல்லக்கேளாய்
இன்னிடவயிற்றில்வீர னின்றுமேயிதப்பானம்மா
உன்னதமாகமுன்போ லுரிமையிற்பெருமையாக
மன்னியேவாழ்ந்திருப்பாய் மனதினிற்றுயரம்வேண்டாம்.

வ-ம். அடியம்மா நான்பெற்றசெல்வமே நான்சொல்லுவதைக் கேள் உன்வயிற்றினில் இப்போது பிறக்கப்போகிறது ஆண்பிள்ளை அவனாலுங்களுடைய ஊரைச்சேர்ந்துமுன்போலேவாழ்ந்திருக்கப்போறாய் அஞ்சவேண்டாம் சும்மாயிரும்மா மகளே

பெ-துவிருத்தம்-இ-ம்-கெண்டா

அன்னையுஞ்சொன்னபின்பு வரிவையுங்கேட்டுமிக்க
வன்னமாம்வதனஞ்சோர வாடியேபுவியில்வீழ்ந்து
தன்னிடர்தனைநினைந்து தான்பிள்ளைபெறவுமேதான்
நன்னயசொர்ணகாந்தி நனிநொந்தேபுலம்புவாளே

வ-ம் இந்தப்பிரகாரம் மருத்துவச்சிசொன்னபின்பு சொர்ணகாந்தியம்மனானவள் பிள்ளைநோய்கண்டு பெருமூச்செறிந்து கைகால்நடுங்க உடற்சோர்ந்துபூமியில்விழுந்து பிரலாபிக்கின்றவிதங்காண்க.

சொர்ணகாந்தி-பிரசவேதனைப்படுகிற-கண்ணிகள்

இ-ம-கெண்டா-ஆதிதாளம்,

என்னசெய்வேனென்னசெய்வேன் அன்னையாரே-இப்போ
தென்னுடம்புநோகுதடி அன்னையாரே
மன்னரின்மைந்தனிலை அன்னையாரே-எந்தன்
வயிறுநொந்துளைக்குதடி அன்னையாரே
கோடிகோடிதெய்வங்களை அன்னையாரே - நான்
கும்பிட்டேனந்தநாளினில் அன்னையாரே
காட்டில்வாழ்முனிவர்களை அன்னையாரே - இதோ
கைகூப்பியேதுதித்தேன் அன்னையாரே
ஏகமாய்வலிக்குதடி அன்னையாரே - இதோ
எங்கேயோபறக்குதடி அன்னையாரே
அகமெலாம்வலிக்குதடி அன்னையாரே - இனி
அடிவயிறுநோகுதடி அன்னையாரே
மிக்கவும்வேதனையாக அன்னையாரே - எந்தன்
மேனிபுண்ணாகுதடி அன்னையாரே
சகிக்கமாட்டேனிந்தநோவை அன்னையாரே- பொல்லாச்
சத்துருக்குமாகாதடி அன்னையாரே

மருத்துவச்சிசொல்-வசனம்.

என்னடிமகளே சும்மா எழுந்து விழுந்து அழுகிறாய் பத்தைஞ்சு பெற்றவளா என்ன தலைச்சன் பிள்ளைக்காரியல்லவா இருக்கிறது தான் ஆனைக்கு மடிசாக்குந்தான் சற்றுநேரம் மனம்பொருத்தால் உன்சஞ்சலந்தானே நீங்கிவிடுகுது சும்மாயிரும்மா மகளே.

பொது-விருத்தம்-இ-ம்-புன்னாகவராளி.

பிள்ளைநோய்தன்னாலக்கப்பேறையுஞ்சொர்ணகாந்தி
துள்ளியேபுவியில்வீழ்ந்துதுன்பங்கள்படும்போதேதான்
ஒள்ளியசந்திரன்போலுதித்தனன்வாளுமேந்தி
மெள்ளவீரகுமாரவேந்தனும்புவியிற்றானே

வ-ம். அதேதெப்படியென்றால் சொர்ணகாந்தியம்மனைவள்பிரசவவேதனைப்பட்டபின்பு சந்திரனைப்போலப்பிரகாசிக்கின்றவீரகுமாரனானவன் கையில்வாளுடன் பிறந்தவிதங்காண்க.

வீரகுமாரன்பிறந்த-தரு-இ-ம்-புன்னாகவராளி ஆதிதாளம்.

பல்லவி.

வீரகுமாரனும் பிறந்தான் ஒளியிருந்த
வீரகுமாரனும் பிறந்தான்

அநுபல்லவி.

பூரணச்சந்திரவிம்பம் போலொளிமேவிய

சரணங்கள்.

உருண்டுசிவந்த மெய்யும் அணிகுஞ்சரத்
துதிக்கைபோலிருகையும்
சுருண்டுகருத்தமயிர் சுந்தரச்செப்பவாள்
சுத்தபாவினிறைந்த முத்தினதுபற்களும்
துலங்குமிங்கித தேசுவிநோதமு
மலங்கிருதம்பெருஞ் சீதளபாதமுஞ்
சுகுணமாரனென ககனவாசிகளும்
புகழவேபுவியின் மிகவுலாசமொடு
சுந்தராருசித முந்திகழும்படி
வந்தனந்த மிகுந்துறவும்படி
துரைகளைத்தும்வீர குமாரராசனமகிழ்
வீரகுமாரதுகரு வெனவிளங்கவொரு வீர

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

பிறந்தபிள்ளைதனையெடுத்துபத்ரகாளி
பிரியமுடனேவீரகுமாரனென்று
சிறந்திருநாமமிட்டுவாழ்த்திமன்னன்
றேவிகையிற்கொடுத்தவளுஞ்சென்றபின்பு
கறந்தமுலைப்பால்கொடுத்துகுழவிதன்னை
காதலுடனேணையினில்வளர்த்தியப்பால்
சிறந்தமதிகுலக்கொழுந்தேசேயேயென்று
நெஞ்சுருகியன்புடன்றாலாட்டுவாளே

வ-ம்- இந்தப்பிரகாரமாய் சொர்ணகாந்தியம்மன் பெற்றபிள்ளைக் குபத்திரகாளியானவள் ஸ்ரீருத்திரவச்சிவீரகுமாரனென்றுபெயர்கொடுத்து அந்தப்பிள்ளையை வாழ்த்திசொர்ணகாந்தியிடத்திற் கொடுத்துவிட்டு தன்னிருப்பிடஞ் சேர்ந்தபின்சொர்ணகாந்தியானவள் காளிகொடுத்த பிள்ளையைக்கையில் வாங்கியதற்கு யேணையொன்றுகட்டிக் குழந்தையையதிலிட்டுத் தாலாட்டுகிறவிதங்காண்க

ஆரிவரோ ஆரிவரோ ஆரிவரோ ஆரிவரோ

வீரகுமாரனென்விசையுங்கர்க்கதிபதியே
பூரணச்சந்திரோதயமாயும் புண்ணியனேகண்வளராய் ஆரிவ

நாடுநகரிழந்துநரேந்திரரைத்தானிழந்து
வாடிமெலியுமெந்தன் மைந்தனேகண்வளராய் ஆரிவ

மாணிக்கமேபுவியின் மாநகரத்தினமே
யாணிப்பொன்முத்தே யருப்புதல்வாகண்வளராய் ஆரிவ

மந்திரியாலுன்றகப்பன் மாண்டாரேகானகத்தில்
செந்திருவேயெந்தன் செல்வனேகண்வளராய் ஆரிவ

விறகுசுமையெடுத்து வீதியினுன்வித்துநொந்து
குறைவுபட்டேன்வினைக் கொற்றவனேகண்வளராய் ஆரிவ

என்றலையிலிந்தவிதி இப்படியும்பாவிபிரம்மா
இன்பமுடனேகுறித்தா என்மகனேகண்வளராய் ஆரிவ

தேடக்கிடையாத தெள்ளமுதேசர்க்கரையே
கூடமணிவிளக்கே குழந்தாய்நீகண்வளராய் ஆரிவ

மன்னவர்க்குமன்னவனே வரிசிலையின்மன்மதனே
வன்னநிறமுடைய வனக்கிளியேகண்வளராய் ஆரிவ

நந்திச்சாம்புவன்சொல்-விருத்தம்-இ-ம்-சுருட்டி

என்றங்கையாரேநீதானிந்த த்ருடிசைதன்னில்
மினெனுளிபேரியோர்பிள்ளைமேன்மையாய்ப்பெற்றெடுத்து
நின்மனத்துயர்கள்சொல்லிநேர்மைதாலாட்டலுற்றாய்
நன்மைநீயுபெருங்காலமுடன்வாழிவாழி

வ-ம்-சேனும்மாஎன்றங்கச்சியாகிய சொர்ணகாந்தியம்மாசூரியப்பிரகாசம்போலே ஒருபிள்ளையைப் பெற்றுத் தாலாட்டிக்கொண்டிருக்கிறாய் மகாசந்தோஷம்உன்பிள்ளையும் நீயும்யெப்போதுஞ்சுகமாயிருங்களம்மாதாயே.

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அண்ணவுன்கிருபையாலேயழகியசுதனைப்பெற்றேன்
எண்ணியவெண்ணமெல்லாந்தீர்ந்திடுமினிமேலப்பா

வண்ணவிக்குழந்தைதன்னைவளர்த்திடிற்பிலனுமேதான்
இன்னமாய்க்கிடைக்குமெல்சட்சிவனார்தன்கிருபைதானே

வ-ம்-கேளுமண்ணாநந்திசாம்புவரேநானுடையகிருபையினால் இந்தக்குடிசைக்குள் ஒருபுத்திரனைப்பெற்றேன் இனிமேலெனக்கொன்றுங்குறையில்லை இந்தப்பிள்ளையைவளர்த்தால்நான் எண்ணியவெண்ணமும்பலிக்கும் இவைகளெல்லாஞ்சிவனார்கிருபையும்நீங்களுடையபுண்ணியவசமேயல்லது வேறொன்றுமில்லைஐயாநந்திச்சாம்புவரே

நந்திச்சாம்புவன்சொல்-வசனம்.

நல்லதுதாயே அந்தப்பிரகாரமேசுவாமியினருளால்நடக்கப்போகின்றது நீபயப்படவேண்டாந்தாயே

பொது-வசனம்.

இந்தப்பிரகாரம் சொர்ணகாந்தியம்மனானவள் வீரகுமாரனைச்சீராட்டிவளர்த்துக்கொண்டு வரும்நாளையில்பிள்ளைக்குவயதைந்தானவுடனே நந்திச்சாம்புவன்வீரகுமாரனைப் பள்ளிக்குவைக்கச்சொர்ணகாந்தியைக்கேட்கிறவிதங்காண்க.

நந்திச்சாம்புவன்சொல்-விருத்தம்-இ-ம்-தோடி.

நல்லதுதாயேயிந்தநானிலமதிக்கப்பெற்ற
வல்லவுன்புத்ராநுக்குவயதுதானைந்துமாச்சு
கல்லில்மேலெழுத்தைப்போலக்கல்விகற்பிக்கவேண்டு
மெல்லியேஉன்மனதின்மெய்யதைவிளம்புவாயே

வ-ம். இந்தவுலகங்களெல்லாம் மதிக்கத்தக்கதாக ஒருகுழந்தையைச்சூரியனைப்போல்பெற்றாய் நல்லதிருக்கட்டும் அந்தப்பிள்ளைக்கிப்போ அஞ்சிவயதாகிவிட்டபடியினால்உங்கள்சாதியின்வழக்கமானகல்வியைக்கற்பிக்கவேணும் ஆகையால்உன்மனதிலிருக்கும் எண்ணத்தை நிஜமாய்ச்சொல்லுமம்மா.

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-மங்களகௌசிகை

விளம்புவேன்கேளாயெந்தன்வேந்தனார்மைந்தனுக்கு
களங்கமில்லாமனல்லகல்வியைப்பிரச்சிசெய்ய
உளமிகுசத்தியுள்ளவுபாத்தியையிவ்வனத்தில்
புளகிதமாகயிப்போ புண்ணியனேயழைப்பிப்பாயே

வ-ம்-கேளும் அண்ணா நந்திச்சாம்புவரே என்குமாரனுக்கு வித்தையைக்கற்பிக்கவேண்டியதுநிட்சயந்தான் ஆதலால்ஒருவேதியனை ஓதுவிக்கஅழைப்பியும் அண்ணாநந்திச்சாம்புவரே

நந்திச்சாம்புவன்சொல்-வசனம்.

அந்தப்படிக்கு இப்போவழைத்துக்கொண்டுவருகிறேனுத்தா.

பொதுவிருத்தம்-இ-ப்-தோடி.

இந்தவிதமாகியருமியம்பவுங்கேட்டங்கனடேவியற்றுமென்று
வந்தனஞ்செய்தவன்செல்வகனமுடையவாத்தியாரையழைக்கவப்போ
சுந்தமலர்த்தார்புனையுங்கலைவல்லவாசிரியன்களித்துமேதான்
தொந்தியசைந்தாடசகுணமும்பார்த்துவந்துதோன்றினனே.

வ-ம்-அதெப்படியென்றால் இந்தப்பிரகாரம்சொர்ணகாந்தியம்மைசொல்லக்கேட்ட நந்திச்சாம்புவனதப்படியே செய்வோமென்று ஓதுவனுசிரிய்ரான உபாத்தியாயரை அழைக்க உபாத்தியாயரிடத்தில் வீரகுமாரனுக்கு வித்தியாரம்பஞ்செய்விக்க வருகிறவிதங்காண்க.

உபாத்தியார்வரும் ம-தரு-இ-ப்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வாத்தியார்வந்தார் பள்ளிக்கூட
வாத்தியார்வந்தார்

அநுபல்லவி

சாஸ்திரபுத்தகம் நேத்திரமெடுத்து-வாத்தி

சரணங்கள்.

பணிக ... லங்க-மார்பில்ரத்நப்
பதக்க மிலங்க
கணிகையர்மனங்களி கொள்ளவேசங்கித்
கலையையுணர்ந்த கனவானென்றும்வேத-வாத்தி

கையினன் றாலும்-சிறப்புடன்
கழறுந்தென் றாலும்
மெய்யினில்வெண்ணீறும் விளங்கவேசைதன்னிய-வாத்தி
பிரம்புங்கைக் கொண்டு-அறியதோர்
பிரணவத்தைக் கண்டு
தரணியிலுண்டான தனையர்கூட்டிநீடி
சட்டமாகவேநந்திச் சாம்புவன்வனந்தேடி-வாத்தி

உபாத்தியாயர்சொல்-வசனம்.

ஆரடா அடாய் தோட்டிப்பறையா அடாய்நந்திச்சாம்பா ஒருமை என்னையேனழைத்தாய் நேக்குசொல்லடாசொல்.

நந்திச்சாம்புவன் சொல்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி

பார்ப்பாரவாண்டேகேளீர்பரந்துநான்சொல்வேனையா
பேர்ப்பாதிவயதோடிங்கேசேரிலேழுசூலாய்வந்து

திர்ப்பாகத்தவிக்கயானூர் திரமுடன்குடிசைக்குள்ளாய்
சேர்ப்பிற்றேன்சுதனைப்பெற்ருள் சிறுவன்கல்விகாக்கவழைத்தேன்

வ-ம்-ஏசாமி பாப்பாறஆண்டே கும்பிட்டேன்நான் ஒண்ணுகேக்கிறேன் சாமிகோபப்பண்ணுதேகேக்யிடி எங்கபறச்சேரி பக்கத்திலேஒருசூரியன்குஞ்சிபோலே ஆண்டச்சிவந்தது அதுமெத்தஅயகாயிக்குது அதுபிள்ளெதாச்சியாம் அதுக்குநான் ஒருகுடிசைகட்டிக்கொடுத்தேன் எம்பெஞ்சாதியும் துணையாகவைச்சேன அதுஒருகுயந்தைப்பெற்றிச்சி அந்தக்குயந்தைக்கி அஞ்சுவயது ஆச்சுநீங்கல்லாமோபடிக்கிறீங்களே அதுசொல்லிக்குடுக்கத்தா வல்யச்சேன்பாப்பாறஆண்டே

உபாத்தியாயர்சொல்-வசனம்.

அடாத்தாயோழி பறத்தாயோழி ஆரடாவந்திருக்கிறது நேக்கொன்றுந்தெரியவில்லை அடாய்நந்திச்சாம்பாய் அவளாரடாய்நேக்குநீசொல்லுகிறது நன்ருய்த் தெரியட்டுமே.

நந்திச்சாம்புவன்சொல்-வசனம்.

ஏயாண்டேபாப்பாறஆண்டே அல்லாசாமி விசையநகராளுகின்றராசாவாம் அவங்கபெஞ்சாதியாம் அந்தஆண்டே செத்துப்போனுங்களாம் அவங்கஇங்கேவாந்தாங்கோ அவங்களுக்குகொயந்தைஒண்ணுயிக்குது அதுக்குநீங்கள்படிக்கிறீங்களே அதைச்சொல்லிக்குடுங்கோ ஒங்களுக்குவாய்க்கரிசி விற்றுமொய்த்துண்டு விற்றகாசி ங்கைபிலேயிக்குது அதுதாறேன்பாப்பாறஆண்டே.

உபாத்தியாயர்சொல்-வசனம்.

அப்படியேசொல்லிவைக்குறேன் நேக்கெதேஷ்டமாய் ரொக்கந்தைக்கட்டவேண்டும்.

நந்திச்சாம்புவன்சொல்-வசனம்.

நல்லது அப்படியேகேக்கிறதுதாரேன் இதோஇக்குதே இந்தக்கொயந்தையைத்தான் ஆண்டே

உபாத்தியாயர்சொல்-வசனம்.

அடா அறுதலேதேவடியாளபிள்ளாய் அது அப்படிஇருக்கட்டும் இந்தப்பயல்பேரென்னடா

நந்திச்சாம்புவன்சொல்-வசனம்

இந்தச்சின்னஆண்டேபேருவீரகுமாரனுண்டே

உபாத்தியாயர்சொல்-வசனம்

ஆனல்நேக்குத்தெரியவரும் நான்கல்வியும்வித்தையும் கற்பித்துக்கொடுக்கிறேன் போடாபோ

உபாத்தியாயர்சொல்-வசனம்.

அப்பாவீரகுமாரா இப்படிஎாகிழக்குத்திக்குநோக்கிப்பிள்ளையாரைக்குட்டிக்கொள்ளு.

வீரகுமாரன்சொல்-வசனம்

மகாபாக்கியம்என்ன குருவாகியஉபாத்தியாரே

உபாத்தியாயர்சொல்-வசனம்.

அடாபயலே வீரகுமாரா நான்முன்னேசொல்லிக்கொண்டுபோ கிறேன் நீபின்னாலே சொல்லிக்கொண்டுவாடா

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியேசொல்லுகிறேன்சுவாமி

உபாத்தியாயர்சொல்-வ-ம்-கணபதிதுணை.

வீரகுமாரன்சொல்-வ-ம்-கணபதிதுணை.

உபாத்தியாயர்சொல்-வ-ம்

அரிவோம்நன்றாகுருவாழ்க குருவேதுணையென்றுசொல்லடா

வீரகுமாரன்-சொல்லல்.

அரிவோம்நன்றாகுருவாழ்ககுருவேதுணை.

(உபாத்தியாயர் சொல்-வ-ம்.) அடாய் வீரகுமாராஉயிர் மெய்யெழுத்துச் சொல்லித்தருகிறேன் சொல்லடாப்

(வீரகுமாரன்சொல்-வசனம்) அப்படியேசொல்லுகிறேன்சுவாமி

உபாத்தியாயர்வீரகுமாரன்சொல்-ஜம்பை-இ-ம்-புன்னாகவராளி

ஆகிநல்சுபாமோஸ்த்தலங்காரகுருவேதுணை
ஆனைமுகவன்றுணையருள்வாணிதுணையே
அரிநமோத்துடன்சிந்தம் அ ஆ அரியிதுவும் இ ஈ யிது
உ ஊ உயர்ந்தசொல் எ ஏ றுதியுள்ள ஐ யிது
ஒ ஓ எவ்வாத ஔ உம்மையுள்ள ஃ உயிரெழுத்துமே
க ங ச ஞ கருணையுடணயிது
த ந ப ம தண்மையுள்ள ய ர யிது
ல வ ழ ள லலிதமுள்ள ற ன யிது
இலக்கியத்திலுள்ளவெழுத்திது வீரகுமாரா
இலக்கணமுமிதிலுளதுஇன்பமுடனறிவாய்

(வீரகுமாரன்சொல்-வ-ம்.) அப்படியேதெரிந்துகொண்டேன்

வீரகுமாரன்உபாத்தியாயருக்குச்சொல்-விருத்தம்.

இ-ம்-ஆனந்தபைரவி.

குருக்களேசொல்லக்கேளீர்குறித்துநற்கல்வியெல்லா
முருக்கமாய்கற்றுக்கொண்டேனுமக்கினிப்ரயாசையில்லை
திருத்தமாம்வேட்டைக்கானசிலநூலுங்கற்கவில்லை
நருக்கெனவெனக்குச்சொன்னால் நாணிவித்தையுங்கற்பேனே

வ-ம். சரணஞ்சரணமையா ஆசாரியரேதங்கள் எனக்குக்கற்றுக்கொடுத்த இலக்கணவிலக்கியஞ் சீராய்கற்றுணர்ந்தேனுதலால் சத்

ஆருக்களை செயஞ்செய்யவும் வேட்டையாடவும் வில்வித்தையுங்கற் றுக்கொடுக்கவேணுமையா சுவாமி உபாத்தியாயரே

உபாத்தியாயர்சொல்-வசனம்

ஆனுவிர்தவில்லை இப்படிபிடிக்கக்கோள்

வீரகுமாரன்சொல்-வ-ம்.

அப்படியேபிடித்துக்கொண்டேனையா.

உபாத்தியாயர்சொல்-வ-ம்

பிடித்துக்கொண்ட வில்லுக்குநேராய் அம்புவைத்துபிடித்துநா ணியையிழு.

வீரகுமாரன்சொல்-வசனம்.

நாணியையிழுத்தேன் அம்புபாந்துபோய்விட்டது சுவாமி.

உபாத்தியாயர்சொல்-வசனம்

இதுதான்விற்பயிர்ச்சிகற்றுக்கொண்டாயா வீரகுமாரா

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியே தங்களாசீர்வாதத்தால் சகல கலைக்கியானங்களும் வி ல்வித்தை முதலானதுங் கற்றுக்கொண்டேனையா சுவாமி

உபாத்தியாயர்சொல்-வசனம்.

நீ நல்சிரஞ்சீவியாய்சுகமோடுவாழ்ந்திருக்கக்கடவாய்

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியே தங்கிச்சாம்புவ கொடுக்கும் பரிசுபெற்றுக்கொண்டு போய்வாருஞ்சுவாமி.

பொதுவிருத்தம்-இ-ம்-கல்யாணி.

வில்வித்தைகற்றபின்புவீரகுமாரனுநடந்தான்வேட்டையாட
வல்லயம்வாகுகட்டிவரிசையாயுதந்தரித்துவனமுட்சென்று
தொல்புவியோர்களுமேத்தச்சூராதிசூரனெனத்தொழுதுபோற்ற
சொல்லரியவனத்திலுள்ளமிருகமெல்லாம்வேட்டையாடத்துவக்கினானே

வ-ம-அதோகேப்படியென்றால் இப்படி வீரகுமாரனுனவன் தன துருவாகிய உபாத்தியாயரிடத்தில்கல்விகளும் வித்தைகளும் செம் மையாய்கற்றுணர்ந்து தனது தாய்சொர்ணகாந்திக்கு சொல்லாமல்தனி யே அடவியிற்சென்று மிருகங்களைவேட்டையாடுகிறவிதங்காண்க.

வீரகுமாரன்வேட்டையாடுகிற-தரு-இ-ம்-கல்யாணி-அடதாளம்.

பல்லவி.

இந்தவில்லுக்கெதிர் வனமிருகங்கள்

அநுபல்லவி.

அந்தமாகயிவ் விந்தைதனில்வாழ்
தந்திகாடியின் மங்கைகளெல்லாம் இந்த

சரணங்கள்

குடலைப்பிடிக்கிடுவேன் எந்தனப்பால்
குத்திவைத்திடுவேன்
அடல்பெருமானு மதோகூடிவருகுது
அம்புகோடுங்கரெண்டு கும்பலாய்விழுந்தது இந்த
சிங்கங்கள் பேய்கிறது அதைகண்டு
செந்நாய்கள்பாய கிறது
பங்கமில்லாமலே பத்துக்கடம்பைகள்
பரிவாய்மெய்குலைதன் னம்பார்கிழிந்துடம்புகள் இந்த
காட்டுப்பன்றியின் கூட்டமிருகங்கள்
சதறியெடுக்க தோட்டம்
தாஷ்டிகமாயொரு வேங்கையும்வந்தது
தனியெழுந்தஞ்சைம்பாற் றுனுயிரிழந்தது இந்த

பொதுவிருத்தம்—இ-ம்-பூரி—கல்யாணி.

வீரகுமாரராசன்வேட்டைகளாடும்போது
வாரணஞ்சூழ்க்காட்டின்வலியதோர்வேட்டைக்காக
பாருளோர்புகழ்குபேரன்பண்புறம்புதல்வனான
தீரனுமழகுசித்திரசேனனும்வருகின்றானே

வ—ம்-இந்தப்பிரகாரம் வீரகுமாரன் காட்டில்மிருக வேட்டைகளாடிக்கொண்டிருக்கும்போது குபேரன்மகனாகியசித்தி சேனமகாராசன் அந்தவனத்திலவனுமேவேட்டையாடவருகிறவிதங்காண்க

சித்திரசேனன்வருகிற-தரு- இ—ம் பூரிகல்யாணி-ஆதி நாளம்.

பல்லவி.

சித்திரசேனனும்வந்தானே சிங்காரமாக

அநுபல்லவி.

சித்திரசேனனும்வந்தா னெத்திசையும்புகழு
முத்திராதிசைக்குபேரன் பெற்றருளியகுபேரன்—சித்தி

சரணங்கள்.

வில்லுங்கையில் கொண்டு பரிமேலேறி
மெய்யிற்கவசம் பூண்டு வனமிருகத்தை
கொல்லமனதினினைந்து கொல்புலி போலச்சினந்து
வெல்லும்மின்றுதபுனைந்துவேட்டைக்காக முனைந்து-சித்தி
வேட்டையாடத் துணிந்து ஆயுதங்கள்
விதவிதமாக வணிந்து தளகர்த்தர்கள்

கூட்டமாய்நிறைந்திருக்கக் கொற்றவர்முனைந்துமெய்க்கப்
பூட்டியபணிஜொலிக்கப் புனிதவீரர்கள்மொய்க்கச்-சித்தி
மருடன் சிரசிற்றுன்ன இரத்நபதக்கமின்ன
மார்பின்மணிபோல் மின்ன மலர்த்தாரும்
விசித்திரமுடனுட வேடர்வில்லியர்கூட
நகைசேர்வீரர்முன்னோட நாவலர்கொண்டாட-சித்தி

சித்திரசேனன்சொல்-வசனம்

ஆமடா அடா படைத்தலைவா மந்திரிபிரதானி வேடர்வில்லியர்களே இதோ இந்தஅடர்ந்தவனத்தில் கெம்பீரத்துடனொரு புலியானது வசித்திருக்கிறபடியால் அதைக்கொல்லவேண்டியதனால்நீங்கள் நாலுபக்கத்திலும் விருக்ஷங்களைத்தாவி வலைகட்டுங்களடா பார்ப்போம் வேடாவில்லியர்களே

வேடர்சொல்-வசனம்

அப்படியே தங்களுத்தரப்படிக்குநாங்கள் நாலுபக்கம்வலைகட்டி வந்தோமையா

சித்திரசேனன்வேட்டையாடுகிற-தரு-இ-ம்-தோடி-அடதாளசாப்பு

பல்லவி

தொடுப்பேன் பாராய்-வீரக்கணை
விடுப்பேன் பாராய்

அநுபல்லவி

தொடுத்தகணையுமிப்போ தூரம்போயது
துரிய ரத்திற்பட்டு துணுக்கையேயானது-தொ

சரணங்கள்

அக்கினிக் கணையும்-கூர்மைதங்கும்
அரனார்தன் கணையும்
திக்குகளதிர்ந்திடச் செய்யும்நற்சரங்களும்
தேவர்களைவெல்லும் திசைமுகன்கணைகளும்-தொ

சித்திரசேனன்சொல்-வசனம்

ஆ-ஆ-ஆ மந்திரிபிரதானிகளே என்னஆச்சரியமென்ன ஆச்சரியம்பார்த்தீர்களா நாம்வலைகட்டி வேட்டையாடினதில் அந்தப்புலியானது வலையையறுத்துக்கொண்டு விட்டோடுகின்றது ஆகையால்நீங்களெல்லாம் எனதுகூடவே ஓடிவாருங்களடிக் கொஞ்சேனைகளே

பொதுவிருத்தம்-இ-ம்-பந்துவராளி

வலைதனையறுத்துமந்த வலியதோர்வேங்கைதானும்
சனுதியாவனத்திலோடத் தாரணிவேந்தனான
நலமுடன்வீரகுமார னுடியப்புலியைக்கண்டு
சிலைதனைநாணியேற்றி சினத்துடன்றுணித்திட்டானே

வசனம்

இந்தப்பிரகாரஞ்சித்ரசேனன்வலையிலிருந்துவிடுபட்டபுலியானது வனததிலோட அங்குவேட்டையாடவந்த வீரகுமாரனந்தப்புலியைத் துணிக்க சித்திரசேனன்கண்டு வீரகுமாரனைக்கேட்கிறவிதங்காண்க

சித்திரசேனன்சொல்-வசனம்

ஆரடா அடாசிறுபயலேநான் வேட்டையாடித்துரத்திக்கொண் டுவந்தபுலியை நீமறித்ததைத் துணிக்கலாமா இது ஒருவீரத்தன்மையா சபாசுநன்றாகயிருக்கிறதடா பயலே

வீரகுமாரன்சொல்-வசனம்

நீயாரடா என்னைக்கேழ்க்கிறவன் நான்வேட்டையாட வந்திருக்கு ம்வனத்தில் இந்தப்புலிவந்தபடியாலதை என்னம்பால் துணித்தேன் நீயப்படி துணிக்கிறவன் உன்கையாலாகாமல் இவ்வளவுதூரந்துரத்தி க்கொண்டுவந்தாய் அடாநீயொருசேவகன்றான் நல்லதாகட்டும்

சித்திரசேனனுக்கும் வீரகுமாரனுக்கும்-சம்வாதம்

கண்ணிகள்-இ-ம்-பந்துவராளி-ஆதிதாளம்

ஆரடாநீயென்னை — யாட்டுமென்கிறாய்
ஆரடாவுன்பெயரை — யறியச்சொல்வாயே

வீரகுமாரன்-சொல்லல்

ஆரடாநீயெந்தன் — பெயரைக்கேட்கிறவன்
ஆரடாவுனக்கிந்த — வாண்மைகொடுத்தவர்

சித்ரசேனன்சொல்லல்

ஆண்மையிலையிப்போ தன் — னங்கம்பிளந்திடுவேன்
சாண்பயலென்றல்லோ — நான்மனம்பொறுத்தேன்

வீரகுமாரன்-சொல்லல்

ஆண்மைபேசித்திலை — கீழாகவிழுகிறாய்
வீண்வார்த்தையல்லவோ — விலகிநீபோடா

சித்ரசேனன் சொல்லல்

விலகிப்போடாவென்று — விருதுகள்பேசாதே
சிலையைவளைத்துச்செழுந் — தீக்கணைதொடுப்பேன்

வீரகுமாரன் சொல்லல்

சிலையைவளைத்துநீ — செழுங்கணைதொடுக்கவும்
பலனுனக்குண்டோமற்ற — பாருளோர்க்கிலையோ

சித்ரசேனன்-சொல்லல்

வையந்துதிருபேன் — மைந்தன்சித்ரசேனன்
கையம்புக்கெதிருண்டோ — கழறடாபயலே

வீரகுமாரன் சொல்லல்

தைடல்சொர்ணகாந்தித் தனிப்பன் வீரகுமாரன்
மெய்யுங்கணைக்கிடேன்டோ பேசடாமுடா

சித்ரசேனன்-சொல்லல்

எதிரில்லையென்றுநீ என்னுடைவிருதுகள்
சதிராய்ப்பேசுறாய்நான் தழற்கணைவிடுப்பேனான்

வீரகுமாரன்-சொல்லல்

அதிகபலத்தினாற் தழல்கணைவிடுக்கவே
எதிராகவந்தாய்நீ யென்முன்னிற்பாயோ

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-நாட்டை

எதிராகவென்முன்னே இத்தனைத்தளங்கள்சூழச்
சதிருடன்புரவியேறிச் சண்டைகள்கொடுக்கவந்தாய்
சிதறியேதளங்களெல்லாஞ் சின்னபின்னங்களாக
உதிரநீர்பெருகியோட வுன்னையேயடிப்பேன்பாராய்

வசனம்

ஆடா அடா எனக்கெதிரியாக வென்முன்னின்று சிலசேனைகளைக்கூட்டிக் கொண்டுவந்து விருதுகள்பேசுகிறாய்உன்சேனைகளையெல்லாம் சின்னபின்னப்படுத்தி புத்திரவெள்ளம்பெருக அடிப்பேன்பாரடா ராசகுமாரனே.

சித்ரசேனன்சொல்-வசனம்

ஆ-ஆ-ஆ சபாசடா சிறுபயலே சற்றும்பயமில்லாமல்பேசுகின்றாயே நீ எனக்கெவ்வளவு ஓடிப்போய்விட்டா ராசகுமாரனே

வீரகுமாரனுக்குஞ்-சித்ரசேனனுக்கும்-உயுத்தம்
கண்ணிகள்-இ-ம்-நாட்டை-ஆதிதாளம்

வீரகுமாரன்-சொல்.

எவ்வளவென்தன் முன்னே சித்ரசேனா எனக்
கீடொருவரில்லையடா சித்ரசேனா
தெள்ளியபுவிக்குநீயென்ன சித்ரசேனா வீணாய்
சாகாமற்றப்பிப்போடா சித்ரசேனா

சித்ரசேனன் சொல்

தப்பிப்போடாநீயென்று வீரகுமாரா மெத்தச்
சௌரியமுப்பேசாதடா வீரகுமாரா
செப்பமுடனென்னையம்பால் வீரகுமாரா உன்னைச்
சித்ரவதையுஞ்செய்வேன் வீரகுமாரா

வீரகுமாரன் சொல்.

அடிக்கவுந்திராணியுண்டோ சித்ரசேனா இனி
அதட்டாமலோடிப்போடா சித்ரசேனா

அடிக்கடிக்கவன்னைச் சித்ரசேனா இப்போ
துணிப்பேனென்கையம்பால் சித்ரசேனா

சித்ரசேனன்சொல்.

துணிப்பேனென் றவிருது வீரகுமாரா வீணுப்
சொல்லாயனோடிப்போடா வீரகுமாரா
இனிவுறவென்றன் கனை வீரகுமாரா உன்னைச்
சேதித்துவிடுவடா வீரகுமாரா

வீரகுமாரன்சொல் விருத்தம் இ-ம் காம்போதி

சேதிப்பேனென் றசொன்ன சேவகாஉன் றனத்தை
பூதியவுமிபோலாக்கியுந்தன் தேகத்தையம்பால்
பாதியாய்க்கிழித்துன்னைப் பழித்தநாக்கையுமறுத்து
வோதியசப்தமேதா னுகந்துமேமுடிப்பேன்பாராய்

வசனம்

ஆரடா அடாசித்ரசேனா என்னைகொல்லுவேனென் றுசொல்லுஞ் சேவகன்நீதானா ஆ-ஆ நல்லதுஉன்னுடையசேனைகளைக்சாற்றிலகப்பட்ட உம்போற்பறக்கடித்துஉன்னையும்பிடித்து என்னைப்பழித்தநாவை யும் அறுத்துக்கட்டிக்கொண்டுபோவேன் என்னுடையசபதத்தைப்பாரடா சித்ரசேனா.

சித்ரசேனன்சொல்-விருத்தம் இ-ம்-பந்துவராளி

கள்ளனைப்போலேயுந்தன் கடும்புலிதனையறுத்து
தெள்ளியேபேசவந்தாய் திறமதுவுனக்குமுண்டோ
துள்ளியாடுமேதான் சும்குமோபொதிமைத்தாலும்
உள்ளத்திலிவைகளெல்லா முணர்ந்துநீகேட்டிடாயே

விசனம்.

அடாவீரகுமாரா கள்ளனைப்போலே என்புலியையடித்ததுமல்லாமல் என்முன்னே தீரனுப்பேசவந்தாயுனக்குசௌரியமுண்டா நல்லதிருக்கட்டும் துள்ளியமாடு பொதிமைச்சுமக்குமா அதுபோலநீதுள்ளிப்பேசுறாய் சும்மா யுன்னிருப்பிடம்போய்ச்சேரடா பயலேவீரகுமாரா.

வீரகுமாரன்சொல் வசனம்

அடாய்சித்ரசேனா என்னைப்போகச்சொல்லுகிறவன் நீதானா நல்லது உன்னைப்பிடித்துகட்டினேனல்லபாரடாய் சித்ரசேனா

பொதுவிருத்தம் இ-ம் புன்னாகவராளி.

ஆனதோர்சித்ரசேன னங்கையைப்பிடித்துக்கட்டி
தானகவேட்டையாடக் கடுகவேவீரகுமாரன்
றானுமேவருமார்க்கத்திற் றனர்விலாதவங்கள்செய்யு
மானமேறுகதிரபாஞ்சால முனிவரும்வருகின்றாரே

வசனம்.

அதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் வீரகுமாரன் சித்திரசேனனைப்பிடித்துக் கட்டிக்கொண்டு வருஞ்சமயத்தில் அந்தவழியாகப் பாஞ்சாலமுனிவர் எதிராகவருகிறவிதங்காண்க

பாஞ்சாலமுனிவர்வருகிற-தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

பாஞ்சாலமுனியும்வந்தார்-தவத்தினுயர்
பாஞ்சாலமுனியும்வந்தார்

அநுபல்லவி.

காஞ்சியேகம்பனை வாஞ்சையாய்த்துதிசெய்யும் பாஞ்

சரணங்கள்

காவியுடையை பணிந்து-கஞ்சமணிக்
கடலைதாண்டியுந் துணிந்து
பூவிலிறைபிரமன் புகழ்ந்திடுமாயேசன்
புனிதபதந்துதிக்கும் புண்ணியனெனுமீசன்-பாஞ்
கையிற் கமண்டலமும்-புலித்தோல்
கலைத்தோலினுதனமும்
மெய்யில்வெண்ணீறு பேன்மைருத்திராட்சமாட்
மேலுலகத்தினில் வானவர்கொண்டாட-பாஞ்
மும்மலங்களை யறுத்துப்பாவையீ
மோகமதனைவெறுத்து
செம்மாணிக்கிடுந் தேசிகன்தனைத்துதித்து
செய்யும்புண்ணியரென கவபகஞ்சொல்லவுதித்து-பாஞ்

பாஞ்சாலமுனிவர்-வீரகுமாரனுக்குச்சொல்
விருத்தம்-இ-ம்-சாவேரி.

அடர்ந்தகற்கானகத்தி லாரப்பாசினமுன்கொண்டு
திடமுடன்குபேரனீன்ற செல்வனைப்பிடித்துக்கட்டி
நடக்கிறாய்பாரைநோக்கி நடந்தகாரணங்களென்ன
தொடர்ந்துநீசொல்லியப்பாற் றுணிவுடன்செல்லுவாயே

வசனம்.

ஆரப்பா இந்தகானகத்தில் மிகுந்தகோபங்கொண்டு திடமுடன் குபேரன்புத்திரனாகிய சித்திரசேனனைக்கட்டிக்கொண்டு நடக்கின்றாய் அவனுக்கிந்தகாரணம் வந்தவிதமென்ன எனக்குநன்றாய்தெரியும்படி சொல்லியப்பால் நீநடவும்பிள்ளாய்

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

தாட்டிகமுனியேகேளாய் தனித்துநான்காட்டிற்சென்று
வேட்டைகளாடும்போது வேங்கையைக்கண்டுநாணி
பூட்டியபெண்ணைப்போலப் புரமுடன்கொன்றேனப்பேர்
காட்டினிலிவன்போர்செய்தான்கட்டிக்கொண்டேகின்றேனே

வசனம்.

சரணஞ்சரணமையா முனிநாதா நான் காட்டில் வேட்டையாடப் போகிறபோது அங்கே ஒருவேங்கையானது வர அதைநான் யென்னம்புவிடுத்துக்கொன்றேன் அதின்கூட ஓடிவந்த இவன் நான் துரத்திவந்தபுலியை நீயெப்படி கொன்றாயென்று போர்செய்தான் ஆகையால்கட்டிக்கொண்டு போகிறேன் சுவாமி.

பாஞ்சாலமுனிவர்சொல்-விருத்தம்-இ-ம்-மோகனம்

வானுளோர் புகழ்குபேரன் மைந்தனைச்சமரில்வென்ற
பானுகோடிப்ரகாச பாலநீயேசமர்த்தன்
யானுமேமிகமெச்சிட்டேனணிசித்திரசேனன்றன்னை
ஈனமாய்ப்பிணித்தயிப்போதேவிடுத்திடாயே

வசனம்.

கேளுப்பிள்ளாய்வீரகுமாரா வடதிசையாளுங் குபேரன்மகனாகியசித்திரசேனனைசமரில்வென்றாய் நீசமர்த்தனானதையால்உன்சாமர்த்தியத்தைநான் மெச்சிக்கொண்டேன் இப்போதிவனைகயிரவிழ்த்துவிடுமப்பா ராசகுமாரனே

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

ஐயனே தாங்கள்சொன்ன வாக்கினை தவிர்வதுண்டோ
வெய்யனேசித்ரசேன வேந்தனையிதோவிடுத்தேன்
மையுமென்வினைநீங்க நல்லருட்கிருபைதன்னை
செப்புமேலவர்கள்போற்றுஞ் சீலமாமுனியேபோற்றி

வ-ம்-கேளுமையாமுனிநாதரே தங்களுத்தரவின்படி இவனைவிட்டுவிட்டேன் ஆகையால் நீரென்மீதருட்கிருபைகூர்ந்து எனக்கு நல்லவரமும்நல்லகலைகளும் கொடுக்கவேணும் சுவாமிமுனிநாதா

பாஞ்சாலமுனிவன்சொல்—வசனம்.

அப்படியேகொடுத்தேன் வாங்கிக்கொண்டு சுகமாய்வாழ்ந்திருநான்போய்வருகிறேனப்பா ராசகுமாரா

வீரகுமாரன்சொல்-வசனம்.

அந்தப்பிரகாரமே உங்களனுக்கிரகத்தினாலெல்லாம் பெற்றுக்கொண்டேன் சரணம்சரணம் நீர்போய்வாருஞ்சுவாமி

பொதுவிருத்தம்-இ-ம்-பைரவி

அஸ்திரம்பலவுமீய வையருமுபதேசித்து
வித்தைகளெல்லாஞ்சொல்லி விதமுனிசென்றபின்பு
கொற்றவன்குடிசைதன்னைக் குறித்துமேவருகும்போது
இந்தலந்தன்னிற்சாம்ப னினித்தேடிப்புலம்புவானே

வ-ம்-இந்தப்பிரகாரம் வீரகுமாரன் அஸ்திரங்களும் வித்தைகள் யாவும்கற்றுக்கொண்டு பாஞ்சாலமுனிவர் போய்விட்டபின் தனது

சேரியைநோக்கி வருஞ்சமயத்தில் அவ்விடம்நந்திசாம்புவன் வீரகுமாரனைக்காணாமற் புலம்பிக்கொண்டு வருகிறவிதங்காண்க

நந்திச்சாம்புவன்-தேடுகிற தரு-இ-ம்-புந்நாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி

ஓகோ வீரகுமாரா-எங்கேபோனாய்
ஓடிவருவாய் நேராய்

அநுபல்லவி

வாகாயடவிபுலி வதைசெய்யப்போனாயோ
வாளேந்திபாசனை மடக்கிப்போர்செய்கிறாயோ

சரணங்கள்

காடுமலைக ளெல்லாந்தேடியுங்காணுக்
காரணமென்சொல்லலாம்
வாடும்பயிர்போலுந்தன் மாதாவடைவாளே
மகனேமகனேயென்று மடிந்துதான்போவாளே - ஓகோ
உன்னை வயிற்றிலேவைத்திருந்த
தொருத்திபாய்வணந்தனிலே
நன்னிலைதங்கையாய் நானெண்ணிகாத்திட
நாரணன்போலிங்கு சீராய்பிறந்திட - ஓகோ
தேடிக்கா லயர்ந்துதேஜயேயானந்
திக்குகளிலிப்போதே
நாடிவுனைவளர்த்த நான்றேடிவருகவும்
ஞாயமுனக்கிதுதானோ சேயனேகருதியும் - ஓகோ

வீரகுமாரன்-விருத்தம்-இ-ம்- ஆனந்தபைரவி

என்னையெனைமைத்தாவையா இதோவந்தேன்சமுகந்தேடி
அன்னியவிந்தைகாட்டிற் றுணிந்துநீர்வந்ததென்ன
பன்னியவென்றன்தாயார் பக்கல்போயிருந்தீரோதான்
நன்னயமாகவென்னை நாடியேயுணர்த்திடீரே

வ-ம்-கேளுமையா நந்திச்சாம்புவரே இந்தக்காட்டில்என்னை யேன்றேடிக்கொண்டு இவ்வளவுதூரம்வந்துவிட்டீர் என்றாயாரிடத்திற் போயிருந்தீரா அவளென்னசொன்னாள் சொல்லுமையா.

நந்திச்சாம்புவன்சொல்-விருத்தம்-இ-ம்-காம்போதி

பாரியகாட்டில்சென்று பலவேட்டையாடும்போது
அரண்யமிருகங்களுன்னை யடித்திட்டாலென்னசெய்வேன்
சேரியிற்பிறந்தசின்னஞ் சிறியனுமுனக்குத்தானே
காரியமேனேவையா கழறுவாயெனக்குத்தானே

வ-ம்-கேளாயப்பாவீரகுமாரா நீயிந்தபெருங்கானகத்தில் வந்து வேட்டையாடும்போது இதிலுள்ள துஷ்டமிருகங்கள்வந்து உன்னைக்

கொன்று விட்டாலென்னசெய்வேன் நம்சேரியிற்பிறந்த நீசிறியவனு ச்சுதே இப்போர்கொத்தகாரியங்களைச் செய்யலாமாசொல்லுமப்பா வீ ரகுமாரா

வீரகுமாரன்சொல்விருத்தம்-இ-ம்-சுருட்டி.

குப்பையினிலிருந்தாலுங் குண்டுமணிதனதிரங்குன்றுமோதான்
இப்புவியையாளுவதற்கெந்தனுக்குத்திராணிகளுமில்லையே வீணாய்
தப்புடையசொற்களென்முன்சாற்றவந்தாயுந்தனுக்கிதுதகாதே
யப்புறம்போயடவியில்வாழ்நரிகளுக்குநானுமிப்போதஞ்சுவேனோ

வ-ம்-என்னவார்த்தைசொல்லவந்தீர் குண்டுமணியானதுவெகுகோ ளாய்குப்பையில்மறைந்திருந்தாலும் அதினுடையபிரகாசம்போய்விடு மா அப்படிபோல்நான் எந்தவிடத்திலிருந்தபோதிலும்என்பராக்கிரம ம்போய்விடுமோபோகாது எனக்குசௌரியமுமில்லையா வீணாயென்ன பேச்சு என்முன்னே பேசவந்தீர்போம்போம் இந்தகாடிபுலிசிங்கங்க ளுக்கு நான்பயப்படுவேனோ நந்திச்சாம்புவரே,

நந்திச்சாம்புவர்சொல்-வசனம்

கேளப்பவீரகுமாரா உன்னுடையவீரபராக்கிரமத்தை நானென் னென்றுசொல்லுவேன மெத்த சந்தோஷந்தான் நமது வீட்டுக்குப் போவோம் வாருமப்பா

வீரகுமாரன்சொல்-வ-ம்-நல்லது அப்படியே வருகிறேனையா.

பொது-வசனம்

இந்தப்பிரகாரம் நந்திச்சாம்புவன் வீரகுமாரனை அழைத்துக் கொண்டு வீட்டுக்குவருஞ்சமயத்தில் சொர்ணகாந்தியம்மாள்வீரகுமா ரனைக்காணாமல் புலம்புகிறவிதங்காண்க

சொர்ணகாந்திபுலம்பல்-கண்ணிகள்-இ-ம்-புன்னாகவராளி

ஜம்பை-தாளம்.

அம்புலியுங்கைபிடித்து அதிவீரசூரனைப்போல்
அழகுபசுங்கிளியே எங்கே யடவிசென்றாய்மகனே
இங்கேவிளையாடிக்கொண்டி ருந்தாயேயிப்போது
எங்குசென்றாயடாவீர சூரதிருமகனே
உன்றகப்பனிறந்தமுதல் சிறுவரைக்கும்வினையிலா
உனைநம்பியிருந்தேனடா ஒளிவதனமகனே
நம்பியிருந்தனடா நட்டாற்றில்விட்டெனை
நடுக்கானகம் போயங்கே நலிந்தையோவென்மகனே

அடவிதனில்வழிதெரியா தலைநின்றயோவழியேன்
ஐயோயிதற்கென்னசெய்வேன் அழகுதிருமகனே
பாலொழுகுமதிமுகத்திற் பாலாறதில்லையிப்போ
பாவனவேட்டையாடப் பயந்தாயோவென்மகனே
காலக்கொடுமையோவையோ கலிகாலத்தீவினையோ
கர்த்தர்க்கென்னசெய்தேன்டா கண்மணியென்மகனே
சலரைவைத்துசித்திரர்கள் தாவெழுதம்வகைபோலே
துரையுன்றுல்யான்வாழ வேணுமடாமகனே

சொர்னகாந்திசொல்—விருத்தம்-நாதநாமக்கிரியை.

அப்பனேவிரகுமாரா வாயுதத்துடனேயே
யிப்பவுமெங்கேசென்று யிவ்விடம்வந்துசேர்ந்தா
யொப்பிலாமணியேதேக மொளிபெறுமெங்கன்புத்ரா
செப்புவாய்நீயுஞ்சென்ற சேதியையெனக்குத்தானே

வ-ம். கேளுமப்பா குழந்தாய்விரகுமாராகையில்வில்பிடித்தபடி ஆயுதத்தோடு இப்போஎங்கேபோயிருந்தாய் ஒருமுகூர்த்த நேரமாகிவிட்டதே என தாஞ்சைக்கிசைந்த அழகுகண்மணியே நீபோய்வந்தசங்கதியைச் சொல்லுமப்பா.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்- ஆனந்தபைரவி.

தாடகைமலையிற்றேடி சம்பிரமதாகவேட்டை
யாடவேயினந்துமெசென் றங்குள்ளமிருகமெல்லாம்
காடியேகுபோனின்ற வையனைச்சமரில்வென்று
ஓடியேவந்தேனிப்போ துனதடி சரணமம்மா.

வ-ம் சரணஞ்சரணமம்மா என்னைபெற்றதாயே நான்தாடகைமலையிலிருக்குமலத்துட்சென்று அநகேவாசஞ்செய்யாநின்ற மிருகங்களைக்கொன்றதுமல்லாமல் வேட்டையாடவந்தகுபேரன்மகன்சித்ரசேனனையுஞ்சண்டையிற்செயித்து ஓடிவந்துன்னைக்கண்டேனம்மா.

சொர்னகாந்திபுலம்பல்-கரு-இ-ம்-சஹானா-ஆதி.

பல்லவி.

சதிசெய்யநினைந்தாயோடா வீரகுமாரா
சதிசெய்யநினைந்தாயோடா

அநுபல்லவி.

சதிசெய்யநினைந்தாயோ தகப்பனார்தான்மாண்ட
வசந்தன்னையில் விதமென்று நினையாமல்-சதிசெய்

சரணங்கள்.

அறியவனத்திற் செல்வாரோ-மிருகங்க
ளதனையெதிர்த்துக் கொல்வாரோயிப்பேர
பெரியோர்மொழியைத் தள்வாரோ-சிறியோர்
வெற்றியையுமேற் கொள்வாரோ-சதிசெய்

நீயோவயதில் சிறுபிள்ளை-உனக்கு
நேரும்புத்தியோ வெள்ளை-காட்டிற்
பேயோமிகவுங் முண்டு-நீயனுமிப்பேர்
பிழைமோசஞ்செய்தாயே கண்டு-சதிசெய்

உன்றகப்பனு மாண்டான்கானிற்சென்று
உலகமந்திரி யாண்டான்-அந்தபடி
என்னைமறந்துநீ சென்றாய்வேட்டை
எழிற்பாசுவையேய்க்கும் கன்றாய்-சதிசெய்

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

சொன்னநீதார்மதியையானுஞ் சூட்சமாயறிந்தேனிப்போ
தென்னிடத்தாயேநீதா னிருந்தபேரெனுங்கே
மன்னவனெங்கேசெங்கோல் வாழ்வதுமெங்கே பாச்சு
உன்னதமாயெனக்கு முரைத்திடுமிப்போதம்மா

வ-ம். கேளுமம்மாதாயே நீசொன்னசேதி தெரிந்துக்கொண்டேன் ஆதலால் நாங்காக அிசனயியப்படுவது அப்படியிருக்கட்டும்நீரிருந்தநகர நாடு பூமியாளுகையில் இவைகளெங்கேனது பிதாவாகியஉனதுமன்னவனெங்கேமாண்டானென்றுயே இதுகளெல்லாமெனக்குவிபாமாய்ச் சொல்லவேணுமம்மாதாயே.

சொர்ணகாந்திவீரகுமாரனுக்குச் சொல்புலம்பல்.

கண்ணிகள்-இ-ம்-ஆதி-துருவதாளம்.

பார்புகழும்விஜையநகர் நாங்கள்
பட்டணத்தையாண்டிருந்தோம்
வீரசூரதூக்தானும் கண
வேந்தனுந்தன்றந்தையாகும்
ஏகச்சக்ரமாப்விஜைய பாரகரை
எழிலுடனேயாளுகையில்
வாகுடையமன்னவனும் பாவி
மந்திரியின்வார்த்தைகேட்டு
சருவகிரியலையிற்சென்று மிக்கச்
சதிரிடனேவேட்டையாடி
வேரக்கண்ணைமன்னவனை பொல்லா
மந்திரியுபவந்துசேர்ந்தான்

வந்ததொருமந்திரியை நான்
மன்னவனுமெங்கேயென்றால்
விந்தையான புலியடித்து காட்டில்
வீரசூரர்மாண்டாரென்றான்
என்னுயிருஞ்சேனைகளும் இப்போ
வேதாதப்பிவந்தோமென்று
பொன்னணிமுடிதரித்து அந்த
பூதலத்தையாண்டிருந்தான்
உன்னையுநானுமாதங் செற்ப
மூண்டாகிநாளிருக்கும்போது
நன்னயமாஞ்செய்திகேட்டு என்னை
நாசஞ்செய்யநினைத்து
காவற்காரருடன்சொன்னான் அவர்
கருணையாண்டோழிகளில்
மேவுமதிகாரத்தோழி சித்ரவல்லி
மெல்லியாளுடனேசொன்னாள்
அவளும்வந்தெனக்குரைத்தாள் யாலும்
அறிந்தகட்சணநேரதில்
அர்த்தராத்திரிகாலத்தில் பொல்லா
அடவிதனிலேநுழைந்து
கர்த்தன்செயலிதென்றெண்ணி மனங்
கலங்கியேமிகத்தவித்து
சந்த்ரகிரிநகரடைந்து காட்டின்
சந்தனவிறகெடுத்து
அந்திடசனுநான்விற்று நானே
அங்கேநான்கழிக்கையிலே
அந்நகர்வாழ்மன்னவனும் என்மே
லாசைகொண்டழைக்கவுநான்
தன்னந்தனியாகவந்ததில் வந்து
தத்தளிக்கும்வேளையினில்
பேயும்பிசாசுகளும் என்னை
பிடித்துதின்னவந்தவுடன்
தாயெனுபகாளியும்வந்து வரச்
தந்துபேயுங்காத்தி
போயவளுஞ்சேர்ந்தபின்னால் நான்
பொங்குக்கணையாறுவந்தேன்
பாயுஞ்சலந்தனிலிறங்கி இந்த
பரிவுடனவந்துசேர்ந்தேன்

பிறைமெரியும்வெளிச்சங்கண்டு அந்தப்
 புறம்வழிகோராகவந்தேன்
உணவுமிலாச்சேரியினில் வரும்போ
 தொளிக்கரவனுதித்தான்
அந்தவேளைநாஞ்திகைத்து மெத்த
 அலைந்திருக்கும்வேளையினில்
நந்திச்சாம்புவனூர்வந்தார் அவரை
 நானுகண்டகமகிழ்ந்தேன்
ஆரெனக்கேட்டாரவரும் நான்
 ஆதியந்தமாகச்சொன்னேன்
சீருடனேகுடிசைவிட்டு என்னை
 செல்வமாகவெண்ணிவந்தார்
இந்தநற்குடிசைதன்னில் உன்னை
 சன்றேனப்பாகண்மணியே
நந்திச்சாம்பனுன்னைவளர்த்தார் அப்பா
 நடந்ததுசேதியாவுமிதே

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

அன்னையேஉணவிர்த்தாந்த மறிந்திட்டேனஞ்சவேண்டாம்
கன்னறிவாயிற்றுழ்ந்த நரியதும்பிறப்பதுண்டோ
சென்னியிற்கங்கைதிங்கட்டிகழீசனருளினாலே
முன்னைமந்திரியைக்கொன்று முடிசூட்டிவாழ்கலாமே.

வ-ம். கேளுமம்மா யெனைப்பெற்றதாயே நீர் சொல்லிகொண்டுவந்த்விருத்தாந்தமெல்லாம்நான்செவ்வையாயறிந்துக்கொண்டேன்சிங்கத்தின்வயிற்றில் நரிபிறக்குமா பிறக்காதுநான் பரமேஸ்வரனருளினால் அந்தமந்திரியைக்கொன்று முடிசூட்டிவாழ்வேன்நீபயப்படவேண்டாமம்மாதாயே.

சொர்னகாந்திசொல்-வசனம்

கேளுமப்பா வீரகுமாரா நீபுத்திமிகுந்து எப்போதெனைக்கேட்பாயோவென்றிருந்தேன் ஆகையாலிப்போது நீகேட்டபடியால்எனக்கென்ன இனிவேறுகுறைவுண்டோ அப்பாவீரகுமாரா

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-முகாரி.

நந்திச்சாம்புவரேயிந்த நாடாளுமன்னனோரோ
தந்தியூகியாரோ தாணியிற்புகழ்பெற்றோருக்கும்
விந்தைகள்யாதோவெல்லாம் விளங்கவேமெந்தனுக்கு
சொந்தமாயுரையுமையா சோர்விலாமனதுகந்தே.

வ-ம். ஐயா நந்திச்சாம்புவனோனென்றுசொல்லுகிறவனேகேளு
ம்இப்போதுகாம்வாசஞ்செய்கிறவூர்பெயரென்னஇந்தநகரையாளும்
ராசாயார் மந்திரி ப்ரதானிகளார் இந்தநகரத்திலென்னபுதுமைகளென்
ன அதிசயங்களுண் டிதுகளையெல்லாம் எனக்குநன்றாய் தெரியும்படி
சொல்லுமையா.

நந்திச்சாம்புவன்சொல்-விருத்தம்-அடாணா

இன்னிலமிகத்துதிக்கு மிகழ்வீரகுமாராகேளாய்
மன்னர்கள்புகழ்கோசலைமாநகர்தன்னையாளும்
உன்னதவக்ரன்புத்ரி யொளிதமிழ்ச்சிந்தாமணியென்று
மென்னவேபெயர்கொண்டேங்கி யிருக்கிறாளிதுதானப்பா

வ-ம். கேளுமப்பாவீரகுமாரா இந்தவூர்பெயர்கோசலைநகரம் இந்ந
ப்புரிபாலனஞ்செய்யும்படியான அரசனுக்கு ஒருபெண்ணிருக்கின்றாள்
அவளோதமிழ்ச்சிந்தாமணியென் னும்பெயர்கொண்டு கல்வியிலுயர்ந்த
வளாகவிருக்கின்றா ளிதுதானதிசயமப்பா வீரகுமாரா.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

தரைதனிலுள்ளவிலாபாவையர்மெய்க்கத்
தகைமையாய்வாழ்ந்திடநற்
பொறையயர்கோசலையரசன்பயின்ற
பொற்கொடியைப்புகழ்வால்
உரைசெய்யுங்காரணமறிகிலேன் துதிமிகு
மூச்சிதவ்வழிசையை
இருசெவிகுளிரவேயுரைசெய்யும்மணியி
லுலகினிற்சாம்புவனே

வ-ம். கேளுமையாஉலகத்தில்பாவையர்கள் மெய்க்கும்படியேநற்கு
ணங்களோடும்பெருமைகளோடுங்கூடிவாழும் கோசலையரசன்மகளெ
ன்றும் அவளபெயர் தமிழ்சிந்தாமணியென்றும் புகழ்ந்துசொன்னீரே
அவளுடைய வல்லமையென்ன, அவளுக்கந்தப்பெயர்வந்தவிதமென்ன அ
தை ஆதியோடந்தமாய் சொல்லுமையா நந்திச்சாம்புவனே

நந்திச்சாம்புவர்சொல்விருத்தம்-இ-ம்-கௌளிபந்து

சொல்கிறேன்கேளாயப்பா தொல்காப்பியநன்னூலோடு
மலையிலக்கணங்களிலக்கியந்தனையுணர்ந்து
தொல்லுலகினிலேவாழுந் துரைகளைத்தமிழில்வென்று
வல்லமையாலேகல்வி தல்லவளெனப்பேர்கொண்டாள்

வ-ம். கேளுமப்பாவீரகுமாரா அந்தத்தமிழ்சிந்தாமணி யென்னும்
பெண் தொல்காப்பியம் நன்னூலிலக்கிய இலக்கணங்களிற் சிறந்து

அக்கல்வியின்லாசராஜாக்களை தமிழில்வென்றுள் ஆகையால் அவளு க்குத் தமிழ்ச்சிந்தாமணியென்னும் பெயருண்டாச்சுது அவளோ கல்வி யில் வல்லவளப்பா வீரகுமாரா.

### வீரகுமாரன் சொல்-விருத்தம்-இ-ம்-ரூபகம்.

ஆமையா நந்திச்சாம்புவரிஞரேகேளீரிப்போ
சோபனீணை விலாசமாதின் சுகுணநற்கல்வியெல்லா
மிழமாயுரைத்தீர்கேட்டேன் சிரிமைதகந்தரங்கான்
மாமனங்குளிர நீருமகிழுடனுரைசெய்வீரே.

வ-ர. கேளுமையா நந்திச்சாம்புவரே அந்தத்தமிழ்ச்சிந்தாமணியென் னும் பெண்ணின் கல்வியின்சிறப்பைசொன்னீர் கேட்டேன் அவளுடைய ரூபசவுந்தரியங்களென்னமோ அதைச்சற்றேசொல்லுமையா கேட்போ ம் நந்திச்சாம்புவரே

### நந்திச்சாம்புவன் தரு-இ-ம் மோகனம் அடதாளசாப்பு.

பல்லவி

அவளுக்குநிகரானவ ளவனியிலும்பெண்
ணுருண்டோ வீரகுமாரா

அநுபல்லவி.

புவனவாகாயத்தில் பாதாளத்திலுநேராய்
புண்யவதிபோல பெண்ணைக்காணலாமே அவளு

சரணங்கள்.

மேருமலையைப்பார்த்து மேளிகளுசெய்திடு
மேனமைசொரியும்ரெண்டு குசங்கள்பகல்
மெல்லியவள் துடை யழகைக்கண்டோணி
மெலிந்துமறைந்தஷ்ட கசங்கள வாணிற்
காரும்வடலை மயிரைக்கண்டோன்
கனவரும்பையுமிரு கழலைத்தினமும்பெண்
கூருமிவ்வுலகினி லவட்கிணையோபெண்கள்
கோதையொளியைப்பார்த்து வேணுங்கொடிகள் (அவளு)
வேலையும்வென்றுண்மேலாக் தவஞ்செய்வோரை
விரட்டியுருக்கும்ரெண்டு விழிகள் நல்ல
வேதவாணிமயில் குயில்கிளியமுதையும்
வெட்கச்செய்யு மவள்மொழிகள்நடையோடு
சோலையன்னங்களைப் பழிக்குமேனியேனுதா
சோபக்கினைதிரக் குருதருமகளுர்தம்
வாழ்ப்பருவமின்றுட்கு வையகத்துண்டோவிம்
வழுத்தவறியேன்பொற்பை யவளுக்கவளேசேடு (அவளு)

வாயினிறைந்தபற்கள் முத்தெனவழுத்தலாம்
வசனமுகமிருந் தோங்குப்சொல்ல
வாயொணாதபோதுமோ வயிடேகாந்தியை
யப்புவிசகீவாணி யெக்குப்புகழ்
ஆயிரநாவுடையசேடனாலும் சொல்லப்போமோ
பணங்கையுந்தமிழினிலரியாலும் வெல்லலாமோ
தூயவனிதையைப்பார்த் தோர்க்குச்சலிப்பேது
துதிபிலக்குப்யெனச்சொல்லலாமே யிப்போதுமவளும்

நந்திச்சரப்புவன்சொல் வசனம்.

கேளுமப்பா வீரகுமாரா அவளுடையவழகை யென்னுடையநாக்கால் நானென்னமாய்ச் சொல்வேனப்பா.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-ஆரபி.

கன்னலைப்பழித்தமிசுனைக் கண்டோர் றமிழினாலே
பண்ணியேவார்த்தைபாடி பாவினிற்செய்த்துமேலுந்
துன்னியேயணைபுரிந்துத் துரிதமாய்வருவேனிப்போ
தென்னையேயனுப்பிவையு மிடர்கள்சொல்லாபற்றனே

வ-ம் ஐயாநந்திச்சரப்புவரே அந்தத்தமிழ்ச்சிந்தாமணியென்னும்பெண்ணைக்கண்டுதமிழ்பாவினாலவளைவெட்கிப்போகும்படிசெய்துவைப்பதுமல்லாமல் மிகுந்தவழகினையுடைய அப்பெண்ணைக்கலியாணஞ்செய்துக்கொண்டுவருகிறேன தடங்கல்சொல்லாமல் என்னைநீர் சீக்கிரம் அனுப்புமையா நந்திச்சரப்புவரே

நந்திச்சரப்புவன் தெம்மாங்கு-இ-ம்-புன்னாகவராளி-அடதாளம்

தெந்தினனே தென்னனே தினதெந்தினனேதென்னனே
துரையேவீரகுமாரா நானுஞ்
சொன்னதோர்வார்த்தையைக்கேட்காமலே
விரைசேர்முலையாளை திரு
மங்கிலியதாரணஞ்செய்திடவே
நடப்பேனெனச்சொன்னையே இந்த
நகருக்கிருகாதவழிதடத்தில்
படிவாசற்றனுமுண்டு அதைப்
பரிவாகக்காக்குங்காவலானேன்
போரில்மிகூரான் அவன்
போகவிடானேயேதகைப்பான்
நாரியர்தன்சமர்த்தை இப்போ
நாக்கினாற்சொல்லமுடியாது
கோட்டைவாசல்காக்குற வீரர்
கோடான்கோடிபோகளுண்டு

நாய்க்கள் கவிராசர்கள் இவைறு குந்துமச்சேறு சித்ரமண்டபம் கச்சேரிமண்டபத்தில் களிற்றுயானைத்தந்தக்கட்டிலும் பெண்யானைத்தந்தக் கட்டிலும் போட்டிருக்கிறதாம் இன்னமென்னமோ இருக்கின்றதென் பார் அப்பா வீரகுமாரனெனுங் குழந்தாய்.

வீரகுமாரன்சொல்-வசனம்.

கேளுமையா நந்திச்சாம்புவரே நான் இதற்கெல்லாம்பயப்படமாட்டேன் அவளிடத்திற்போய்தமிழிற்செயித்துவருகிறேன் அவளென்ன அவ்வளவுசாமர்த்தியமுள்ளவளா அதைநான்பார்க்கவேண்டும் நீமாத்திரம் தடைசொல்லாம லுத்திரவுகொடுமையா நந்திச்சாம்புவரே.

நந்திச்சாம்புவன்சொல்-வசனம்.

அப்பாவீரகுமாரா நான் அவளுடையசேதியெல்லாமுனக்குச்சொல்லிக்காண்பித்தும் நீகேட்கமாட்டேனென்றாய் உனக்குவந்தவிதியெப்படியாகமுடியவிருக்குதோ வெனக்குத்தெரியாது ஆதலால்உன்தாயாரிடத்திற்சொல்லிவிட்டு அப்பாலந்துபோய்வாருமப்பா வீரகுமாரா.

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியேநான் என்றுதாயாரிடத்திற்போய்ச்சொல்லிவிட்டுப்போகிறேனையா நந்திச்சாம்புவரே.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-சஹானா.

அன்னையேகேளாயுன்முன் னறைகுவேனொருவிண்ணப்பம்
தன்னிகரில்லாதேசத் தமிழ்சொரிமணிமடந்தை
பின்னையான்றமிழில்வென்று மீசுரமணமுஞ்செய்து
நன்னயகீர்த்திபெற்று நான்வாறேன்விடைகொடம்மா.

வ-ம். சரணஞ்சரணமம்மா என்னைப்பெற்றமாதாவேநான் ஒருவிண்ணப்பஞ் சொல்லுகிறேன்கேளும் அதென்னவென்றால் இந்நகரத்தரசன்புதல்வியையும், வந்தராசாக்களை, கல்வியிற்செயித்து விவாகஞ்செய்துக்கொண்டுவருகிறேனாதலால் நான்போய்வரவிடைதாருமம்மா தாயே.

சொர்னகாந்திசொல்-வசனம்.

கேளாய்யென்னருமைக் கண்மணியே நீ இன்று மதிமாதவன் அப்படிக்கிருக்கநீபோய் அந்தத்தமிழ்சிந்தாமணியைச் செயஞ்செய்கிறேனென்றுசொல்லுகிறாய் அவளெப்படிப்பட்டவளோ நீயொன்றுமறியேன் அந்தேசத்து வீரர்களானைகளிருப்பார்கள் போகவேண்டாமப்பா வீரகுமாரா.

வீரகுமாரன்சொல்-வசனம்.

சரணமம்மாதாயே நீர்நல்லவார்த்தைசொன்னீர்நான்சுத்தவீரன் வயிற்றிற்பிறந்துபேதையாகி ஒருபெண்ணிற்குபயப்படுவேனோ என்ன வார்த்தைசொல்லுகிறாய் நான் எவ்விதமாகிலும்போய்வருவேன் உத்தாரம் தாருமம்மாதாயே.

சொர்ணசாந்தி-வீரகுமாரனுக்குச் சொல்லிப்புலம்பல்.

கண்ணிகள்-இ-ம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

என்மகனே கண்மணியே எத்தனைவிதஞ்சொன்னாலும்
கன்னியைவெல்வேனென்று கழறுகிறாய்மகனே
மன்னவர்களெல்லாமந்த மங்கையைவெல்லமாட்டாமல்
இன்னிலத்திறந்தாரே நீ யேன்போகிறாய்மகனே
வள்ளலானவுங்களையர்வனத்திலுயிர்விடுத்த
தெள்ளளவுமறியாம லேகுவேனென்றாய்மகனே
நல்லியமனர்தளர்ந்துத்தொல்புவியையானிழந்து
நல்லபிள்ளையாசையினால் நான்பிழைத்திட்டேன்மகனே
கூறுமிந்தவனத்தில்வந்துகொடியகாலத்தியல்பால்
யாரும்படாதபாடெல்லா மநுபவித்தேன்மகனே
சேரிவினைக்கறக்கிறசெல்வபத்திரகாளியம்மையி
னாருளாலுனையீன்றே னவனிதனில்மகனே
அருமையாகவுங்களையறிய வங்கள்செய்த
வரமகிமையாலேவந்த வள்ளலேகேளென்மகனே
துரையேவீரகுமாராசொன்னசொல்லைதடுத்து
துணிவுபுத்தியாலங்கே செல்வேனென்றாய்மகனே

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-தோடி

இத்தனைவிசாரமென்ன வெங்கைகானோடிப்போவேன்
சித்தமுங்கலங்கவேண்டாஞ் சீக்கிரமாகச்சென்று
உத்தமதமிழின்வெல்ல வொண்டொடிதனைமணந்து
பத்துநாளைக்குள்வருவேன் பரிவுடனனுப்புமம்மா

வ-ம். எனம்மாதாயேமிகவும்விசாரப்படுகின்றாய்நானெங்கேஓடிப் போகிறேன் நீமனதிற்சஞ்சலப்படவேண்டாம் நான்சீக்கிரமாயவ்விடம்போய்த் தமிழ்சொரிமடந்தையைத் தமிழில்வென்றுவிவாகஞ்செய்துக்கொண்டு பத்துநாளைக்குள்ளாகவருகிறேன் நீபயப்படாமல் என்னைச்சந்தோஷமாக யனுப்புமம்மாதாயே.

சொர்ணசாந்திசொல்-விருத்தம்-இ-ம்-ஸ்ரீராகம்.

குமரதனேநீபுமொந்தன் வார்த்தையைத்தடுத்துமேலுஞ்
செந்தமிழில்சிறந்தமாதைச் செயஞ்செய்துவருவேனென்றாய்

அந்தமாநகரிற்சென்று மரிவைபமணம்புரிந்து
வந்திடாயென்றனை மகனேநீவாழிவாழி.

வ-ம். கேளுமப்பா வீரகுமாராகாளுக்கென்ன விதத்திற்சொன்னுலுங்கேளாமற்றபித்து நீபோகிறபடியால் அந்தத்தமிழ்ச்சொரிமணிமடந்தையை நீபோய்செயஞ்செய்துவரும்படியாய் காளியினருளால்வாழ்த்தினேன் ஆகையால்நீசெயித்துவிவாகஞ்செய்துக்கொள்ளப்போகிறய்வாருமப்பா எனதாசைக்கிசைந்தமகனே.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-அடாணு:

மன்னியநந்திச்சாம்பு வள்ளலேகேளிப்போ
கன்னிவாழ்கோசலைக்குக் கடுகவேசெல்லவேண்டாம்
பொன்னூறுந்தந்துவெள்ளைப் புரவியுங்கூட்டிமெய்க்க
வென்னையுமனுப்புமையா வெழிற்பெருங்குணத்தினோரே.

வ-ம். ஐயாநந்திச்சாம்புவரேநான் சொல்வதைக்கேளும் கோசலைபுரியாளுந்தமிழ்சிந்தாமணிபிடத்தில் நான்போகப்போகிறேன் ஆதலால் யெனக்கிப்போ சிலவுக்கு நூறுபொன்னும் ஒருவெள்ளைக்குதிரையுங் கொடுமையா நந்திச்சாம்புவரே.

நந்திச்சாம்புவன்சொல்-வசனம்:

அப்பாவிரகுமாரா இந்தாநூறுபொன்னும் ஒருவெள்ளைக்குதிரையுங்கொடுத்தேன் சீக்கிரமாய்போய்வாருமப்பா.

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியேபோய்வருகிறேனையா நந்திச்சாம்புவரே

பொதுவிருத்தம்-இ-ம்-தோடி.

அம்மையார்பாதம்போற்றி யன்னையாரடிபணிந்து
சம்மதிசெய்துநந்திச் சாம்பனைகேட்டுக்கொண்டு
கொம்மைசேர்புரவியேறிக் கொற்றவன்மதனைப்போல
நம்மையுஞ்செயிப்பாருண்டோ நாட்டினிலெனநடந்தான்.

வ-ம். அகோதெப்படியென்றால்இந்தப்பிரகாரம்வீரகுமாரனைவன் சொர்னகாந்தியினிடத்தில் காளிப்பிரசாதவரமும்பெற்று நந்திச்சாம்புவனிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு தமிழ்சொரி மணிமடந்தையை தமிழிற்செயிக்கமகாவேகத்துடன் வீரபராக்கிரமங்கொண்டுபோகும்போது காளியைநினைத்துத்துதிசெய்கிற விதங்காண்க.

வீரகுமாரன்சொல்-தேவாரம்-இ-ம்-சங்கராபரணம்.

சுந்தரிகாளகண்டி கமலாசனத்திரிசூலி
சந்திரிமாரிதேவி வனதுற்கித்தாயேயென்றன்

சிந்தையினினைந்தவண்ணந் திருவருட்பொழியவேண்டு
மூர்த்தன்பாதத்தைநம்பி யுடன்பட்டேன்வரந்தாபோற்றி.

ஓம் சங்கரி கெங்காதரி சச்சிதாநந்தவுடம்மைநம்பி அவளைவெல்லப்புறப்பட்டேன் ஆகையால்நீர்என்சிந்தையில் நினைத்தவிதஞ் செய்விக்க வரந்தாருமம்மா தாயே.

பத்திரகாளியம்மன்சொல் வசனம்.

இதோவந்தேன் வந்தேனப்பா வீரகுமாரா உன்கருத்தில் நினைந்துவிசனப்பட்டு என்னையழைத்தவிதஞ்சொல்லுமப்பா.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-கேதாரகௌளம்.

பத்திரகாளியம்மா பாவையைத்தமிழில்வெல்ல
யுத்தமாய்ச்செல்வேனென்பா னுகந்தொருகுறைவாராமல்
சித்தம்வைத்தாளுமம்மா செங்கண்மாற்றங்கையேயின்
புத்திரன்கமலபாதம் போற்றினேன்போற்றினேனே.

வ-ம். சரணஞ்சரணம்பத்திரகாளியம்மாநான் கோசலைபுரியாளுந்தமிழ்ச்சிந்தாமணியை என்னுகல்வியால் வெல்லப்போகிறேன் ஆதலால்நீரென் பக்கத்திலிருந்துகாத்துரட்சிக்க வேண்டுந்தாயே.

பத்திரகாளியம்மன்சொல் விருத்தம்-இ-ம்-அடாணா.

என்னாசீர்வாதத்தாலே எழில்பெறவுதித்தபாலா
உனதெண்ணப்படியேபோனா லுகந்துமேசெயிப்பாய்மேலுங்
கனமுடனங்கிருக்கும் காவற்காரருக்குபாயம்
இன்பமுடன்சொல்வேனீயும் மதிப்படியியற்றுவாயே.

வ-ம். கேளும்எனதாசிர்வாதத்தால் பிறந்தவீரகுமாரா நான்சொல்லியயூகையின்படி நீபோய்காவற்காரர்களுக்குத் தகுந்தயூகைகள்செய்தால் அவளைவென்று கலியாணஞ்செய்துக்கொள்ளுவாய் அதெப்படியென்றால் அங்கேநீசெல்லும்போதெல்லா மிந்தபஞ்சாட்சரத்தை நாவிப்போதுல்செயலுஞ்செய்வாய் அந்தப்படியேநடவும் யான் போய்வருகிறேனப்பா.

வீரகுமாரன்சொல்-வசனம்.

சரணஞ் சரணந்தாயேதங்கள்வாக்குக்கெதிர்வாக்குண்டோநான் அந்தப்படியே நடக்கிறேன் நீர்போய்வாருமம்மா.

வீரகுமாரன்கோசலைபுரிக்குச் செல்லும்போது சொல்

தரு-இ-ம்-தோடி-அடதாளம்.

பல்லவி.

தமிழ்சொரிமணிமடந்தையை யான்றமிழினுத்
தாட்டிகமாய்த் தெளிப்பேன்

கமலாசனன் சொல்லல்.

இந்தவாறுக்கஞ்சிநீ நானோசேவகன் சொல்லடா-உன்
திராணியையறியலாம் நீயிங்குமேசற்று நில்லடா

வீரகுமாரன் சொல்லல்.

துணிவுடனீயென்னை நில்லென்றாலுனை விடுவேனோ இந்தத்
தொடையல்லால்மற்றோர் துணையாலுந் தொடுவேனோ

கமலாசனன் சொல்லல்.

தொடுக்கவுமுனக்குமேவலியுண்டோ கலங்கிழாய் விழுகிறாய்-பெருந்
தொனிசிங்கத்தைநரிகெலிப்பேனென்பதைப் போனீயழுகிறாய்

வீரகுமாரன் சொல்லல்.

அழுகிறவென்றெனைப்பயமிலாதேசொல லாகுமோ-இப்போ
தறிகிறேனுன்வலியென்வ தான்விட்டுப் போகுமோ

கமலாசனன் சொல்.

விட்டுப்போகுமோவென்றுகெட்டுப்போகாதடா வீரனே-நீயு
மெட்டுத்திக்கோடினாலும் விடமாட்டேன் தீரனே

வீரகுமாரன் சொல்லல்

நான்வீரனென்றுமே தானறிந்தேபுகழ்கிறாய்என்முன்னடா-சிறு
நரிக்குச்சிங்கம்பயப்படுமோகணைவிட்டே னென்னடா

வீரகுமாரன்சொல் வசனம்

ஆரடா அடாகாவற்காரா நீயோவென்னுடனெதிர்த்துப்போராடுகி
றவன் சபாசுபார்க்கையாசாமர்த்தியத்தை ஒருவம்பினால் தீர்த்துவிட்டா
யினிமேல் அந்தத்தமிழ்சிந்தாமணியுமெனக்கேடா ஆ-ஆகல்லதடா
அவளையுகானறிகிறேன்

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-கல்யாணி

அவளையும்வென்றேன்காட்டினியற்றமிழ்கன்னிவாழும்
குவலயமதுவோசொன்னக் கோபுரந்தெரியுதிப்போ
தவனிடத்திலும்பான்சென்று தமிழிறைவனென்றியாரு
நவமுறவிவாகஞ்செய்து கலைமுடன்வருவேனே

வ-ம் ஆ ஆ என்னுடனெதிர்க்கவந்த காவற்காரனையுங்கொன்று வி
ட்டேன் இனியந்தத் தமிழ்சிந்தாமணிவாழுமரிந்தகரோ பொற்கோ
புரங்களும் உப்பரிகையுமாகவிளங்குகின்றது ஆ ஆ என்னவாச்சரியம்
அவளையுஞ்செயித்துகலியாணம்பண்ணிக்கொண்டுவருகிறதபவுசெய்வா
ய்பத்திரகாளியம்மா.

வீரகுமாரன் கோசலைபுரியைக்கண்டு புகழ்கின்ற
தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தநகரின்விநோதம் நானறிகிலேன் ஆ ஆ

அநுபல்லவி

அந்தமிகுந்திடும் கந்தவனங்களினால்
விந்தையைச்சொல்ல எந்தனுலாகுமோ-இந்த

சரணங்கள்.

வண்ணச்சிங்காரமேடையாம் சுற்றிலுமுயர்
வாசமலரினோடையும்
கன்னற்றுவிபலாக் கமுகுமாஞ் சோலையும்
உன்னதவரசர்க ளுலாவுநற் சாலையும்-இந்த

உச்சிதப்பொற் கோபுரங்களும் அணிமாதர்கள்
உவந்தணி நூபுரங்களும்
மெச்சுங்கடலொலிபோல் முழங்குதிதென்னமேலும்
மேன்மைகுபேரனூர் வாழுமயராளகைபோலும்-இந்த

பெருமைபெறுகதிகளும் மிகுப்பிரகாசம்
பெற்றநல் நிதிகளும்
ஒருமைச்சலவைக்கல்லா யோங்குநற்கோடிகளும்
ஒப்பிலாதமணியி ழைத்தசித்ரமீடுகளும்-இந்த

பொதுவிருத்தம்-இ-ம்-கல்யாணி.

கோசலைபுரியின்வந்துக் கொற்றவன்தெருக்களெல்லாம்
பாசமாய்ச்சுற்றித்தானும் பார்த்துக்கொண்டிருக்கும்போது
மாசிலாதமிழ்ப்பாவல்லத்-தமிழ்சொரிமணிமடந்தை
காசினிதலினைக்காக்குங் கட்டியக்காரன்வந்தான்

வ-ம்-அதேதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் வீரகுமாரன் கோசலைபுரியில்வந்து வீதிகளைச்சுற்றிவினோதங்களைப் பார்த்துக்கொண்டுவருகுபோது அந்நகரத்தைக்காக்கும் தமிழ்சொரி மணிமடந்தையின்வாசல்கட்டியக்காரன் சபையில் வருகிறவிதங்காண்க

கட்டியக்காரன்வருகிற-தரு-இ-ம்-கல்யாணி-அடதாளம்

பல்லவி

தமிழ்சொரிமணிமடந்தையின் வாசற்காக்கின்ற
தனிகட்டியக்காரன்வந்தான்

அநுபல்லவி

கமழ்முல்லைத்தாரினைக் கழுத்தினிலேபூண்டு
கருங்கச்சையுமிடையிற் கட்டிக்காவிசங்குவிட்டு-தமி

சரணங்கள்.

சிலையுந்தோளினில்விலங்க பொன்னுருமாலை
சிரத்தினிலேதுலங்க
மலையனைப்புயத்தின் மலர்மாலையொடுவீர
மார்த்தாண்டசிங்கம்போ லாக்கிரமித்து-தமி

க-வது-மந்திரி வேதபாஷணிசொல் போற்றிகவி.

இ-ம்- ஆனந்தபைரவி

கோசலபுரியையீசுரமாக
நேசமாயாளும்வில்வாசியேசரணம்

உ-வது-மந்திரி-கலைவல்லிசொல்-போற்றிகவி

கல்வியின்றன்னூர் னைபுகழ்கொண்ட
செல்வியேயுமது சீரடிபோற்றி

அரசிவினவும்-மந்திரிவிடையும்.

வினா. திகழ்கோசலப்புரியிலுண்டானகுடிபடைகள்
செவ்வையாயிருக்கிறாரா

விடை. சீர்பெற்றராசாதிபதியேயிங்கெல்லவரும்
செழித்திருக்கிறார்கள்

வினா. மகிதலத்தரசர்கட்குபகுதிபணமுற்றமே
வண்மையாய்த்தருகிறாரா

விடை. மகராசியேயொன்றும்பாக்கியில்லாமலே
மகிழுடனிருக்கிறார்கள்

வினா. நகரமுகத்திலுமெக்கடத்திமொண்ணைச்சிகள்
நனிகாவல்செய்கிறாரா

விடை. நாயகியேவுமதாசினுக்கினைபடிசீராய்
நாணிகாவல்செய்கிறார்கள்

வினா. பகரும்வித்வான்பாடகர்செலர்கள் சங்கத்தில்
பரிவுடன்வந்தார்களா

விடை. பத்தினியேயாவரும்வந்துகொலுவாகினார்
பத்திமெச்சரிக்கையுடனே

தமிழ்சொரிமடந்தைசொல்-வசனம்

ஆடி அடி கவிப்பிரசங்கத்தில் வல்லமந்திரிகளாகிய தோழிப்பெண்களே நம்முடைய சுவிசங்கத்தி லுண்டாகிய வித்துவான்கள்யாவரும் வந்திருக்கின்றார்களா

மந்திரிவேதபாஷணிசொல்-வசனம்

சரணஞ்சரணமம்மா தமிழ்சொரிமடந்தையே தங்களுத்திரவின்படி யாவர்களும் கொலுவில்வந்திருக்கின்றாரம்மா

பொது-வசனம்.

இப்படிக்குத் தமிழ்சிந்தாமணிகொலுவிருக்கும் அங்கேமுதற்காவற்பெண் வீரகுமாரனைக்கேட்கிறவிதங்காண்க

காவற்பெண்சொல்-விருத்தம்-அசாவேரி

ஆரையாநீர்தானெங்க ளரசிபுத்தாரமன்றி
பாரியிப்புரவியேறிப் பதிதனைவலமாய்வந்து
நாரியம்வாசற்றன்னி லுணயில்லாமலேதான்
சீருடன் வீற்றிருக்கும் சேதியைச்செப்புவீரே

வ-ம்-மேன்மையா ராசேந்திரா நீயார் உம்மைப்பார்த்தால் இராசகுமாரனைப்போலிருக்கின்றது எங்களேசமானி வுத்திரவில்லாமல்குதிரைமேலேறிக்கொண்டு இந்தவீதியெல்லாமிடசாரி வலசாரியாகவந்து எங்கள்வாசற்படியினின்றுக்கொண்டிருக்கின்றீர் நீரெந்தவூர்நீயார் உன்வரலாற்றைத் தெரியச்சொல்லுமையா அரசனே

வீரகுமாரன் காவற்காரிக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

மங்கையாட்கையிற்கேற்ற வாசற்காவலரேகேளீர்
பங்கயமுகத்தானெங்கட் பார்த்திபவீரராசன்
நங்கையைத்தமிழில்யானு நானிலத்தினிலேவென்று
மங்களகரமதாக மணஞ்செய்துபோகவந்தேன்

வ-ம்-கேளுங்கள் வாசற்காக்கும் காவற்பெண்களே கோசலைபுரியாளப்பட்ட வீரேந்திரகுமாரராசன் மகளாகிய உங்கள் தமிழ்சொரிமணி மடந்தையைத் தமிழினாற்செயஞ் செய்துக்கொண்டு போகவந்தேன் காவற்பெண்களே

காவற்பெண்கள்சொல் விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

இத்தனைநாளாய்வந்த விராசருந்தோர்த்தாரிந்தப்
பித்தனேவராசியைத்தான் பேசியேசயிக்கவல்லன்
முத்தமிழ்வல்லிகன்னி மொழியிலேவனுந்தோர்த்து
கத்தியால்வெட்டுண்டேதான் கடுகெனசெய்வானோயோ

வ-ம்-ஆஆஎன்னவாச்சரியம் இத்தனைநாளநமதரசியிடத்துவந்த ராசாக்களில் தர்க்கித்துயார்செயித்தார்கள் அப்படியிருக்க இப்போதிவன்பயித்தியம்பிடித்தவன் இவனேவெல்லப்போகிறான் ஆஆசபாசுஇவன்கத்தியாலிறந்துபோவானோ என்னமோதெரிய வராதுகாவற்பெண்களே

காவற்பெண்கள்சொல்-வசனம்

ஆம்-ஆம்-ஐயையோபாவமிவரைப்பார்த்தால் இராசகுமாரனைப்போலும் மன்மதனைப்போலு மிருக்கிறான்-ஆம்-ஆம்-காவற்பெண்களே

காவற்பெண்கள் இராசனுக்குச்சொல்வசனம்

ஐயா இராசகுமாரனே அப்படியேநீர்போய்தமிழிற்பேசிசெயிக்கலாமென்கிற வல்லமையுமக்கிருந்தால் போகலாமையா அரசனே.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி

தந்தைசேர்மொழியினாரே தயவுடனுரைத்த
உத்தாரமதனைக்கேட்டு வுளமிகமகிழ்ச்சியானேன்
சித்ரகவியுருவமின்னாள் சிங்காரமேடையின்மேல்
யெத்தனைதூரமோதா னெனக்கினியியம்புவீரே

வ-ம்-கேளுங்கள் காவற்பெண்களே நீங்கள்சொன்ன வார்த்தையைக்கேட்டால் மகாசந்தோஷமாயிருக்கின்றது மெய்தான் அந்தத்தமிழ்சொரிமணிமடந்தை இன்னமெத்தனைதூரத்திலிருக்கின்றாள் சொல்லுங்கள் காவற்பெண்களே

காவற்பெண்கள்-வசனம்

ஐயா இராசகுமாரா நீர்போய்வாரும் எங்களோடெட்டுக்காவல்தாண்டியப்பாலயானை புலிகாவல்களுண்டு பதினோராவது சித்திரமண்டபத்தில் நவரத்தினசிம்மாதனத்தில்மந்திரிமார்புடைசூழ வீற்றிருப்பாள் இரண்டாவதுகாவற்கடந்தால் தெரியுமையா இராசனே

இரண்டாவது காவற்பெண்கள்சொல்-விருத்தம்-இ-ம்-அடாணா

ஆரையாயிங்குநீரு மச்சமில்லாமற்போறீர்
வீரியவரசன்புத்ரி விளங்குமிவ்வாண்மனைக்குள்
மீரியேபோகவேண்டா மின்களாமெங்களுக்கு
கூறுமுன்காரியத்தைக் கொற்றவனின்றிடாதே

வ-ம்-ஆரையா இராசனேசற்றும்பயமில்லாமல் உள்ளேபோகிறீர் எங்களரசி உத்தரவில்லாமற்போகக்கூடாது இங்கேநில்லும்எங்களுக்குகாரணத்தைச்சொல்லிவிட்டு அப்பால்போமையா இராசனே

வீரகுமாரன்சொல் விருத்தம்-அடாணா

ஆரடிதாதிமாரே யரையுமென்வார்த்தைகேளீர்
நாரியைத்தமிழில்வென்று நன்மணஞ்செய்யவெண்ணி
வீரனும்வந்தேனிப்போ விக்கினமில்லாமற்றான்
சேரவேபோகநீங்கள் செலவுதந்தனுப்புவீரே.

வ-ம்- ஆரடி இரண்டாவதுகாவற்பெண்களே நானுங்கள் தலைவியாகிய தமிழ்சிந்தாமணியைத் தமிழில் வென்று மணஞ்செய்யப் போகிறேன் ஆதலால்தடைசெய்யாமலனுப்பிவையுங்கள்

இரண்டாவது காவற்பெண்கள்சொல்-விருத்தம்-இ-ம்-தோடி

நல்லவார்த்தைகளைச்சொன்னீர் நானிலத்தும்மைப்போல
வல்லமையுள்ளபேரை வரிசைபாலரேகண்டோம்
சொல்லுவோம்கேளீரெங்கள் தோகையைவென்றபின்
பல்லவோமணத்தைபேற்போம் பயனிலாச்சொல்லலாமோ.

வ-ம்-ஆ-ஆ-நன்றாயிருக்கின்றது நல்லவார்த்தைகளைச்சொன்னீர் உம்மைப்போல்வல்லமைசாலிகளைநாங்கள் அனேகம்பேரையுங்கண்டோம்சொல்லுகிறோம்கேளும், எங்கள்நாயகியைத்தமிழில்வென்றல்லவோ நீர்கலியாணஞ்செய்துகொள்ளவேண்டும் அப்படிக்கொன்றுமில்லாமலிப்போதே கலியாணமென்று சொல்லலாமோ சொல்லாதேமகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்

மெய்தான்நல்லதப்படியேயாகட்டும் நான்தெரியாமற்சொன்னேன் அதைக்குற்றமாயெண்ணவேண்டாம்பெண்களே

இரண்டாவதுகாவற்பெண்கள்சொல்-வசனம்

ஐயாமகாராசனே இங்கேநீர்சொன்ன மாதிரியாய் அங்கேபோய்ச்சொல்லாதையும மூன்றாம்காவலுக்குபோம்மகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்

அப்படியேசொல்லவில்லை நான்போகிறேன்பெண்களே

பொது-வசனம்.

இந்தப்பிரகாரம் இரண்டாவது காவற்பெண்கள்சொல்லக்கேட்டராசகுமாரனவன் மூன்றாவதுகாவலுக்குவரும்போதுமூன்றாவது காவற்பெண்ணாகிய சௌந்தரிவருகிற விதங்காண்க

சௌந்தரிவருகிற-தரு-இ-ம்- சங்கராபரணம்-ஆதிதாளம்

பல்லவி.

சௌந்தரிவந்தாளே மூன்றாங்காவல்
சௌந்தரிவந்தாளே

அநுபல்லவி.

சௌந்தரிவந்தாள் சரிகைப்பணியுமின்ன
சாற்றுமுகமலர் தனிலழகுமின்ன-சௌ

சரணங்கள்

பாதச்சிலம்புகலீரென் றொலிக்கவே
பார்த்தவர்களும்பரிவுடன் மெய்க்கவே
காதவழிக்குக்காத வாடைமணக்கவே
கண்டவர்மதி கலங்கித்தவிக்கவே-சௌ

தங்கக்குடம்போல கொங்கைக்குடங்குலுங்க
சரப்பளிபதக்கங்க டணிமார்பிலிலங்க
செங்கையினில்வளைச் சேர்ந்துலங்க
சித்தசன்ரதியுல வேயாவருங்கலங்க-சௌ

முத்துசரப்பளியு மார்பினிலசைந்தாட
முகத்தைகண்டுவெட்கி சந்திரன்றானோட
சித்திரப்பதுமைபோல் நத்திமாதருங்கூட
சேர்ந்துவருகுங்காரி கூர்ந்துவீரனையாட-சௌ

நான்காவது சௌந்தரிசொல்-விருத்தம்-இ-ம்-தோடி.

விக்கைதமாமுடிபுனைந்து வில்லையுங்கையிலேந்திச்
சொந்தமாய்வந்துநிற்குந் துரைமேடோரேந்தநாடு
உந்தன்பேரென்னவிப்போ துகந்துமேநிற்பதென்ன
வந்தகாரணமெனக்கு வகையுடன்சொல்லுவீரே

வ-ம். கேளும்மகாராஜனே சிரசில்நவரத்தினமகுடம்பொருந்தக்
கையில் வில்லேந்திக்கொண்டு இவவிடத்தில்வந்து நின்றகாரணமென்
னநீரெந்தவூர் உன்பெயரென்னநீர்வந்தகாரியத்தைச்சொல்லுமையா.

வீரகுமாரன்சொல்-விருத்தம் இ-ம் கல்யாணி

சொல்லுமென்றுமூன்றாங்காவற்நீருகையென்வார்த்தைகேளாய்
வல்லாஞ்விஜயநாடு வாழ்வீரசூரனார்தன்
செல்வன்வீரகுமாரன் சிறந்தபேருளக்கண்டாய்
வில்லுநேர்புருவமாதை வெல்லவந்தேன்போய்சொல்வாய்.

வ-ம். கேளும்மூன்றாங் காவற்பெண்ணே நீஎன் னூர்பேர்கேழ்க்
கிறபடியால்செல்வேன்கேள் என்னூர் விஜயநகரம் இதைபரிபால
ஞ்செய்யும்வீரசூரமகாராசன்தவப்புத்திரனென்னையென்பெயர்வீரகுமா
ரனென்றுசொல்வார்கள் ஆதலால்இந்தத்தமிழ்சொரிமணிமடந்தைக
ல்வியிற்சிறந்தவள் தர்க்கம்பண்ணுவாளென்கிற கேள்வியால் காணிவ்
விடமவளைஜெயிக்கவந்தேன் ஆகையால்நீபோய் உன்னுடையநாயகிக்
குச்சொல்லுங் காவற்பெண்ணே

மூன்றாவது காவற்பெண்சொல் வசனம்

அப்படியேபோய் நான்சொல்கிறேனையா மகாராசனே.

மூன்றாவதுகாவல் சௌந்தரிசொல் விருத்தம் இ-ம் ஆனந்தபைரவி

கல்வியில்பெயர்பெற்றோங்குங் கன்னியேசரணமம்மா
நல்லகோசலையாளு நங்கையேசரணமம்மா
வல்லவர்புலவரேத்து மாதாவேசரணமம்மா
ஒல்லையிலொளிவாய்நின்ற வுமதடிசரணமம்மா

வ-ம். சரணஞ்சரணமம்மா தமிழ்சொரிமணிமடந்தையேசரணம்.

தமிழ்சொரிமடந்தைசொல் விருத்தம் இ-ம் மத்தியமாவதி

என்னுயிர்க்குயிருமான வேந்திழைபாங்குகாவற்
கன்னியேயென்னைநாடிக் கலங்கிநீவந்ததென்ன
நன்னயவிசேதையுண்டோ நலமுடனெனக்குநன்றாய்
பின்னமில்லாமற்சொல்வாய் பேரிளங்கொடியினாளே

வ-ம். ஆஆ என துயிர்க்குயிராகிவிளங்குஞ்சவுந்தரியப்பெண்ணே இதேதுஉன்முகம்வாடி என்னிடமோடிவந்தகாரணமென்ன அப்படி ஏதாகிலும் விந்தையானகாரியங்கள்நடந்ததா அல்லதுயாராவது தர்க்கப்பிரசங்கிகளாகிய வித்துவான்கள் புதுமையாய்வந்திருக்கிறார்களா என்னசொல்லடி.

சௌந்தரிசொல்-விருத்தம் இ-ம் தோடி

தமிழ்சொரிசுந்தரமணியெனவந்தத்
தையலேகேளாய்
நமதுபெருஞ்சபையிலுறும்வாசலில்
நற்பதியொருவன் வந்தான்
கமழ்தருசெந்தமிழாலுமைவென்றுமே
கடியமணஞ்செய்வேனென்று
அமுர்தனன்மொழிபாயுமக்குரையென்று
வதிசயவிதுவம்மா.

வ-ம். கேளுமம்மா தமிழ்சொரிமணிமடந்தையே நமது சபையினருகாமையிலிருக்கும் வாசற்படியிடத்துஒரு அரசன் வந்திருக்கிறான் அவனும்மைத் தமிழில்வென்றுமாலைசூட்டவந்தேனென்கிறதாய் சொல்லச்சொன்னனம்மா தாயே

தமிழ்சொரிமணிமடந்தைசொல் வசனம்.

ஆஆ அப்படியா இதுவரைக்கும்நம்மைஜெயித்தவர்ஒருவரையுங் காணவில்லையாதலால் அப்போ காத்தவனும்வந்திருக்கிறானா ஆனல் இங்கே வரச்சொல்லும்பெண்ணே சௌந்தரி

சௌந்தரிசொல்-வசனம்

ஆனல்அப்படியேவரச் சொல்லுகிறேனம்மா தாயே

சௌந்தரிசொல்-விருத்தம்-இ-ம்-பைரவி.

ஜெயமையாநீருரைத்த சேதியைநான்போய்சொன்னேன்
சுயமிரண்டனையாளுநும்மைக் கூட்டியேவரவுஞ்சொன்னாள்
நயமுடன்தர்க்கஞ்செய்து நானிலத்தவளைவென்றால்
வியமதுபெறலாம்வில்லின் வேந்தரேவருகுவீரே

வ-ம். ஐயா இராசகுமாரா நீங்கள்சொல்லச்சொன்ன சங்கதிகளைச்சொன்னேன் அந்தம்மாள்உம்மை கூட்டிக்கொண்டு வரச்சொன்னாள் எமதரசியைநீகல்வியில் வென்று ஜெயம்பெறலாம் ஜெயம்பெறுகிறதானல் வாரும்மகாராசனே

பெரியவிருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

நாதணிசௌந்தரிப்பெண் டாலும்மேசிக்கிரமாக
மாதுசேரனுப்பச்செல்வ மணிநான்காம்வாசல்தன்னில்

நீதிசேர்வீரன்மேவு நேரிழைகாவற்காரி
வாதுசெய்யவுமேராஜன் முகமதைநோக்கிச்சொல்வான்

வ-ம்-அகோதே படியென்றால் மூன்றாவதுவாசல்காற்குஞ்சவுந் தரவதியானவள்வீரகுமாரனை தமிழ்ச்சிந்தாமணியாச்சொன்னளென் றுசொல்லிச் சென்றபின் வீரகுமாரன் நான்காவதுவாசலில்வர அவ் வாசலைக்காக்கின்ற காவற்காரிசொல்லுகிற விதங்காண்க

காவற்பெண்களுக்கும்—வீரகுமாரனுக்கும் சம்வாதம்

தரு—இ-ம்—பூரி-கலியாணி-மிசுரதாளம்

நான்காவதுகாவற்பெண் சொல்லல்.

எங்கேபோகிறீர் நில்லும்-நான்
இயற்றம்பதுக்குரை சொல்லும்
அங்கமுடனச்சுவண்டி யோடுவேதன்
ஆனமச்சானுறவாடுவேத னீதான்-எங்

வ-ம்-ஓகோ அரசனே எங்கேபோகிறீர் நான்கேட்கு மொழிக்கு உரைசொல்லிவிட்டுப்போம் அச்சுவண்டியோடுவேதன் மச்சானுறவா டுவேதன் இதற்குபயன் சொல்லுமையா

வீரகுமாரன் சொல்லல்.

பக்குவஞ்சொல்வேனுன் கண்ணே-செழும்
பங்கயஞ்சேர்கண்ணின பெண்ணே
அச்கையைச்சுவண்டி யோடுவதும்
ஆனமச்சானுறவாட வக்காளையிட்டுஉர்-பக்

வ-ம்-கேளும் நான்காவதுகாவற்பெண்ணே நீகேட்டவாக்கியத் திற்குரைசொல்வேன் அச்சுவண்டியோடுவதும் மச்சானுறவாடுவதும் அக்காளையிட்டல்லவா

நான்காவது காவற்பெண்சொல்—வசனம்.

ஆனால்சரிதான் உள்ளேபோய்விடுமையா மகாராசனே.

வீரகுமாரன்சொல்—வசனம்.

நல்லது அப்படியே போகிறேன் பெண்ணே

ஐந்தாவது காவற்பெண் சொல்லல்

நில்லும்போகவேண்டா மன்னா-மகன்
நேரழகின்சம் பன்னா
சொல்லிப்போங்கடலையுண்டாக்குவ தென்ன
சூட்சியுடன்மோட்சமடைவது மென்ன-நில்

வ-ம். ஆனையாமகாராஜனே சற்றேயில்லு போகவேண்டாம்கடலையுண்டாக்குவதே னுடனேமோட்சமடைவதேனிதற்றுப்பயன் சொன்னாற்போகலாமில்லாவிடில் போகக்கூடாதுசொல்லுமையா ராசனே

வீரகுமாரன்சொல்லல்

கடலையுண்டாக்கும் போதே
கனமுடன்மோட்சமு மாதே
தினமுற்றிடும்பகிரத னல்லவோ
தெரிவைநான்போக வழியிதுவல்லவோ-கட

வ-ம். கேளுமைந்தாவதுகாவற்பெண்ணே இயற்றியவிடுகதைக்கு உரைசொல்வேன் கடலையுண்டாக்குவதும்மோட்சமடைவதும்பகிரதனாலல்லவோ சொல்லிவிட்டேன்போகவிடைதாரும் பெண்ணே.

ஐந்தாவது காவற்பெண்சொல்-வசனம்

ஆம் ஆம் நானித்தனைநாளும்உம்மைப்போலொத்தவரை கண்டதில்லை நீர்மகாவல்லமைபுருடர் ஆகையாலரண்மனைக்குப்போய்விடும்.

வீரகுமாரன்சொல்-வசனம்.

நல்லது அப்படியேஉள்ளேபோகிறேன் பெண்ணே

ஆறுவது காவற்பெண் சொல்லல்.

ஓகோவீராசகுமாரா இப்போது
ஒதுவதுஞ்சொல் லொய்யாரா
வாகாய்கதிரினால் வன்பனிக்குறைவதேன்
வகைபாரியமதி தனிமறைவதேன்-ஓகோ

வ-ம். ஆர்காணும் ஓகோ வீராசகுமாரா இப்படியேவாரும்எனக்குத்தாரஞ்சொல்லிவிட்டுப்பாற்போம் சூரியனாற்பனிகுறைவதேன்பாரியதிங்கள்மறைவதேன் இதற்குரைசொல்லும் மகாராசனே

வீரகுமாரன் சொல்லல்

சூரியனாற்பனி குறைவதும்-நல்லச்
சுடர்மாரித்திங்கள் மறைவதும்
கூறியகிணத்தி லுளென்றறிந்திடும்
கூந்தன்முடிமாதே நீதான்வழிவிடு-சூரி

வ-ம், கேளாய் ஆறுவதுகாவற்பெண்ணேநீகூறியதுசொல்வேன் சூரியனாற்பனிகுறைவதும் பாரியதிங்கள்மறைவதும் கிணத்தினால் லவா இனி இருவழிவிடு நான்போகவேண்டும் பெண்ணே

ஆறுவதுகாவற்பெண்சொல்-வசனம்

மெய்தான்மெய்தான் தடையில்லாமற்போமையா.

ஏழாவது காவற்பெண் சொல்லல்.

போகாதேநில்லுமோய் வீரா—நீரென்
போதனைக்கேட்டுப்போந் தீரா
வாசகநண்டு வளையிசிராதேன்
வானப்புரவிதின் டாகவளர்வதேன்-போ

வ-ம். ஐயா இராஜகுமாரனே எங்கே அவசரமாய்போகிறீர் இங்கனே
ம் வாரும்நான் கேட்பதற்குரைசொல்லிவிட்டு அப்பால் நடவும் நண்டு
வளையிசிராததேன் திண்டல் குதிரைவளர்வதேன் சொல்லுமையா.

வீரகுமாரன் சொல்லல்.

நண்டுவளையி சிராதது சோய்
நனிதிண்டாய்குதிரை வளர்வது
பண்டாகியகாமத்தினி கேளு
பாக்கியவதியின்னிருப்பிட மீளு

வ-ம் ஆ-ஆ-ஆ ஏழாவது காவற்பெண்ணே இதுதானோ வொருபெ
ரியது இதை சொல்லுகிறேன் கேளுநண்டுவளையிசிராததும் தின்டுபோ
ற்குதிரைவளர்வதுங்காமத்தினால்தெரிந்துகொண்டாயா இனிநான்போ
கவேண்டும் உன்னிருப்பிடம்போம் காவற்பெண்ணே.

ஏழாவது காவற்பெண் சொல்வசனம்.

ஆ-ஆ-ஆ இராசனே இதுவரைக்கும் உம்மைப்போலொருவரையு
ம் யானகண்டதில்லை நீர்மிகவுஞ்சாமர்த்தியர் போய்வாருமையா.

எட்டாவது காவற்பெண் சொல்லல்.

ஆர்காணும்போகிறீர் கோரய் ஓகோ
ஆடவ்ரேயிங்கே வாராய்
பார்மன்னர்சிறந்து வாழ்வதுமெய்யா
பன்மாதர்பிரேதமு மாடுவதுரையா - ஆர்

வ-ம். ஓகோ அரசனே எங்கேகோரயுள்ளேபோகிறீர் ஆணாய்பிறந்
தவராயிருக்கிறீரே போகவேண்டாம் நான் கேட்பதைச் சொல்லிவிட்
டு அப்பாலுள்ளே போகலாம் மன்னர்சிறந்துவாழ்வதேன் கன்னியர்
பிரேதமாடுவதேன். இதற்குப் பயன்சொல்லுமையா.

வீரகுமாரன் சொல்லல்

மன்னர்சிறப்பதுங் கேளாய் எல்லா
மாதர்பேயாடுவர் வாலாய்

நன்னயமந்திரத்தாலல்லவோ — கண்ணே
நான்போகவழியும்விட்டிடுவாய் — பெண்ணே—மன்

வ-ம். கேளாய் எட்டாவதுகட்டின் காவற்செய்யும் பெண்ணே நீ கேட்டதற்குப்பயன் மன்னர்பிறந்துவாழ்வதுங் கன்னியர்போடுவது ம்மந்திரத்தால் அறிந்துகொள் இப்போது அந்தத்தமிழ்சொரிமணிமடந்தையிடம் போகவேண்டும் வழிவிடுவாய் பெண்ணே.

எட்டாவது காவற்பெண் சொல் வசனம்.

அப்படியே நீர்போகலாம் உம்மைப்பார்த்தால் மன்மதனைப்போலவிருக்கின்றது ஆசையாலென்னுடைய ஆசைதீரும்படி என்னைக் கூடவேண்டும் கூடினபிற்பாடுபோகலாம் மகாராசனே.

வீரகுமாரன்சொல்-வசனம்.

கேளும்பெண்ணே அந்தத்தமிழ்சிந்தாமணியைக்கல்விபிற்செயித்து அவளைக்கூடுவேனேயல்லது எனேனும் பின்னையொருவரைக் கூடமாட்டேன் நான்போய் வருகிறேன் வழிவிடும் பெண்ணே.

எட்டாவது காவற்பெண்சொல் வசனம்.

தங்கள்சித்தம் அப்படியே போய்வாருமைப்பா மகாராசனே.

வீரகுமாரன்சொல் வசனம்.

ஆ ஆ இதோஒன்பதாவதுகாவலிற்புலி இருக்கின்றதே இதற்குப்பயமென்னவ இராச்சியைவெறிந்தாலப்பால்விலகுமா இதோஎறிகிறேனே மாற்றிப்போகிறேன் ஆஆசபாசு இதோபத்தாவது காவலில்ஒருகொடியயானையொன்றிருக்கின்றதே இதற்குத் தாழையிலையைப்போட்டு இதையும்மாற்றிவந்துவிட்டேன் ஆஆ இந்தத்தமிழ் சிந்தாமணி மிகவும் வலிமையுள்ளவள் இவளை நமது காளியினருளால்வெல்லவேண்டும் இதோஒருரத்னகனகமான சித்திரக்கூட மண்டபமும் தெரிகின்றதே இதுதானோ அவளிருக்குமண்டபம் ஆஆமிகவும்ஆச்சரியம் மகா ஆச்சரியம்.

தமிழ்சொரி மணிமடந்தைசொல் வசனம்.

ஆஆ ஆருங்காண் அரசனேயென்னோடு தர்க்கம்பண்ணவந்த தர்க்கப்பிரசங்கி நீதானோ நீயெந்தவூர் உம்முடைய பேரென்ன சொல்லுமையா.

வ-ம் கேளாய் தமிழ்சொரிமடந்தையே நான் விசையநகராளுகின்ற வீரசூராமகாராசன்குமாரன் என்பெயர்வீரகுமாரனென்றுசொல்லுவார்கள் ஆகையால்நானிவந்த காரணமியாதெனின் உன்னோடுதர்க்கம்பண்ணலாமென்றுவந்தேன் பெண்ணே.

தமிழ்சொரிமடந்தைசொல்-வசனம்.

ஆஆ நல்லகாரியம்வீரகுமாரா நீயென்னோடுகல்வியிலிலாவது தர்க்கம்புரிந்து யென்னைசெயித்துக்கொண்டால் என்னைநீமணம்புரிந்துகொ

ன்னலாம் இல்லைநீர்தோற்றால்நானும்மை என்வாளால்வெட்டிப்போடு
வேணுகையாலிது உமக்குச்சம்மதிதானு சொல்லும்வீரகுமாரா.

வீரகுமாரன்சொல்-வசனம்.

கேளுந் தமிழ்செரிமணிமடந்தையே அப்படியேநான் தோற்றால் என்னைநீவெட்டிவிடலாம் இல்லாவிடில் நீதோற்றால் முன்சொன்னபடியே மணம்புரிவது சம்மதிதானோபெண்ணே

தமிழ்செரி மணிமடந்தைசொல்-வசனம்.

ஆனால் வீரகுமாரா நானொருகவிசொல்லுகிறேன் அதற்குப்பொருள்சொல்பார்ப்போம் இதோவிந்தவாசனத்திலிரும் ராசனே.

வீரகுமாரன்சொல் வசனம்

ஆஆ ஆஆ அப்படியேசொல்லுந் தமிழ்செரிசிந்தாமணி.

தமிழ்செரி மணிமடந்தைசொல் விருத்தம்-இ-ம்-சாவேரி.

காசினியோர்தனைமதித்துப்பொருளேவாங்கும்
கச்சைகட்டுங்கெச்சையிடுங்களறிக்கூட்டு
மாசையினால்மனிடரைப்பற்றிக்கொண்டால்
வானபரியந்தமுமாட்டங்கொள்ளுந்
தூக்கனையிருவளைகளணிந்துபூணும்
துடியிடைப்பெண்ணல்லசொந்தக்காரியல்ல
வேசியல்லதாசியல்லமாராகேள் [illegible]
வீரகுமாராகதையைவிளம்புவாயே.

வ-ம். கேளுமையா ராசாவே உலகத்தாரை மதித்துப் பொருள்பறிக்கும் கச்சைகட்டிக்கொள்ளுங்கெச்சையுங் கட்டிக்கொள்ளுங்கூட்டமுண்டுபண்ணும் ஆசையால்மனிதரைப் பிடித்துக்கொண்டால் ஆகின்றபரியந்தமும்மாடிக்கொண்டிருக்கும்வஸ்திரமும் வளையலுமணிந்திருக்கும் பெண்ணுமல்லசிநேகமானவளல்ல வேசியுமல்லதாசியுமல்ல ஓய் வீரகுமாரா இந்தக்கதைக்குப் பொருட்சொல்லும் பார்ப்போம்.

வீரகுமாரன்சொல் விருத்தம்-இ-ம்-மோகனம்.

அன்னநடைமின்னேநீயன்பாய்க்கேளாய்
அதிமதுரைவிஞ்சையர்க்குவருமோயாகும்
கன்னல்மொழிமதுரகவிசித்துவண்ணம்
கழிநெடில்வெண்பாமிகவுங்கூறும்
பன்னுதமிழ்மாகதமேபாகேதேனே
பங்கையனேர்முகமாதேபண்பாய்ச்சொல்வேன்
உன்னினைவிலெனையுமதிக்காமல்வந்தாய்
உடுக்கையென்னவிதன்பயனையுரைக்கலாமே.

வ-ம். கேளாய்தமிழ் சிந்தாமணியேநீசொன்னகதைக்குப்பொருள்சொல்லுவேன் புலவர்களுக்கருளாயும்வண்ணச்சிந்து கழிநெடிலாசிரிய விருத்தமும் பாடுமிசைக்கொத்ததான உடுக்கைதான் தமிழ்சிந்தாமணியே,

தமிழ்சொரிமணிமடந்தை சொல்விருத்தம்-இ-ம்-பங்காளம்.

படைதனிற்சென் றவையுருளத்துளைத்திடவே
  பாவலரையறுக்கவென் றம்படைகேட்டும்
குடமுடைப்பெரிதான குதிரையேறுங்
  கோட்டைகொள்ளுங்கொக்கரிக்குங்கொள்ளையாடும்
அடலுருவவேலெறிந்தபகையைத்தீர்க்கும்
  ஆராணிபுலியாளுயாற்றனல்ல
விடையிருந்தசிவனருளாற்றெரிந்துகொண்டு
  வீராகுமாரகதையைவிடுவிப்பாயே.

வ-ம். ஓகோ வீரகுமாரனே இப்போது நான் சொல்லிக்கொண்டுவந்த கவிக்குப்பொருட்சொல்லும்.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ட-மத்தியமாவதி.

செந்திருக்கும்பூச்சூடிகனலுமேந்திச்
  சிறக்கரத்தின்மானுமொருமழுவுமேந்தி
பிறைநுடினெயிடப்பாகந்தன்னில்வைத்த
  விமலரது திருமகனார்விபரத்தோடுங்
கந்தருக்குமுன்பிறந்தகஜமுகமைந்தன்
  கடகரியாம்விகடதடக்கமலபாலன்
தந்திமுகனேறும்பெருச்சாளியெனறே
  தாரணியிலவர்குலங்கட்சாத்தலாமே.

வ-ம். ஆஆ சேளுந்தமிழ்சொரி மணிமடந்தையே நீசொல்லியகவிக்குப்பொருள்பெருச்சாளியாகும் பார்த்துக்கொள்ளுவாயபெண்ணே

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

தம்பியுண்ணும்பூமலருங்காயுமுண்டு
  சோறுமுண்ணார்பசியாதுவயிறுமுண்டு
வெம்பியதோர்பழம்பழுக்குமெடுப்பார்தின்னார்
  வீடுமுண்டுசம்பதனுல்மேய்ந்ததல்ல
நம்பியதோரவரவரநேரம்பமாட்டார்
  நல்லநல்லரிலமுடையோர்நவிலுமிப்போ
அம்புஜநேர்முகமுடையவரசனுரே
  வாராய்த்தமிழ்ப்பொருளையறைந்திடுரே.

வ-ம். நல்லதுவீரகுமாரா நீரிந்தக்கவிக்குப்பொருட் சொல்லிக் கொண்டுவாரும்பார்ப்போம்

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி

பண்டுமொருபச்சகந்திமுனியேகூறப்
  பரிமளகந்தியுத்தால்விப்பகடையோட்ட
தண்ணியகடம்முநியுங்குழலிச்சாரச்
  சந்தனராசனுமுறிந்ததகமையாலே
அன்னவர்கட்குலத்தின்வருங்குந்திதேவி
  யருட்புலவர்காந்தாரி யளித்தசேயன்
சொன்னதுரியோதன னுமைவர்கூடிச்
  சூதாடிதோற்றதுவுஞ்சொக்கட்டானே

வ-ம் ஆ ஆ நல்லதுகேளுந்தமிழ்சொரி மணிமடந்தையே இப்போதுநீ சொன்னகவிக்குப்பொருள் சொக்கட்டா னென்றறிந்திடும் பெண்ணே

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-விருத்தம்-இ-ம்-அடாணா

ஞானத்தின்மிகுந்திருக்குநற்கரியமேனி
  நாணிலத்திலவாழியாத தேசமில்லை
காலுமுண்டுகாசினியி னடக்கமாட்டார்
  கருத்தரியசிறகுமில்லைப் பறந்தேபோவார்
சிலமுடன்மைந்தரையும் பெறுவார்கள்மீர்
  இனைந்தவர்தடிப்பார்கட் சேரவொட்டார்
ஆலமுண்டகண்டத்தா ரருளினாலே
  யாராய்ந்தேயிப்பொருளை யறைந்திடாயே

வ-ம் ஓகோவீரகுமாரா இக்கவிக்குப்பொருள்சொல்பார்ப்போம்.

வீரகுமாரன்சொல்விருத்தம்-இ-ம்-மங்களகௌசிகை

தெற்குபாலினுப்பைபுன்னை வடவாலத்தி
  செய்யமாதளைகொய்யா தின்றேசாலத்
தாங்கிவரக்கோபுரங்கட் சாலைசோலைச்
  சாளரங்கருதிருக்கோயிற் றருவிக்கும்
ஆங்கிரணிவனியாக வினங்களோடு
  மணிதோப்புக்காவனங்க ளடுத்துவாழு
மாங்கனிக்குத்தூங்குமலை கீழாய்நிற்கும்
  வவ்வாலென்றதனபெயரை வகுக்கலாமே

வீரகுமாரன்சொல்-வசனம்.

ஓகோகேளாய் தமிழ்சொரிமணிமடந்தையே நீசொல்லிய கவிக்குப்பொருள் வவ்விலாகுந்தெரிந்துகொள்ளும்பெண்ணே.

தமிழ்செரிமணிமடந்தைசொல்-விருத்தம்-இ-ம் காம்போதி.

சிற்றாடையுடுத்திருக்குஞ் சிறுமியல்ல
  சிறந்தநூலணிந்திருக்கு மறையோரல்ல
ஒற்றைத்தலைக்கொண்டையிடும் பணுக்கனல்ல
  ஒண்கழுத்தில்மணியுடையா ரிடபமல்ல
சிற்றாப்புறமெரித்தார் முன்னேநிற்பார்
  சிறந்தபணிவிடைக்குதவார் தீயரல்லர்
பொற்பாதம்பூண்டிருக்குந் திருமாலல்ல
  புண்ணியனே இக்கதையைப் புகலுவாயே

வ-ம் ஐயா வீரகுமாரனாணிப்போது சொன்னகவிக்குப்பொருள் விடுதலையாய்ச் சொல்லிவாரும்பார்ப்போம்

வீரகுமாரனசொல்விருத்த-இ-ம்-ஆனந்தபைரவி.

மந்தாரப்பிச்சைமுல்லை யறுகுகங்கை
  மதியுடனே கொன்றைதும்பை மலருஞ்சூடி
எந்நாளுமம்பிகையாளை யிடத்திலேந்தி
  மீசாந்திருக்கோயின் முன்னேநிற்கும்
கொந்தாருமலராடை யணிந்துகொண்டு
  குவலயமேமன் திருவிழாக் கொள்ளுங்கண்டாய்
இந்தானகாரியமு மறிந்தபெண்ணே
  யரியகொடிகம்பமென்றே யறையலாமே

வ-ம். கேளும்பெண்ணே நீசொல்லியகவிக்குப்பொருள் கொடிக் கம்பமாகுந் தெரிந்துகொண்டாரா

தமிழ்செரி மணிமடந்தை சொல் விருத்தம் இ ம் கமலாமனோகரி.

அக்கரமுமெழுதவொண்ணா வாய்மையாளர்
  ஆவின்பின்னே வந்திடுவ ரதுவுமன்றிச்
சக்கரமும்வலம்புரியுந் தரித்தேநிற்பார்
  சாமுதலிற்கட்டுண்டு தயங்கிநிற்பார்
மிக்கதொருவடம்புரிவர் வெண்ணையாடி
  வெற்படுத்துமற்பொருது வேலைசூழ்வார்
திக்கெட்டும்புகழ்படைத்த தீரர்களாய்
  திருமாலும்மலலவிது செப்புவீரே.

வ-ம். ஓய்வீரகுமாரா சொல்லிக்கொண்டுவந்த கவிகளுக்கெல்லாந் தப்பாமலுரைசொல்லிக்கொண்டுவந்தாயே இந்த கவிதிருப்பொருள் சொல்லும் பார்ப்போம்

வீரகுமாரன் சொல்விருத்தம் இ ம் சாரங்கா

குன்றுதமொழியுடையர் வாய்மையாளர்
  கோவின்பின்னே திரிவார் கோபாலராவர்

ஒன்றாகக்கடல்கடைந்துவெண்ணெயடி
யுரலோடுகட்டுண்டுவுழலாநிற்பர்
மன்றாடிபாலையெடுத்துமலனுபூண்டு
மற்பொருதிவெற்பெடுத்துக்கொக்கிபூண்பர்
செ ருடுங்கோசலையின்றேனேகேளாய்
திருமாலுமல்லவிதுசெக்குத்தானே

வ-ம் ஆ-ஆ தமிழ்சொரி மணிமடந்தாய் நீயிப்போது சொன்ன கதைக்குப்பொருள் செக்கென்று பயன்சொல்வதாக

வீரகுமாரன்சொல்விருத்தம் இ-ம் குப்பகாம்போதி

மின்னிடையாளேநீயும்விளம்பியகவிகட்கெல்லாம்
எண்ணையட்பயனுருசொன்னேன்நான்சொல்லுங்கவிக்கிப்போது
பின்னமில்லாமல்நீயுமுபேசுவாய்பொருளைநீயும்
என்னுடசெயமோசொன்னேனின்பசெந்தேனைமானே

வ-ம். ஆ-ஆ கேளாய் தமிழ்சொரிமடந்தாய் நீசொல்லிக் கொண்டுவந்த கவிக்கெல்லாம்நான் பதிற்கவிபாடியுரைத்திட்டேன் ஆகையால் இக்கவிசொல்லுகிறேனதற்குப்பயனைவழுவாமற்சொல்லும்பார்ப்போம் பெண்ணே.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-நாட்டை

வீரமுடனுடைத்துமுடியார்கால
விடையிலுகந்தேறுவார்ச[illegible]
பாருலகிற்புல்லருக்குதவியாளர்
டண்பானபூமுடியார்பாவையல்லர்
தாரணியிலவரவர்தன்றொழில்செய்விப்பார்
சகலகலைநிறமுடையோர்மறையோரல்ல
சீருலகிலிவரியாரோதெரிந்துகொண்டு
சேயிழையேயிப்பொருளைச்செப்பிடாயே

வ-ம். கேளாய்பெண்ணே தமிழ்சொரிமணிமடந்தாய் இப்போது நான்சொல்லிவந்த கவிக்குப்பொருட்சொல்லும் பார்ப்போம்.

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-விருத்தம்-இ-ம்-நாதநாமக்கிரியை

கருதலர்கள்பணிடமிங்கவசுரர்மாளக்
கடகமொடுபடைதுரகக்கதிரேர்மாள
பரிதியொளிபாவினியகம்பத்தாலும்
பாலருமேமன்மையுமாக்சர்பலருட்வீழ
பருவலரைச்சிரமறுத்ததிகிரிவேந்தன்
மால்தபக்குமருகனைனும்வள்ளிபங்கன்
பொருவில்வருசூசுரர்குலசேனைங்கட்
செந்தில்வடிவேலநாதேவலாமே.

வ-ம். கேளுமையா இராஜகுமாரா நீசொன்னகவிக்குப்பொருள் சேவலேயாம்பார் நீர்சொல்லிவிட்டேன் இன்னமேதாவது கவிசொல்லும் பார்ப்போம்.

நீரிலானைதானதுமூன்றுள்
 நெடியகானின்விளக்கொருமூன்றுள்
ஊரிலாடவும்பாடவும்கொட்டவு
 மொன்றிலான்றுபேப்பெதயராமெனச்
சேரவாங்குகனுசுடன்கூடவே
 தெற்குமாமுனிதன்னுடன்கூடவே
பாரின்மீதிலியம்பவல்லார்க்கிது
 பன்னிரண்டுவருடம்பகருவாம்.

வ-ம். ஓகோதமிழ்சொரிமணிமடந்தையே நல்லதுஇப்போதுயான்சொன்னகவிக்குப்பொருளை விரித்துரைப்பாய்பெண்ணே

தமிழ்சொரிமணிமடந்தைசொல் வசனம்.

கேளுமையா வீரகுமாரா நீரில்மூன்றுவதுமகரப்பிரனங்கற்கடகம் கானில்மூன்றுவிது ஆடுவது நிலாம்பாடுவதுமிதுனங்கொட்டுவதுதேள் பேதையாவதுகன்னி தநுசாவதுவில் தெற்குமுனியாவது கும்பமேயாமையா மகாராசனே.

வீரகுமாரன்சொல்-வசனம்.

ஆ-ஆ சபாசு தமிழ்சொரிமணிநல்லது அப்படியா.

படிமுழுதுந்தரித்த[illegible]முளாடி
 பத்தருமுத்தரு[illegible]பணிந்தநாடி
இடமுடையானுமுகனுமரியுந்தேடி
 தேவரெல்லாம்போற்றரியதிங்கள்சூடி
வடமணியுமும்முலைவராகம்போல
 வடிவுடையதிருமேனிதழும்புபட்டு
படிமுழுதுமாளுவிக்கவல்லர்தாமே
 பரமனூர்தானுமல்லபகருவாயே

வ-ம். சேளும்பெண்ணே இந்தகவிக்குப்பொருட்சொல்லும்பார்ப்போம்.

தமிழ்சொரி மணிமடந்தைசொல்-விருத்தம்-இ-ம் ஸ்ரீரஞ்சினி

வடிவுடையார்பின்றபணிவார்வணி ரெல்லாம்
 வழிபடுவர்நாடோறுமணிதர்காண
அடிபடுவார்திருமேனிதழும்புபெற்பார்
 அம்மையிலாதகுவாழ்வாரதுமன்றி

குடியிலுடன்மன்னர்தங்கண்முனிலேநிற்பார்
கூற்றனெனவருப்பினாமாற்றுவிப்பார்
படிமுழுதுமாளுவிக்கவல்லர்தாமே
பாமனர்தானுமல்லோபணத்திறமே.

வ-ம். கேட்டீரோ இராஜகுமாரா நீர்சொன்ன கவிக்குப் பொருள் ஸ்திரீகளென்று சொல்லப்படும் தெரிந்துக்கொள்வாய் வீரகுமாரா.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

மன்னவனையிழந்தவொருமடந்தையாரும்
மருநகரின்விறகுவிற்றுவருகையாலே
தன்னினத்தைச்சேராமல்னீச்சன்வாசற்
றனிலவர்சேர்குடிசைதனிற்றூம்வாழ்ந்து
மன்னுநவமணியின்றுமாநகரில்விட்டாள்
மதிக்குவிலைசொல்லுவரில்லையங்கானேன்
உன்னிடத்திலந்தமணி ந்ததாலே
வொப்புடனேவிலைகளைநீயுரைத்திடாயே.

வ-ம். நல்லதுபெண்ணே இப்போதுரைத்த கவிக்குப் பொருட் சொல்லும் பார்க்கலாம்.

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-வசனம்.

கேளுமையா வீரகுமாரமகாராசாவே நீரிப்போது சொன்னபாடலுக்குஉரைசொல்லவென்றாற்பொழுதாயமையா யிருக்கிறபடியால் நான் நாளையத்தினம் காலையிற் சொல்லுகிறேன் இப்போது பொழுது போய்விட்டது ஆகையால் நான் அரண்மனைக்குப் போகிறேனையா இராசகுமாரனே.

வீரகுமாரன்சொல் வசனம்.

நல்லது அப்படியேயாகட்டும் பெண்ணே

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-வசனம்.

ஆரடி மந்திரிமார்களே இவருக்கு நமது சொலுச்சாவடிக் கருகிலொருவிடுதிவிட்டு வேண்டியசாமக்கிரியைகளுங் கொடுங்களடி மந்திரிமார்களே.

மந்திரிப்பெண்கள் சொல்-வசனம்.

அப்படியே நல்லதம்மா தமிழ்சிந்தாமணியே.

பொது விருத்தம்-இ-ம்-மாஞ்சி.

அரசன்சொலுங்கவிதனக்குப்பொருட்சொலாவப்பாவை
யகத்திற்சென்றாள்
பரவசமாய்மன்னவனுங்கொலுவைவிட்டுப்பள்ளிசெய்யும்
பதியிற்செல்ல

சரசகுணத்தமிழ்ராஜனின்தைப்பிரிந்தேர்த்தைபுருத்
தாலுங்கொண்டு
தெரிவையர்கடாமவிழ்ப்பணியணிந்துமன்னனிடம்
தேடிவாராள்.

வ-ம். இந்தப்பிரகாரம் அரசன்சொன்ன கவிக்குப்பொருள் தெரியாமல் தமிழ்சொரிமணிமடந்தை வீரகுமாரனிடத்தில் அவன் சொன்னபாட்டுக்குப்பொருளறிய உருவயாறிமந்திரிப்பெண்போல் வருகிறவிதங்காண்க.

தமிழ்சொரிமணிமடந்தைவருகிற-தரு-இ-ம்-மாஞ்சி-அடதாளம்.

பல்லவி.

தமிழ்சிந்தாமணிவந்தாள் மந்திரிகள்போலே
தமிழ்சிந்தாமணிவந்தாள்

அநுபல்லவி.

கமலமுமிலங்க சுகப்பணிதுலங்க
காமன்றனைமயக்கு ரீதிமாதைப்போல-தமி

சரணங்கள்.

சுரதரஞ்சித பூஷணி புகழும்பெற்ற
சுகமொழிமிரு பாஷணி
விரதரம்பையைப்போல வேடிக்கையாகவே
வீணையுங்கையிற்கொண்டு பானுதயம்போலவே
தாளபதக்க மாட சுற்றிலுநின்றத்
தாதியர்சாமரைபோட
இருவிழிகளும்வடி வேலைப்போலேதன்ன
வியப்புறுமகாமுகசிருதயங்களும்பன்ன
கொங்கைக்குடங்குலுங்க ஆடவர்களின்
குணமும்வேறாய்விளங்க
செங்கைவளையசையத் திகழன்னம்போல்வாடி
தேர்வேந்தனிருந்திடும் திருமனைதனைத்தேடி.

தமிழ்சிந்தாமணிசொல்-விருத்தம்-இ-ம்-தோடி.

பஞ்சணைதனிலிப்போதுபடுத்துமேதுயிலேசெய்யும்
ரஞ்சிதவேற்கைகொண்டராசனேயெழுந்திருங்கா
மெஞ்சலில்லராத்திரியேழுநாழிகைதானுச்சு
மிஞ்சியேவுமக்குநித்திரைமீறிற்றோவிளம்புவீரே.

வ-ம். ஆகூ இந்தவாண்மனையில் பஞ்சணைமீது நித்திரை செய்யும் வேந்தரே எழுந்திரும் பொழுதுபோய் யேழுநாழிகை யிப்போதானுச்சுது இதற்குள்ளாக நித்திரைகளுஞ் செய்வாருண்டோ எழுந்திருந்துட்காரும் மகாராசாவே.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-ராகம்-ஆனந்தபைரவி.

மையார்கண்ணுடையபெண்ணேவந்தெனைநீதானுறும்
வெய்யாரமாகநின்றாயுந்தன்பேர்தானுமென்ன
கையாலெந்தனைநீதட்டிக்கடுந்துயில்நீக்குவானேன்
மெய்யாகசொல்லாயிப்போமெல்லிசெந்தேனேமானே.

(வ-ம்) கேளும்பெண்ணே நான் படுத்துக்கொண்டிருந்த மஞ்சத் தருகினில்வந்து என்னை தட்டியெழுப்பிய காரணமென்ன நீயார் உன் பெயரென்ன நீயென் நித்திரையை நீக்கவேண்டியகாரணம் யாதோ மெய்யாய் ஒளியாமற் சொல்லும்பெண்ணே.

தமிழ்சிந்தாமணிசொல்விருத்தம்-இ-ம்-மோகனம்.

இந்தவூர்தன்னையாளும்இராசேந்திரனிடத்தில்வாழு
மந்திரிகள்தானென்பேர்மன்னுஞ்செங்கமலமையா
இந்தனைவேண்டாம்யானும்நீருளவாண்மனைக்கு
விந்தையாய்ச்செல்லவந்தவேளையிலுமைக்கண்டேனே.

வ-ம். அப்பா மகாராசாவே என்வரலாற்றைத் தாங்கள் கேட்கிற படியாற் சொல்லுவேன் கேளும் நானே இந்தவூராள் மந்திரியின் மகள் என்பெயர் செங்கமலமென்று சொல்லுவார்களாகையால் நான் என் று அரண்மனைக்குப்போகும்வழியிது ஆகையாலும்மைக்கண்டு யாவ ரோவென்று • ழுப்பினேனையா.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-அடாணா.

கண்டேனென்றனக்குக்கலியாணமாயிற்றோதா
னுண்டோடிமாதேகேளாயுனக்குநாயகனுமுண்டோ.
உண்டானவிபரமெல்லாமுவகையாயெந்தனுக்கு
மொண்டோயும்பிசகாமற்றானுண்மையாயுரைசெய்வாயே.

நல்லதுகேளும்பெண்ணே உன்னைக்கண்டே நன்றாயிற்றுமே லும் நீமெத்தசௌந்தரியமுள்ளவளா யிருக்கின்றாயே உனக்கு கலி யாண மாச்சுதோ புருஷனிருக்கிறானா• எனக்கு நன்றாக விபரமாகத் தெரியச்சொல்லடி பெண்ணே.

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-விருத்தம்-இ-ம்-தோடி.

சொல்லுவேன்கேளீர்மன்னுக்காயிதுவெனக்கு
நலமேதாகலியாணந்தானடக்கவுமில்லையென்று
மெல்லியாடனக்குச்சொன்னமேன்மிகைக்குறைத்தான்
வில்லணிபரசேநீரும்விளம்புமானகேழ்க்கத்தானே.

வ-ம். கேளுமையாமகாராசனே எனக்கின்னமுங் கலியாணமில்லை யா • ஒருபுருடன் முகத்தையும்பார்த்ததில்லை அது அப்படி யிருக்கட்

தமிழ்ச்சிந்தாமணி சொல்லல்

காதலால்நீருரைத்த கவிக்குப்பொருளென்னவென்று
மீதினிற்றபவுரைத்து விளம்பிடுவீரையா

வீரகுமாரன் சொல்லல்

அன்னமேயெனைச்சேரா யாசைவைக்குமாதே
கையாலணைத்துசேர்ந்தால் கவிக்குப்பொருள்சொல்வேன்

தமிழ்ச்சிந்தாமணி சொல்லல்

உரைத்தசொல்லினிரண்டோ வுடும்போபாம்போவென்று
துரைத்தனமன்னன்பயன் சொல்லுவீர்நீரையா

வீரகுமாரன் சொல்லல்

வீரர்தன்னையும்விழியால் விரட்டிடுசெல்லுமாதே
வாரம்பூண்டதனந்தி லணைத்திடவாய்மானே

தமிழ்ச்சிந்தாமணி சொல்லல்

அடியாள்வந்தகாரிய மனுக்கமாக்குதென்றால்
விடியுமட்டுநீர்சொன்ன வேலையைக்கேட்பேனசுவாமி

வீரகுமாரன் சொல்லல்

வேலைப்பழித்தவிழி மெல்லியேபிணைபழகி
சோலைக்கிளியேயுடந்தன் மேலேபலபசிக்கேனே

தமிழ்ச்சிந்தாமணி சொல்லல்.

மையலானாலுமந்த மணிகவிப்பொருளுரைத்தால்
கையினாலணைத்துசேரும் சாமிவிடாய்தணிய

வீரகுமாரன் சொல்லல்

சாமியுனைநான்வேண்டிக் கலந்தணையவழைத்தே
பூமியாளுஞ்சிந்தாமணி பூவையுமணக்கிடுவேனோ

தமிழ்ச்சிந்தாமணி சொல்லல்

நிகரில்லாச்சிந்தாமணிக்கு நீர்சொன்னகவிக்குறை
வகையென்னவென்றுகேட்டால் மயக்கதீர்போம்போம

வீரகுமாரன் சொல்லல்

மயக்கமென்னடியென்னை மருவிச்சேர்ந்தாயேயாகில்
தியக்கமில்லாமற்பயன் செப்புவேனானபெண்ணே

வீரகுமாரன்சொல்-விருத்தம்

பொருளனாவுரைக்கவெர்தன்புத்தியுஞ்சபலமாக
விருக்கிறததனாலிப்போதிபம்பவும்வாய்வாராது
உருகுதென்மனதும்பொல்லா வுருவிலிபெய்யும்பால்
கருணையோடென்னைத்தாவிக்களிப்புடன்கூடுவாயே

வ-ம் கேளாய்பெண்ணே செங்கமலம் அந்த மன்மதன் என்மனைத்திகைக்கவெய்யு மபெண் மார்பைத்துளைப்பதினால் மனஞ்சபலமாய் நிற்பதினால் நூன் சொன்னகவிக்குப் பொருள்சொல்ல முடியாது ஆதலால்என்னைமருவிக்கூடினால்பிறகுசொல்லுவேன்பெண்ணே

தமிழ்சிந்தாமணி சொல்-வசனம்

கேளும் இராசகுமாரனே நீர் சொல்லுகிறது நன்றாயிருக்கின்றது நீர்மனது சந்தோஷமாகுமெயின் அப்பால நானேவலிய வந்து ம்மைக்கூடுவேன் சந்தேகப்படவேண்டாம் மகாராசனே

வீரகுமாரனுக்குந் தமிழ்சொரிமடந்தைக்குந் தர்க்கம்

கண்ணிகள்—இ-ர-ாகம்-ஆதிதாளம்

வீரகுமாரன் சொல்லல்

உன்வடிவழகுசெங்கமலமெனும்பெண்ணே
என்னருகினிற்சற்றே வாடி

தமிழ்சிந்தாமணி சொல்லல்

மன்னே வுன்னிடக் கவிப்பொருளுரைத்தபின்
மருவிமுத்தாடுவோஞ்சுவாமி

வீரகுமாரன் சொல்லல்

மருவிமுத்தாடியபிறகு கவிக்குப்பொருள்
வகையுடனே சொல்வேன் வாடி

தமிழ்சிந்தாமணி சொல்லல்

துரையேவுந்தனுடைய கவிக்குப்பொருளுரைத்தபின்
சுகித்துமகிழ்ந்தாடுவோம்சுவாமி

வீரகுமாரன் சொல்லல்

சுகமொழியேயேக்கன் விரகக்கவிக்குப்பொருட்
சொல்லக்கூடாதடிதேனே

தமிழ்சிந்தாமணி சொல்லல்

பகருங்கவிக்குப்பொருட் பண்பாயுரைத்தபின்
பாகமருவுவோஞ்சுவாமி

வீரகுமாரன் சொல்லல்

பண்புள்ளகனியிதழமிர்தத்தைமுன் தந்தால்
பகருவேன்கவிப்பொருள் மானே

தமிழ்சிந்தாமணி சொல்லல்

இன்பமாய்க்கவிப்பொருளுரைத்தபின்னந்த
னிதழமிர்தந்தருவேனே

வீரகுமாரன் சொல்லல்

இதமொடுதழுவவேயிருக்கும்பத்தனை
மென்கையினிற்கொடுப்பாயே

தமிழ்சிந்தாமணி சொல்லல்

மதனும்ரதியும்போலேயிருவருங்கூடியே
மருவுவோம்பொருள்சொல்லும் சுவாமி

தமிழ்சிந்தாமணி சொல்லல்

பொருளுரைசெய்தபின் மதனரண்மனைமிக்க
பூசைநாம்செய்குவோம்சுவாமி

வீரகுமாரன் சொல்லல்

பூசைக்குவிநல்லவேளையடிபெண்ணே
பூவணைமீதினில்வாடி

தமிழ்சிந்தாமணி சொல்லல்

பூவணைமீதில்நாமும்பொருந்திடுவோமுன்பு
பொருளையுரைத்திடுஞ்சுவாமி

வீரகுமாரன்சொல்-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி

முத்துமாலைபிடித்துமுகம்பார்த்துன்னிதழ்கடித்து
சித்தசனார்தனையடுத்துச்சிறந்தநல்லலீலைசெய்யத்
தத்தைமொழிச்செங்கமலத் தன்னிடத்தார்குழலேயுன்
சித்தமிரங்கியெனைச்சேர்த்துமுத்தந்தருவாயே

வ-ம் ஆஆ எனதாசைக்கிசைந்த கண்ணுக்குட்டி சபாசு உனது முத்துமாலையைப் பிடித்திதழ்பருகி மன்மதனைப்பேழையில் பாணந்தொடுத்து சரசகோலாகலமாய்விளையாட உனதுமனமிரங்கி வந்தொரு முத்தங்கொடுப்பாயடி செங்கமலம்.

தமிழ்சொரிமணிமடந்தைசொல் கொச்சகக்கலிப்பா
இ-ம்-புன்னாகவராளி

வாராயென்றேயழைத்துமயங்கிமெத்தக்கெஞ்சுகின்றீர்
பாரோர்புகழ்வீரபராக்ரமேவுங்களிடச்
சீராருஞ்செந்தமிழின்செய்யுட்பொருளுரைத்தால்
தோராக்கவிக்காசேசொன்னபடிகேட்பேனையோ

வ-ம். கேளுமையா மகாராசனே நேராய் பெண்ணே வாராய் கண்ணே மாதே தேனே யென்று சொல்லிச் சொல்லிக் கொஞ்சுகின்றீர் நீர்சொன்ன கவிக்குப் பொருள்சொல்லினால் எப்படிசொல்லுகின்றீரோ வப்படிகேட்பேனையா மகாராசனே

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-காம்போதி

ஆரணங்கேவிப்பொருளையன்றாக்கேளு
அரியதோர்விசையநகர்தன்னைவிட்டு
சீராருமென்றாயார்காட்டில்வந்து
சீதளக்கையால்விராகைபொடித்துவிற்றுத்
தார்பொருந்துமதுவரசன்மோகமுற்றான்
தனியாகவென்றாயுங்காட்டில்வந்து
பாரிலெனைப்பயின்றெடுக்கவித்தைகற்றும்
பாவைதமிழாளேயுன்னிடம்பிறந்தேனே

பூரணச்சந்திரனைப்போன்முகத்தைக்காட்டினாளே
காரணமென்னமோயாருங்கண்டறியாவூட்டதை
வாரணியுமங்கையாளவளைத்தெரியாமல்விட்டேனே என்

வீரகுமாரன்சொல்-வசனம்.

ஆஆ என்னவாச்சரியம் ஒருபெண்ணானவள் இங்கேவந்து நம்மையேமாற்றிப்போய்விட்டாளல்லவா நல்லதுமந்திரிகுமாரத்தி செங்கமலமென்றல்லவோசொன்னாள் அவளல்ல அந்ததமிழ்சொரிமணிமடந்தையேவந்து பொருளைகேட்டாளேயல்லதுவேறென்றுமில்லை நல்லதாகட்டும் இப்போது பொழுதுவிடிந்தது அங்கேபோகலாம்.ஆ-ஆ நல்லதுபெண்ணே தமிழ்சிந்தாமணி.

இந்தப்பிரகாரம்தமிழ்சொரிமணிமடந்தை வீரகுமாரனிடத்தில்கவியின் பொருளையறிந்துகொண்டு அன்றிரவுநீங்கியது மறுநாட்காலையில் தனதுசிம்மாதனத்திற்றன்சொலுவிருக்க வீரகுமாரனுங்கொலுவில்வந்து இருக்கின்றசமயத்தில் தமிழ்சிந்தாமணி வீரகுமாரனைக்கேட்கிறவிதங்காண்க.

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-வசனம்.

ஐயாமகாராசனே நீர்நேற்றைபதினஞ்சொன்னகவியை இப்போதின்னமொருதரஞ் சொல்லும் பார்ப்போம்.

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

மன்னவனைபிரிந்துவொருமடந்தையரும்
மறுநகரின்விறகுவிற்றுவருமையாலே
தன்னினத்தைச்சேராமனிச்சன்வாசற்
றனில்வந்தோர்குடிசைதனிற்றானும்வாழ்ந்து
மன்னுநவமணியீன்றுமாநகரில்விட்டனள்
மதித்துவிலைசொல்பவரிவ்வையங்காணேன்
உன்னிடத்திலந்தமணிவந்ததாலே
வெகப்புடனேவிலைகளைநீயுரைத்திடாயோ.

தமிழ்சிந்தாமணிசொல்-விருத்தம்-இ-ம்-தோடி.

மன்னனேகேளாய்நீ மறைத்திடுங்கவிதனக்கு
நன்னயப்பொருளையிப்போ நவில்கிறேன்விபரமாக
கன்னியாம்பின்னல்பட்டக் கட்டமுன்னையீன்று
துன்னியசரிதையெல்லாந்தொகுத்திட்டேன்பயனிதாமே.

வ-ம். கேளுமையா இராசகுமாரா நீர்நேற்றைபதினஞ்சொன்னகவிக்குப்பொருளென்னவென்று கேட்டீரேயாமாகிற் சொல்லுவேன்கேளும் உன்தாயார்விசையநகரைவிட்டு கஷ்டப்பட்டுகாட்டில்விறகொடித்துவிற்றுஓரிடம்வந்திருந்து உம்மைப்பெற்றுநீர்வளர்ந்துபிரகாசித்து

மணிநீர்தான் அதுஎன்னிடம்வந்து தென்மூடன்சரித்திரத்தை கவியா கச்சொன்னீரல்லவா இதுதானதற்குரை மகாராசனே.

வீரகுமாரன்சொல் வசனம்.

கேளும்பெண்ணே தமிழ்சிந்தாமணி நீஇப்போது சொன்ன தாச ரியே நானின்னமொருகவிசொல்லுகிறேன் கேளும்பெண்ணே.

தமிழ்சிந்தாமணிசொல்-வசனம்.

நல்லது எதோசொல்லும்பார்ப்போம்மகாராசனே.

வீரகுமாரன்சொல்-கொச்சகம்-இ-ம்-புந்நாகவராளி.

கண்டகனவைச்சொல்லுவேன் காசினிமெலாம்புரக்கும்
கொண்டல்மயிலேகுயிலே கூரிருளிலுலவியேன்
தண்டையிட்டகாலுமிரு தனமுமெமர்தன் கைபிருக்க
விண்டலத்திற்போயொளித்தாள் மெல்லியரேசொல்வாயே

தமிழ்சொரிமணிமடந்தைசொல்விருத்தம்-இ-ம்-முகாரி.

தனித்துநானுலகையாண்டேன் நராபதிவனைகம்பேரைத்
துணித்துமேகவியால்வென்று துலங்கினேனென்னைநீரும்
கனத்தசோர்கவியால்வென்றீர் காதலியானுக்தோர்த்தேன்
மனதினில்நினைத்தவண்ண மணஞ்செய்துகொள்ளுவீரே.

வ-ம். கேளுமையாமகாராசனே நான்தனியாக இந்தவுலகையாண்டு கவிவலாசனரியெல்லாம்வென்று இத்தனைநாளிப்புவியில் பிரகாசித்துக் கொண்டிருந்தேன் இப்போதுநீர்வந்து என்னையொரு கவியில்வென் றீர்தோர்த்தேன்ஆதலால்என்தொழிலாகவிருந்த நவரத்நசிம்மாதன த்தின்மீதுநீரிருந்துஎன்னைக்கலியாணஞ்செய்துக்கொள்ளும் நீரேஎ னக்குப்பிராணநாயகர் மகாராசனே.

வீரகுமாரன்சொல்-வசனம்.

நல்லது கேளாய்பெண்ணே தமிழ்சிந்தாமணி நமதிருவருக்கும் பெயர்பொருத்தம நட்சத்திரபொருத்தம்விவாகப்பொருத்தம் பார்த் துச்சொல்லவேண்டுமே ஆகையால் பஞ்சாங்கஞ்சொல்லும் பிராமண ரையழைத்துவரச்சொல்லும் பார்ப்போம்பெண்ணே.

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-வசனம்.

ஆராடா அடா வாசற்காக்குங்கட்டியக்காரா நமதுபஞ்சாங்க பிரா மணரை நானழைத்தேனென்கிறதா யழைத்துவாரும்பிள்ளாய்.

கட்டியக்காரன்சொல்-வசனம்.

நல்லது தங்களுத்திரவுப்படிக்கு அழைத்துவருகிறேனம்மா.

பொதுவசனம்.

அகோ தெப்படியென்றால் இந்தப்பிரகாரங் கட்டியக்காரன்சொ ற்படிக்கு தொழுவில்பிராமணர் வருகிறவிதங்காண்க.

பிராமணன்வருகிற-தரு-இ-ம் மோகனம்-அடதாளம்.

பல்லவி.

பிராமணர்வந்தார்-பெரியபஞ்சாங்க புத்தகங்கொண்டு

அநுபல்லவி.

கிராமத்திலுண்டான பாமரர்க்குமேலாம்
க்ஷேமவிஷ்டையி னெறியையிதழ்த்தும்-பிரா

சரணங்கள்.

மாதவ அரிவாசு தேவமுகுந்தா
வடவேங்கடத்தினில் வாழும்வைகுந்தா
திதளபங்கயப் பாதாரவிந்தா
தேவரேயென்றுமே யாவரும்வந்தார்-பிர

வீரகுமாரன்சொல்-வசனம்.

சரணஞ்சரணம் வாரும்பிராமணர்களே.

பிராமணர்கள்சொல்-வசனம்.

ஆசிர்வாதம் மகாராசனுயிருக்கவேணும் தங்கள்சமுகத்திற்கெங்களை அழைத்தகாரியமென்ன சொல்லும்மகாராசனே.

வீரகுமாரன்சொல்-வசனம்.

ஐயாசுவாமிகளே இந்தகோசலைபுரிதமிழ்ச்சிந்தாமணியை யான்விவாகஞ்செய்யவேண்டுமாகையால் என்பெயர் வீரகுமாரன் பெண்பெயர்தமிழ்ச்சிந்தாமணி எங்களிரண்டுபேருக்கும் பொருத்தமிதமுஞ்சரிபார்த்து முகூர்த்தம்வைக்கவேண்டுஞ் சுவாமிகளே.

பிராமணர்கள்சொல்-வசனம்.

கேளும்வீரகுமாரமகாராசனே தங்களுத்தரவின்படியே சோதிடநூலாராய்ந்து குற்றமில்லாமற்பார்த்துரைக்கின்றோம் ஏதோ நாங்களேழைப்பிராமணாள்மகாராசனுக்குமுகூர்த்தம்வைத்துக்கொடுத்தால் வீண்போகுமா நாங்களும் பத்துபேர் வந்திருக்கின்றோம் எங்கள்மீது ஒருகண்ணிருக்கட்டும் மகாராசனே.

ஓய்பிராமணர்களேநீங்கள்சீக்கப்பார்த்துரைத்தால் உங்களுக்குத்தேவையான பொருள்கொடுக்கிறேன் பயப்படாதீர்கள்

பிராமணர்சொல்-வசனம்.

ஆகுமிதோ பார்த்துரைக்கின்றோ மகாராசனே.

அண்ணையர்சொல்-வசனம்.

அடாய்சுப்பாய்சேஷாய் நம்மாத்திலே நம்மபெரியவாள்சோதிடத்தைப்பார்த்தன்றோமகாராசனுக்குமுகூர்த்தம்வைக்கவேண்டும் அதுகளையெல்லாம் எடுத்துப்பாருங்களேன்பிள்ளாய்

சேவைசெய்சொல்-வசனம்

ஆம்காணும் நானும்பார்க்கின்றேன் நமக்கென்ன இரட்டைப்பங்குவரும் சொல்லுங்காணும்.

சுப்பையர்சொல்-வசனம்

அடித்தாயோழிமகனேபொதிக்களக்காத்துக்கு முன்னேசத்தத்திற்களப்பாளோ நோக்குதாறு அவசாம்கேக்கிலலையோ போங்காணும்போம்.

சுப்பாசாஸ்திரிசொல்-வசனம்.

அடாய்மூடபட்டுத் தேவடியாள்பிள்ளாய் நோக்கென்றுபொதிமாடுபோலிருக்கிறுயே நோக்குநான் மெத்தகஷ்டப்பிள்ளை அஞ்சுமனைவி இரண்டுநேக்குத்தான இரட்டையங்குகொடுக்கவேண்டும்.

அண்ணையர்சொல்-வசனம்.

அடாய் அறுதலிபெட்டிமகனே இராசாவுக்குப் பஞ்சாங்கம்பார்த்துக்கொண்டன்றோபேசவேண்டும் இப்போதேன் வாதுசெய்கிறீர் பஞ்சாங்கபார்த்துரையுங்கள் ஒருகைபார்ப்போம்,

பிராமணாள்சொல்-வசனம்,

ஓய்வீரகுமாரமகாராசனே மகாராசனாயிருக்கவேண்டும் நாங்கள் முகூர்த்தத்திற்குநாள்பார்க்கும்போது சித்திரைமாதம் பூர்வபட்சம்பத்தொன்பதிநதேதி வெள்ளிக்கிழமை சதயநட்சத்திரம் சித்தயோகம் காலையில் மிதுனலக்கினத்தில்தங்களிருவருக்கும் பொருத்தஞ்சரியாகவிருக்கின்றது மகாராசனே ஏதோ யிங்கள் ஏழைப்பிராமணாள் எங்களுக்குகுறைவில்லாமற்கொடுக்கவேண் ம்தங்களுக்குக் கியாபகமிருக்கவேண்டும்.

வீரகுமாரன்சொல்-வசனம்.

நல்லது கலியாணம்நடக்குங்காலத்திலாகட்டும் கலியாணமண்டபத்திற்போயிருங்கள் பிராமணர்களே.

பிராமணாள்சொல்-வசனம்.

மகாபாக்கியம்மகாபாக்கியம்நலைதப்படியே யாகட்டும்மகாராசனே.

வீரகுமாரன்சொல்விருத்தம்—இ-ம்-மங்கள-கௌசிகை,

தமிழ்சிந்தாமணியேகேளாய் தாரணியாண்டவுன்னை
வியரிசையாகவிப்போ விவாகமுஞ்செய்யவேண்டி
நமதுநாடதனில்வாழு நற்குடியரசரெல்லாம்
நிமையினிலிங்குசேர நிருபமொன்றனுப்புவாயே.

வ-ம், கேளாய்பெண்ணே தமிழ்சொரியணிமடந்தா உன்னைநான் கலியாணஞ்செய்துகொள்ளவேண்டியதால் நமதுநாட்டிலுண்டாகியகுடிகளும் அரசர்களும்இவ்விடம்வருமபடியாய் ஒருதிருமுகமொன்றெழுதியனுப்பவேண்டும் பெண்ணே,

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-வசனம்

அப்படியேதங்களுத்தரப்படியாகட்டும்மகாராசனே

தமிழ்சொரிமணிமடந்தைசொல்-விருத்தம்-இ-ப்-காட்டை.

ஆரடாவாசற்காக்கு மழுதுகட்டியக்காரனே
தாரணிமன்னவர்க்குத் தனியே லேயெழுதவேண்டி
சூரிகொண்டோலைவாரிச் சுருக்கினிலெழுதவல்ல
வீரியக்கணக்கன்றன்னை விரைவினிலழைத்துவாராய்

வ-ம், ஆரடா அடா ஆசாரவாசல்காக்குங்கட்டியக்காரா நமது இராச்சியத்திலுள்ள அரசர்களுங்குடிகளுக்குந்தெரிந்திட லோலையெழுதவேண்டும் ஆகையால்சீக்கிரத்தில் கணக்கப்பிள்ளையை அழைத்துக்கொண்டுவந்து எனதுராசாகிய வீரகுமார மகாராசாவினிடத்தில் விடும்பிள்ளாய்.

கட்டியக்காரன்சொல்-வசனம்.

மகாபாக்கியம் அப்படியேகல்லதம்மாதாயே

பொதுவசனம்.

இந்தப்பிரகாரம் தமிழ்சிந்தாமணிகட்டியக்காரனுக்குச்சொல்லக் கட்டியக்காரன்கணக்கப்பிள்ளைக்குச்சொல்லக்கணக்கப்பிள்ளைவீரகுமாரன் தமிழ்சிந்தாமணியிருக்குங் கொலுவிற்குவருகிறவிதங்காண்க.

கணக்கப்பிள்ளைவருகிற-தரு-இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

பல்லவி.

சீர்கணக்கப்பிள்ளைநானே நல்லச்
சீர்கணக்கப்பிள்ளைநானே

அநுபல்லவி.

பாரிற்புகழ்மன்னர் வருதிரின்பணங்கட்கு
நேர்மையாகவுஞ்சீராய் நெடுங்கணக்கெழுதிடுஞ் - சீர்

சரணங்கள்.

கருக்கோலைக்கையி லெடுப்பேன் சீராய்
கணக்குமுழுவதுங் கொடுப்பேன்
சுருக்காகப்பேசினுடுக்குசெய்பவர்பங்கைக்
குதுசெய்திடுமெனப்பேர்தகனுமாடுவி சீர்

வார்பணங்களைமிகத் தின்பேன் சயாவிடில்
உடனேசதிசெய்வே னென்பேன்
பேர்பெறுமராசனைப் பிரட்டிபாழாக்கவே
வேணுமென்போலுண்டோநானயமாகவே சீர்

செய்தநன்றிசற்றுங் குறியேன் மேன்மை
செப்பிசெனமத்தி லறியேனை
வையகத்திற்கோடி பணங்கொடுத்தவரையும்
மாறுசெய்திலையென்று சாதிக்குமிகுதிச் சீர்

கணக்குப்பிள்ளைசொல்-வசனம்

சரணஞ்சரணம்மையா எங்கள் தமிழ்செரிமணிமடந்தையைவாதில்வென்ற வீரகுமாரமகாராசனே சரணஞ்சரணமம்மா தமிழ்செரிமடந்தையேசரணம்.

வீரகுமாரன் சொல்லல்.

ஆரடா அடா கணக்கப்பிள்ளை நீயொரு திருமுகமெழுதவேண்டும் அதென்னவென்றால் இராசராசாக்களுக்குத் தெரிவிப்பதென்னவென்றால் கோசலைபுரியின் தமிழ்சிந்தாமணியைவீரகுமாரமகாராசன் தமிழிலே வினைவென்று விவாகஞ்செய்யப்போகிறார் ஆதலால் திக்கிலுள்ளவரசர்கள் யாவருமித்திருமுகம் கண்டதட்சணம் வரவேண்டியதென்று மெழுதும்பிள்ளாய்.

கணக்கப்பிள்ளைசொல்-வசனம்.

மகாபாக்கியம் மகாபாக்கியம் அப்படியே தங்களுத்தாரப்படியெழுதியனுப்புகிறேன் மகாராசனே.

பொதுவசனம்

இந்தப்பிரகாரம்வீரகுமாரன் கணக்குப்பிள்ளையையழைத்துதிருமுகமெழுதவுத்திரவுகொடுக்கவே கணக்கப்பிள்ளை இராசர்களுக்குத்திருமுகம் அனுப்ப இராசாக்கள்கலியாணத்திற்கு வருகிறவிதங்காண்க

இராசாக்கள்வருகிற-தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்:

பல்லவி.

ராசா இராசர்வந்தார் — கோசலைநாடி
ராசா இராசர்வந்தார்

அநுபல்லவி

கேசரவும்ரத்நக் — கிரீடம்சிரத்தணிந்து
திங்கள்முகமிலங்கச் — சிங்காரமுமிகுந்து-ராச

சரணங்கள்

அங்கர்கலிங்கர்களும் — மராட்டியர்
அணிமச்சர்குச்சரரும்
வங்கர்ஷிகர்கே — பாளமலையாளர்
வலியகர்னாடகர் — யப்பாருடன்சீனர்-ராச

கட்டியக்காரன்சொல்-விருத்தம்-இ-ம்-தோடி

ஆசீர்வாருமித்த வாகனத்திலெல்லோரும்
பாவசமுடனமர்ந்து பண்புடனிருந்களிப்போ
சார்களேமெய்க்கவெங்கள் சுந்தரவாகியற்குத்
திரவீரகுமாரருக்குஞ் செரிமணந்தன்னைபாரீர்.

வ-ம் வாருங்கள்வாருங்கள்மகாராசாக்களே இந்தவாசனத்திலுட்காருங்கள் எங்கள் இராசாதிராசனெனியவீரகுமாரமகாராசாவுக்குமெங்களாசியோகிதசிந்தாமணிக்கும் நடக்கப்போகிற விவாகமகோற்சவத்தைப் பார்வையிட்டுப்பாருங்கள் இராசாக்களே.

மகாராசாக்கள்சொல் வசனம்

அப்படியேயாகட்டும்மப்பா கட்டியக்காரா

பொது வசனம்.

இந்தப்பிரகாரம் இராசாக்கள்யாவருங்கொலுவில்வந்திருக்கதமி ழ்சிந்தாமணியினுடைய விருத்தாந்தமெல்லாம் இருமுகத்தினால்கேள் விப்பட்டுசந்தோஷமாகிக் கலியாணச்சடங்குகள் யாவுநடத்திவைக் க தமிழ்சிந்தாமணியினுடைய தகப்பனாராகிய வீரேந்திரமகாராசன் கொலுவிற்குவருகிறவிதங்காண்க

வீரேந்திரமகாராசன்வருகிற தரு இ-ம் தோடி அடதாளசாப்பு

பல்லவி.

விண்டலமெண்டிசைமண்டலாதிபந்தவீரேந்திராசன்வந்தான்

அநுபல்லவி

கண்டகண்டவரசர், கப்பணங்கொடுத்திட
காவலரொடுமந்திரி யர்வருந்துதித்திட

சரணங்கள்.

சரிகைபட்டயஞ்சமுதாடு கையில்
துலங்கிடவேமந்திரியோடு
சரிகைபங்கிகள்மேலித் தளதளவென்றிட
தனிக்கோசலையின் செங்கோற்றன்கடித்திருந்திட
தாளமணிகுடை கவியவிருபுறம்
தத்திமித்திமியென வேசைநடமது
புரியவெகுவித சாரியிசையுற
புனிதர்கள்மனது களிபெற-வீரே

தமிழ்சிந்தாமணிசொல்கவி-இ-ம் ஆனந்தபைரவி

ஐயனேசரணமென்னை யணிவீரகுமாரீசன்
வையகத்தமிழிற்வெல்ல மணஞ்செயவழைத்தீரோ

வ-ம் சரணஞ்சரணமையா என்னைப்பெற்ற பிதாவே என்னைவிசை யநகராளும் வீரகுமாரன் தமிழில்வென்றபடியால் அவனைமணம்புரிவி க்கத்தங்களை யழைப்பித்தேனையா பிதாவே?

வீரேந்திரமகாராசன் சொல்கவி-இ-ம் மோகனம்.

அன்னையேவாழியென்னையழைத்தாய்கலியாணமென்று
நன்னயவிவாகமாகிநெடுநாள்வாழ்குவாயே

வ-ம் கேளுமம்மா தமிழ்சிந்தாமணி நீகலியாணஞ்செய்துகொள்ளு கிறதாயென்னை யழைத்தாயல்லவா மகாசந்தோஷம் நீவிவாகமில்லாம லிருந்தது எனக்குமனவருத்தமாயிருந்தது இப்போது கிடைத்தேதுநினை ன்மகாபாக்கியம் இந்தவீரகுமாரனும்நீயுங்கலியாணஞ் செய்துகொ ண்டு சுகமாயிருக்கக்கடவாய் தமிழ்சிந்தாமணியே

வீரேந்திரமகாராசன் பிராமணருக்குச் சொல்-வசனம்.

ஆரையாபிராமணரே நமது குமாரத்திக்கும்வீரகுமாரனுக்கும்மந்திரபூர்வமாய் விவாகநடக்கவேண்டும்மகாசாக்கிரதையாயிருங்கள்பிராமணர்களே.

பிராமணர்கள்சொல்-வசனம்.

மகாபாக்கியம் வீரேந்திரமகாராசாவே

கட்டியக்காரன்சொல்-வசனம்.

ஆரையா மகாராசாக்கள் எங்கள்நாயகியார்கலியாணத்திற்குகோசலைபுரிவாசர்வீரேந்திரமகாராசாகலியாணமண்டபத்தில்வந்திருக்கிறார் சந்தடிசெய்யாதிருங்கள் பாக்கு எச்சரிக்கை

பொதுவிருத்தம்-இ-ம்-கல்யாணி.

சித்திரமணிமண்டபத்திலரசர்நாடத்
தெரிவையும்வீரகுமாரவேந்தனுடனு
சுத்தமுடன்பணியுடுத்திமலர்த்தார்பூண்டு
சுந்தரமண்டபத்தின்றன்னை நோக்கி
சத்திக்குந்தண்டையணிமாதர்சூழத்
தாதியர்கள்சாமரையும்வீசிப்போற்ற
தத்திமிதெயவென்றேநடனமாதராடத்
தனிக்கொலுவைநோக்கியுமேவருகின்றாரே

வ-ம். அகோகேட்டப்படியென்றால் இந்தப்பிரகாரம் இராசாக்கள்சகலமானவர்களும்கோசலைபுரியாசனுமகலியாணமண்டபத்தில்வந்திருக்க வீரகுமாரனும் தமிழ்சித்ராமணியும் ஆடையாபரணாலங்கிருதாபிபணிகளுடுத்தி கலியாணமண்டபத்தில் வருகிறவிதங்காண்க.

வீரகுமாரனுந்தமிழ்சித்ராமணியும் கலியாணமண்டபத்தில்
வருகிற-தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி

வீரகுமாரன் தமிழ்சித்ராமணியுடனே
விசித்திரமண்டபம்வந்தார்

அநுபல்லவி.

பூரணச்சந்திரன் போல்முகமின்னவே
பூரிபேரிடங்கா ஏக்காளம்மன்னவே வீர

சரணங்கள்.

சந்திரவட்டக்குடைத் தந்திரியர்பிடிக்க
சாமரைவீசிமாதர் காளத்துடன்நடிக்க
சுந்தரம்மிஞ்சியத் தோகையரும்பிடிக்க
ஐயபேரிமேளனு சொகுசுடனேயடிக்கத்
தோகையாட அணிவிசித்திர
பூவையோர்நாட மதனரதிபோல்
தொல்முலகோர்களும் சுகமென்றுமேகூவ
துறைகளுமறையவர் சுரர்மலர்தூவ

தொழுதுகட்டியக்காரர் துரிதமாய்நாட
பழுதிலாகுணமிதும் பாவையர்பாட-வீர

பிராமணர்கள்சொல்-வசனம்.

வாருங்கள் வீரகுமாரமகாராஜனே தமிழ்சித்ரா மணியே இந்தக் கலியாணமண்டபத்தில்வலமாக கிழக்குமுகமாய்க்கலியாண மணையிலுட்காருங்கள்.

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியே நல்லது சுவாமிகளே இந்தாரு மெங்கிய பவுத்திரம் போட்டுக்கொண்டு அரசாணிமுன்னிலையிற் பிள்ளையாரைப்பூசைசெய்யுங்கள்.

வீ. குமாரன்சொல்-வசனம்

— அப்படியே பூசைசெய்கிறேன் சுவாமி

பிராமணன்சொல்-வசனம்

சதாஸ்து இந்தாரும் திருமங்கிலியம் கையில் வைத்துக்கொண்டு சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து சூரியசந்திரர் அருந்ததி இவர்களறிய தமிழ்சொரிமணிமடந்தைக்குத் திருமங்கிலியதாரணைசெய்துவிடும்.

வீரகுமாரன்சொல்-வசனம்:

சுவாமிகளே தாங்கள்கொடுத்த திருமங்கிலியத்தைக் கழுத்திற் தரித்துவிட்டேன சுவாமிகளே.

பிராமணன்சொல்-வசனம்.

ஆருங்காண்பிராமணரே வேதகோஷடந் சொல்லுங்கள் மேள வாத்தியங்களை செய்யச்சொல்லுங்கள்.

பிராமணர்சொல்-வசனம்.

நல்லது அப்படியேநடக்கும் வீரேந்திரமகாராசனே.

பிராமணன்வீரகுமாரனுக்குச்சொல்-வசனம்.

ஐயா வீரகுமார மகாராஜனே எழுந்திருந்து அரசாணி வலஞ் செய்து மனைக்குட்செல்லுங்கள்.

வீரேந்திரன்சொல்-வசனம்.

மகாபாக்கியம் பிராமணர்களே இந்தாரும் பலதானம் வாங்கிக் கொள்ளுங்கள்.

ஆரடா மந்திரிபிரதானிகளே இந்தப்பிராமணர்களுக்கு வேண்டியதிரவியங்களைக் கொடுத்தனுப்பச் சொல்லும்பிள்ளாய்.

மந்திரிசொல்-வசனம்.

மகாபாக்கியம் அப்படியே நலலது மகாராசனே.

மந்திரிகட்டியக்காரனுக்குச்சொல வசனம்.

ஆரடா அடாகட்டியக்காரா இந்தபிராமணர்க்கு வேண்டிய திரவியங்களைத் தானமாய்க்கொடும்பிள்ளாய்.

கட்டியக்காரன்சொல்-வசனம்

அப்படியே சொல்லியனுப்புகிறேன் மந்திரிகளே

வீரேந்திரன்சொல்-வசனம்.

ஆ-ஆ-மந்திரிப்பிரதானிகளே நமது பெண் கலியாணத்துக்குவந்த இராசாக்களுக்கு மரியாதைகள்செய்து தாம்பூலங்கொடுத்தனுப்பிவையுங்கள் மந்திரிப்பிரதானிகளே

மந்திரிகள்சொல் வசனம்

மகாராசனே தாங்கள்சொன்னபடியே மரியாதைசெய்து அனுப்பிவைத்தோம் மகாராசனே

வீரேந்திரன்சொல் வசனம்

நல்லது மெத்தசந்தோஷ மந்திரிகளே

பொதுவசனம்

அகோதெப்படியென்றால் விவாகத்திற்குவந்த தேசதேசத்தாசர்களும் அவரவர்கள்நகரம்போய்ச்சேர்ந்தபிறகு வீரகுமாரனுந் தமிழ்சிந்தாமணியும் இரதிகேளிசெய்கிறவிதங்காண்க.

வீரகுமாரன்சொல் கந்தார்த்தம்-இ-ம்-தோடி

புவனத்திலுமாளிகைசுற்சுவர்சுற்றிலுமிலகுசபையில்அருவுமூடுவே
நவரத்தினமலர்மாலைதுவசப்பணியணிகட்டிலில்
துயில்செய்வோம்வாடிநாமிருவரும்மயல்செய்வோம்வாடி
நயமாஞ்சப்ரகூடத்தியல்பாய்மஞ்சத்திற் மீது துயில்

தமிழ்சிந்தாமணிசொல- ந்தார்த்தம்-இ-ம்-தோடி-அடதாளம்

சுந்தரமிகுபஞ்சணையில்வந்துகலையைநெகிழ்த்திமரிசிலைமதனன்
விந்தையுமிகுமணையிலுமதுகந்தமுறுநல்லிங்கம்வைத்து
வேடிக்கைபார்ப்போம்நமதுதுயில்கூடியேதீர்ப்போம்
வேடிக்கையாயிப்போநாடிக்கேசேர்த்துக்கொண்டு
நாடுவோம்பலர்மாலைசூடுவோம்நாமினி வேடி

வீரேந்திரமகாராசன்சொல்-விருத்தம்-இ-ம்- ஆனந்தபைரவி

வீரகுமாரனேநீகேளாய்விசுசிதச்சிதனங்கள்
தீரனேஉமக்குத்தந்தேனதொருமையுநீருமிந்த
ஊரெலாம்பேர்களோங்கவுயர்சிம்மாதனத்திருந்து
சீரதாய்செங்கோற்கொண்டுசெழித்துநீருந்திடீரே

வ-ம் கேளுமெனதுமருமகனாகியவீரகுமாரமகாராசனேஎனதுமகளைக்கல்வியிற் செய்த்துவிவாகஞ்செய்துகொண்டபடியால் இந்தநகரத்தையும் நீரேயாண்டுகொண்டு சுகமாயிருப்பாய் வீரகுமாரமகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்

ஆ-ஆ-கேளுமையா கோசலைபுரியை யரசாட்சிசெய்யும் வீரேந்திரமகாராசனேநான எனதுதாயாரைவிட்டுவந்து அநேகநாளாய்விட்டதுஆனதால் என்பதிக்குப்போகவேண்டும் உத்திரவு கொடுத்தால் உ

ன் னுடைய குமாரத்தியை இட்டுக்கொண்டுபோய்பார்த்துவிட்டு மறு படியும்வருகிறேன் மகாராசனே

வீரேந்திரன்சொல்வசனம்

கேளாயப்பா வீரகுமாரமகாராசனே நீயும்போயுமது தாயைப் பார்த்துவரும்படியாய் கேட்கிறபடியால் இதோ எனது புத்திரியுங்கூ ட அனுப்பிவைத்தேன்சுகமாயிட்டுக்கொண்டு போய்வாருமப்பா.

வீரகுமாரன்சொல்-வசனம்

சரணஞ் சரணமையா வீரேந்திரமகாராசனே அப்படியே அழை த்துக்கொண்டு போய்வருகிறேனையா

வீரகுமாரன்சொல்-தரு-இ-ம்-தோடி-அட்டதாளம்

பல்லவி.

பேசவோம்வாராய்-பெண்மயிலேநாம்
போவோம்வாராய்

அநுபல்லவி

போவோம்வாயெந்தன் பூமியகனைத்தேடி
புண்ணியசொம்புவனிடம் நண்ணுமன்னையைநாடிப்-போ

சரணங்கள்.

துரிதமாய்நடப்போமானால் துடர்கானடங்குமே
தொகையொன்றுய்க்கிந்த வாலைமாலையுங்காட்டப் போ
அன்னமேயென்மனதிற் கானநற்சென்னமே
அதிசீக்கிரமாய்வாடி யருவையேநீவாடிப் போ
நந்திச்சாம்புவனிடநல்வனநோக்கியே
நாடிக்குடிசையினைத்தேடியன்னையைக்காணப் போ

பொதுவிருத்தம்-இம்சங்கராபரணம்

கோசலைபுரியைவிட்டுக் குளிர்முகத்தழிழாளோடு
பாசவீரகுமாரன்றன் பரிகரிசேனைசூழ
வாசியேழுடையதேர்மேல் வரவுநல்வனத்திலேதான்
தேசிகனளகைவேந்தன் திரள்கட்டியக்காரன்வந்தான்

வ-ம். அகோதெப்படியென்றால் இந்தப்படிக்குகோசலை புரியில்த மிழ்சிந்தாமணியைத் தமிழில்வென்று வீரகுமாரன் தனது பதியை நோக்கிஅடவியில்வரும்போது அளகாபுரியையரசாட்சிசெய்யுங்குபே ரன்வாசற்காக்குங்கட்டியக்காரன்சபைக்குவருகிறவிதங்காண்க

பல்லவி.

கட்டியக்காரன்வந்தான்-குபேரன்வாசல்
கட்டியக்காரன்வந்தான்

அநுபல்லவி

மட்டில்லாவடிமைசேர் மகாராசாக்கள்புகழுங்-கட்டி

சரணங்கள்.

கச்சைசல்லடம் தொடுத்துமிகுப்பிரகாசக்
கையினிற்கத்தி யெடுத்து
பச்சைடவால்வரிசுடன் பட்டயங்கள்தரித்து
பாவாணர்மொய்த்திடும் பட்டயங்கள்தரித்து

கட்டியக்காரன்சொல்-வசனம்.

அதிகாரதேப்படியென்றால் இப்படிக்கு அளகாபுரியை யரசாட்சி செய்யுங்குபேரமகாராசனிந்தமதுசபைக்குவருகின்றார் எச்சரிக்கையா கவிருங்கள் சனங்களே.

குபேரன்வருகிற-தரு-இ-ம்-கலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

குபேரராசன்வந்தான்-கொலுவிருக்கக்
குபேரராசன்வந்தான்

சரணங்கள்.

ராஜராஜர்புடை சூழ்வேசமுகந்தனில்
நாகரீகமிர்தர்க ளாடவே
தேசம்புகழுஞ்சித்ர சேனனுங்கூடவே
மாசில்லாதளகைவில் வாசமாயாளும்[illegible]ர-குபேர
விருதுபல்லவர்கள் படிக்கசிங்காரமாய்
வெள்ளைக்குடைகள் பிடிக்க
ஒருபுறத்தினின்வர்ண ரொயிலுடனே துதிக்க
ஊர்வசிமேனகை சீருடனடிக்கவே
தங்கக்கலச மணிக்குஅணிபதக்கத்
தாவடத்துடன் முனைந்து
சிங்காரமாய்க்கொலு திகழவுமவெகுவித
மங்களமாதர்கள் மகிழுடன்பாடவே-குபேர

குபேரன்சொல்-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

கட்டியக்காராவாராய் கானகத்திலதிர்ந்து
மட்டில்லாச்சேனைசூழ மன்னவனேராவானுன்
திட்டமாநீயுமங்கே தீவிரமாகச்சென்று
சட்டமாய்சேதிகண்டு சலுதியிங்வருகுவாயே.

வ-ம். ஆரடா அடா ஆசாரவாசற்காக்குங்கட்டியக்காரா இப்படிவா அதோபார்த்தாயாகாட்டில்ஆனைசேனைபரிவாரங்களோடு புறப்பட்டு யாரோ ஒரு அரசன்வருகிறான் ஆகையால் சீக்கிரமாய்நீயங்கேசென்று சந்ததியைத் தெரிந்துகொண்டுவாரும்பிள்ளாய்

கட்டியக்காரன்சொல்-வசனம்

சரணஞ்சரணம் அப்படியேயறிந்துக்கொண்டுவருகிறேனையா

கட்டியக்காரன்சொல்-விருத்தம்- இ-ம்-ஆனந்தபைரவி

அதிவீரபராக்கிரமத்தோட்டவியிற்சேனைசூழ
கதியொடுசொல்லுந்தீரக்காவலர்சரணமையா
துதிபெறுமளகையாளுந்தோன்றலும்மைக்கண்டு
சதிருடனுந்தன்சேதிதனைக்கேட்டுவரச்சொன்னாரே

வ-ம் சரணஞ்சரணம் அதிவீரபராக்கிரமத்தோடு நால்வகை சேனை சூழயிருந்தவேகமோடுபோகின்ற மகாராஜனேசற்றுநில்லும்ளங்கள் அரசனாகியகுபேரமகாராசன் தம்முடைய வீரத்தைக்கண்டு சந்தோஷங்கொண்டு தங்களுடையவரலாற்றைக்கேட்டு வரச்சொன்னாரையா மகாராசனே

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

என்வரலாறுகேளா யெழிற்கட்டியக்காரா
நன்மதிகுலத்துதித்த நனிவீரகுமாரனானேன்
உன்னண்ணல்மகனுரென்னேதிட்சமர்புரிந்திளைத்த
பின்றமிழாளைவென்றுபெருமையென்னகர்போகின்றேன்

வ-ம். கேளுமப்பாகுபேரமகாராசன்வாசற்கட்டியக்காரா உங்கள் ராசன் உன்வரலாற்றைக்கேட்டு வரச்சொன்னாரென்று நீசொல்லுகிற படியால் அதிலுஞ்சொல்லுகிறேன்கேள் நான் விஜயநகராளும் வீரசூரமகாராசன் புத்திரன் என்பெயர் வீரகுமாரனென்று சொல்லுவார்கள் கான்வனத்தில் உங்களிராசன் புத்திரனாகிய சித்திரசேனனைச் செயித்தபின் தமிழ்சிந்தாமணியைக் கல்வியின்வாதில் வென்று மணஞ்செய்து என்பதிக்குச்செல்லுகிறேன் அப்பா கட்டியகாரா.

கட்டியக்காரன்சொல்-வசனம்

கேளும்மகாராசனே உன்னைப்போற்சவுரியபராக்கிரமத்தில் வல்லவருலகத்திலுண்டோ தங்களுடைய விருத்தாந்தங்களைத் தெரிந்துகொண்டேன் நீர்சற்று இங்கேதானேநில்லும் நான்போய் ராசனுக்குச் சொல்லி வருகிறேன மகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்

நல்லது அப்படியேயிருக்கிறேன் சொல்லிவாருமப்பாகட்டியக்காரா

கட்டியக்காரன்சொல்-வசனம்

சரணஞ்சரணமையா குபேரமகாராசனே நீர்கட்டளையிட்டபடிக்குநான்போய் விசாரித்தசங்கதியைகேளும்நமதுசித்திரசேனமகாராசனைச்சமரில்வென்ற வீரகுமாரமகாராசன் தமிழ்சிந்தாமணியைத்தமிழிற்செயித்துவிவாகஞ்செய்துக்கொண்டுபோகின்றார் இதுதான்சங்கதி மகாராசனே.

குபேரன்சொல்-விருத்தம்-இ-ம்-தோடி.

நல்லதுகாவற்காராநீயவரையிங்கே
மெல்லெனவருகவேண்டிமேன்மையாயென்பேர்தன்னைச்

சொல்லியேயழைத்துவாருந்தோகையென்மகளையுந்தன்
றொல்லைபிற்புகழ்மோங்கவியர்மணஞ்செய்த்தானே

வ-ம்- ஆ ஆ ஆ ஆகேளுங்கட்டியக்காரா அவன்மெத்தக்கெட்டிக்காரன் என்மகளைச்சபரில்செலித்த சாமர்த்தியனல்லவா மேலுந்தமிழ்ச்சிந்தாமணியைமணஞ் செய்தானல்லவா அப்போர்க்கொற்றவனுக் கென்னு மகளை யவசியங்கரவேண்டுமாகையால் நானிங்கே யழைத்துவரச்சொல்லேனென்கிறதாய் அழைத்துவாரும்பிள்ளாய்கட்டியக்காரா.

கட்டியக்காரன்சொல்-வசனம்

சரணஞ்சரணம் மகாராசனே தங்களுடைய உத்தாரப்படியே அழைத்துவருகிறேனையா சுவாமி

கட்டியக்காரன்சொல்-விருத்தம்-இ-ம்-மோகனகலியாணி

மண்ணுளோர்புகழும்வீர குமாரனேசரணமையா
தண்ணளிகுணத்தோனெங்கட்டராபதியுமிமையிப்போ
தண்ணியசமூகத்திற்கு னாடியேயழைத்தீர்நீயுந்
திண்ணமேசெய்யாமற்றான் றீவிரம்வருகுவீரே.

வ-ம் கேளுமையா வீரகுமாரமகாராசனே எங்களரசனாகிய குபேரமகாராசன் தங்களை அதிசீக்கிரமாகத் தமதுதிருசபைக்கு அழைத்துக்கொண்டுவரச்சொன்னானதால் நீர்தடைசொல்லாமல் வாருமையா மகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்

ஆனால்நடவுமப்பா இதோவருகிறேன் கட்டியக்காரா

குபேரன்சொல்-வசனம்

வாரும்வாரும்வலியுற்ற வீரகுமாரமகாராசனே ஆனைச்சாவடியிலானைகளையும் குதிரைச்சாவடியிற்குதிரைகளையும் பெண்களரண்மனையிற்பெண்களையுமவிட்டுவிட தண்டுதலைவருக்குத்தாரஞ்செய்து நீரிந்த சிம்மாதனத்திலிருமையா வீரகுமாரமகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்

நல்லது அப்படியே தங்களுடைய சித்தத்தின்படி எழுந்தருளினேனையா

குபேரன்சொல்-வசனம்

ஐயாவீரகுமாரமகாராசனே நீர்காட்டில்சென்ற ஆடம்பரத்தைக்கண்டு என்காவலாளியாலறிந்து உன்வீரத்தைக்குறித்து சந்தோஷத்தையடைந்தேன்மகளாகிய வாலைச்செளந்திரியை யுமக்குக் கொடுக்கவழைத்தேனையா மகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்

நல்லதுதீரப்படியே மகாபாக்கியம் அந்தப்படியே நடத்தலாகும் குபேரமகாராசனே

சித்திரசேனன் சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

அளகையாள்வேந்தேயானுமடவியிலோர்நாட்சென்று
வளமுடன்வேட்டையாடிவருகையின்வல்லியத்தை
பிளந்தவரிருவர்மேற்சண்டையிடயான்செப்பவென்னை
வளவென்றுகட்டிவிட்டமகாத்துமனிவர்காணையா

வசனம்

கேளும்எனதுபிதாவாகிய அளகாபுரியாளும் குபோராசனேயா
ன் ஒருநாள் காட்டிற்சென்றுவேட்டையாட அதிற்பட்ட ஒருபுலியான
துபீறியோட அதைநான் துரத்திக்கொண்டுவர இவரும்வேட்டையாடி
க்கொண்டுவந்து என்புலியைக்கொன்றார் அக்காலையினானித்தப்
போர்செய்யவென்னை கட்டிக்கொண்டுசென்றாரப்போதொருமுனிவர்வ
ந்துசொல்லிவிடுவித்தார், இவர்மகாபராக்கிரமசாலிஇவருக்குஎனதுதங்
கையைக் கொடுப்பதுமகாவுத்தமமையா பிதாவே

குபேரன்சொல் வசனம்

கேளுமப்பா சித்திரசேனா உன்மனதின்படியே உனது தங்கை
யை அவனுக்குக்கலியாணம் பண்ணிவைக்கிறேன் ஆதலால் வாக
ைநடத்த நமதுபுரோகிதனையழைப்பியுமப்பா

சித்ரசேனன்சொல்-வசனம்

அப்படியே நமது புரோகிதரை ஒருநொடிப்பொழுதி லழைப்பிக்
கிறேனையா பிதாவே

பொது-வசனம்

இந்தப்பிரகாரஞ்சித்ரசேனன் சொல்லகுபேரமகாராசன்சபைக்கு
பஞ்சாங்கஞ்சொல்லும் புரோகிதர்வருகிறவிதங்காண்க

புரோகிதர்வந்தார் பஞ்சாங்கஞ்சொல்லும்
புரோகிதர்வந்தார்

அநுபல்லவி

தாரதலம்புகழ் பராக்கிரமத்துடனே-புரோ

சரணங்கள்

தலையில்குல்லாயணிந்து காதினிற்
திகழ்குணபாவயீ பூணந்து
புலனத்திலுள்ளசேதி பொழிந்திடும்பஞ்சாங்க
புக்ககன்னைசயிற்கொண்டு சுத்தச்சைவசமைய புரோ
பட்டுவஸ்திரந்தரித்து பூநூல்
பதக்கமுமலங் கரித்து

கட்டுக்கட்டாககீறு கனிக்கநெற்றியிற்பூசி
கால்ன்முன்பாகஞ் காதலந்தனைவீசி - புரோ
கமலமுகமுமின்ன சுகந்தை
கர்ப்புநெற்றியிற் றுன்ன
விமலனைப்போலவே வேடந்தனைப்பூண்டு
வேதபாராயணன் விளம்புமனதுகந்து - புரோ

புரோகிதர்சொல்-வசனம்

ஆசீர்வாதம் மகாராசனுயிருக்கவேண்டும் குபேரமகாராசனே நோக்குண்டான காரியங்களிலேதுங் குறைவில்லாமற் செய்வேன் என்னையழைத்தகாரியமென்ன சொல்லுமையா மகாராசனே

குபேரன்சொல்-வசனம்

சரணஞ்சரணம்சுவாமிகளே விசையநகராளும் வீரகுமார மகாராசனுக்கும் எனது புத்திரியாகிய வாலைச்சௌந்திரிக்கும் விவாகஞ் செய்யவேண்டுமாகையால் அவற்கெனக்கும் நாள்வைத்துக்கொடுக்க வேண்டுஞ்சுவாமிகளே

புரோகிதர்சொல்-வசனம்

அப்படியே பஞ்சாங்கத்தில் பார்த்தேன் சித்திரைமாதம் பத்தாந்தேதி வெள்ளிக்கிழமைகாலையில் நலலக்கினமிருக்கிறது தாங்கள் கலியாணமண்டபமியற்றி சகலவஸ்துக்களுஞ் சேகரம்பண்ணு மகாராசனே

குபேரன்சொல்-வசனம்

ஐயாசுவாமிகளோ தங்களுத்தாரப்படிக்குச்சகலமுஞ்சேகரமாச்சு கலியாணமண்டபமுஞ்சிங்காரித்திருக்கின்றது முகூர்த்தமடக்கட்டும்

புரோகிதர்சொல்-வசனம்

ஆனாலும்பிள்ளையும் பெண்ணையும் ஸ்நானஞ்செய்துவரச் சொல்லும் மகாராசனே

குபேரன்சொல் வசனம்

அப்படியே இதோ கலியாணமண்டபத்திற் கொண்டுவந் துட்காரவைத்தேன் புரோகிதரே

புரோகிதர்சொல்-வசனம்

பிள்ளைக்கு பெண்ணிற்கும் சகலஆபரணங்களலங்கிர்தஞ்செய்ய பின்பு திருமங்கிலியத்தை இந்ததட்டில்வையுமகாராசனே

குபேரன்சொல்-வசனம்

இதோவைத்தேனையா சுவாமிகளே

புரோகிதர்சொல்-வசனம்

அப்பா வீரகுமாரா வாலைச்சவுந்தரிக்குத்திருமங்கிலிய தாரணஞ் செய்துவிடும்பிள்ளாய்

வீரகுமாரன்சொல்-வசனம்

ஐயாசுவாமிகளே தாங்கள்கொடுத்ததிருமங்கிலியத்தைத் தரித்திட்டேனையா சுவாமிகளே

புரோகிதர்சொல்-வசனம்.

சிரஞ்சீவிசிரஞ்சீவிசுகி ஸ்ரீதீர்த்தமங்கிலிபபிரசாத சித்திரஸ்துவமி சாளிசித்திரஸ்து அப்பா வீரகுமாரா இந்கேயுரசாணி யுமூன்றுதரம்வல மாகச்சுற்றிப்போய்விடுகள் மேளவாத்தியங்களைநடக்கட்டும்.

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியே நல்லதையா சுவாமி.

பிராமணாள்சொல்-வசனம்.

ஐயாமகாராசனே எங்களுக்குத் தாம்பூலதட்சணை கொடுக்கவே ணும்வேக்குத்தான்மெத்தகஷ்டம் அந்தச்சேசஷனிருக்கிறானே அவனை சும்மாவேயிருந்தான் வெதகோஷ்டம்விளம்பவேயில்லை நான்தான்சொ ல்லிக் கொண்டேயிருந்தேன் எனக்குத்தான்தரவேண்டும்

குபேரன்சொல் வசனம்.

ஐயாபிராமணர்களே உங்களுக்குவேண்டியதிரவியங்களைத்தங்கே ன் எடுத்துக்கொண்டு செலவுபெற்றுக்கொள்ளுங்கள்.

பிராமணாள்சொல்-வசனம்.

மகாராசனுயிருக்கவேண்டும் நாங்கள்போய்வருகிறோமையா.

பொது-வசனம்.

இந்தப்பிரகாரம்பிராமணாள்சென்றபின் வீரகுமாரன்பள்ளியறை யிற்சென்று சொல்லுகிறதிதனைகாண்க.

வீரகுமாரன்சொல்-கந்தார்த்தம்-இ-ம்-தோடி-அடதாளம்.

தங்கக்குடமென்னும்-இரண்டு-கொங்கைகுடம்தாபிடித்துகுறியு
மடுத்துகங்கைப்புனல்பெருகிடவே திங்கட்சுடரோனையல்
தீர்க்கிறேன்வாடி-சமர்த்தைநான்-பார்க்கிறேன்வாடி
தீர்க்கிறேனுன்சமர்த்தைப்பார்க்கிறேன்வாவுன்னைச்
சேர்க்கிறேன்மயலினல்மூர்க்கமுடனேயானும் தீர்க்

வாலைச்சௌந்தரிசொல்-கந்தார்த்தம்-இ-ம்-தோடி-அடதாளம்.

பொற்பாவையிறைப்பாகவே சிப்பிரமைகொண்டு யெந்தன்முன் புநிமுடனிற்கும அற்புதனேநாயிருவரும் கற்பனையோடு காதல்செ ய்து.

காணலாம்வாரீர் சுகபோகம்-பூணலாம்வாரீர்
காணலாஞ்சுகபோகம்நாணமில்லாதுனை
பாணமெய்யதில்முக்கோணமதனில்நாமும் . காண

குபேரன்சொல்-வசனம்.

ஐயாவீரகுமாரமகாராசனே நீர்சுபட்சேமமாய் தமிழ்சிந்தாமணி யைவாலைச்சௌந்தரியையும் வைத்துக்கொண்டுசுகமாயிருந்துக்க ஆனை சேனைபரிவாரம்நவரத்தினங்கள்சீதனமாகப்பெற்றுக்கொள்ளுமப்பா.

உச்சிதமாய்ச்சென் றுரைக்கவவட்கு
இவளும்வந்தெனக்கு இயம்பிறைகளியை
புலியுளோர்மகிழப் பொழிப்புரையுரைத்தேன்
பின்பவள்மகிழ்ந்து பேணியேமணந்தாள்
அன்புடனிவளையழைத்துநான் வரும்போ
தெண்டிசைபுகழ்ந்தே கத்திசிந்துபோன்
கண்டெனையடித்துக்கடிநகர்சென் றுதன்
மகளையெனக்குமணஞ்செய்வித்தான்
சுகமொழிதனைசகுந்தாமாய்க்கூடி
பல்வரிசைகளும்பண்புடன்பெற்றுக்
கல்மனமந்திரியைக்கடிந்துயான்கொல்ல
சிந்தையில்நினைந்தேசீக்கிரமாயிங்கு
வந்தனனம்மாவரலாறிதாமே.

வீரகுமாரன்சொல்-வசனம்.

கேளுமம்மாதாயே இனிநாமதுரைநகருக்குப்போகவேண்டும் புறப்படும் ஐயாஎங்களையாதரித்த நந்திச்சாம்புவரேநீரும்வாரும்.

நந்திச்சாம்புவர்சொல்வசனம்.

அப்படியேவருகிறேன் கடவுமப்பா வீரகுமாரா

வீரகுமாரன்சொல்-தரு-இ-ம்-தோடி-அடதாளம்.

பல்லவி.

போவோம்வாரும் நகரைநோக்கிப்
போவோம்வாரும்

அநுபல்லவி.

தாரும்பரிகள்பூண்ட தனிரதத்திலேறி
தனிசாம்புவரோடு தனிநகர்தனைநாடி-போ

சரணங்கள்.

சுற்றிசேனைகள்சூழ-வீரர்களெல்லாந்
துதிசெய்துதொழ
எத்திசையும்புகழ் சிந்தாமணியாளும்
இளங்கொடியாய்வாலைச் சௌந்தரியோடுநாமும்-போ

களபாற்றின்கரைதாண்டி-மந்திரியைக்கொல்ல
கனிப்பாயானைவேண்டி
துணையாங்காளியைக்கண்டு துதிசெய்துநான்விட்டுத்
துரையாகியவென்றந்தை யரசியற்றியவிடம்-போ

சந்திரகிரிதானே-தெரியுதம்மா
சஞ்சலமினியேனோ
அந்தவண்ணனரு ளாலவ்வரசனை
யந்தகனிடஞ்சேர்ப்பேன் சிந்தையின்துயர்தீர்ப்பேன்-போ

பொதுவிருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

வீரகுமாரமன்னன்விளங்கியுவன்னையோடு
புரா சந்திரமாவெற்பின்பார்த்திபனறன்னைக்கண்டு
தீரமேயுனக்குமுண்டோ தீதுமன்னனேயென்றுரைத்
தாரமாயவழைக்க ராவிசண்டைக்குவாவென்றானே.

வ-ம. இந்தப்பிரகாரம் வீரகுமாரராசன் தன துதாயோடு சந்திரகிரி யைக்கண்டு அந்தவூரைப்பரிபாலனஞ்செய்கின்ற சந்திரகிரிராசனைக்க ண்டு அடாபொல்லாதபாவிஎனது தாயைமனைவியாகவிரும்பின துஷ்ட னேஎன்று அவனோடியுத்தஞ்செய்யவழைக்கச் சந்திரகிரிராசன் சொ ல்லுகிறவிதங்காண்க.

சந்திரகிரிராசன்-சொல்விருத்தம்-இ-ம்-நாட்டை.

கனமுடனிங்குவந்துகற்சித்துயென்னைக்கண்டு
மனவலியாலேநீயுமற்போர்க்குவாடாவென்றாய்
பனங்காட்டுநரியைப்போல்பயில்தொனிக்கஞ்சுமோவென்
சினமதைப்பொறுத்தேன்முன்னஞ்சீக்கிரமாயோடிப்போடா.

வசனம்.

ஆ-ஆ-ஆ-பாசு அரடாசத்திரிக்காயில் கால்முளைத்தாப்போலிரு க்கிறது என்முன்கர்ச்சித்து சற்றும்பயமில்லாமல் சண்டைக்குவாடா வென்றழைத்தால் இத்தனைநாளெங்கிருந்திப்போவந்தாய் பனங்காட் டுநரிசலசலப்புக்கஞ்சுமாஆகையால்நீசிறுபிள்ளையென்று கோபத்தை ப்பொறுத்தேன் தப்பியோடிப்போடா மூடா.

வீரகுமாரனுக்குஞ்-சந்திரகிரிராசனுக்கும்யுத்தம்.

கண்ணிகள்-இ-ம்-மத்தியமாவதி-அடதாளம்.

ஓடிப்போகச்சொன்னாயோடாவென்னம்பாலுன்
னுடம்பிளந்திடுவேனென்னெதிரில்வாடா

சந்திரகிரிராசன்-சொல்லல்.

வேடிக்கையாய்ச்சொல்லியழைத்தாயேபோருக்கு
விளைந்தபின்றெறியும்நீபேசாமற்போடா

வீரகுமாரன் சொல்லல்.

பேசாதேயென்றேநீயெங்கட்குக்கப்பணம்
பேணியேகட்டுமுனக்ககமோடா

சந்திரகிரிராசன்-சொல்லல்.

வீசாதேல்லாப்வீசித்தலைகீழாய்விழுகிறாய்
விட்டாதேயுனைக்கொஞ்சத்தில்விடுவேனோ

வீரகுமாரன் சொல்லல்.

விடுவேனென்றாயெனையினிக்கணையினாலுற்றோர்கள்
வேகப்பரிகளெல்லாம்விழுந்தழுதப்பாராய்

சந்திரகிரிராசன்-சொல்லல்.

அடுக்காயர்த்தச்சக்கிராமணைமும்வருகிறது
அதற்குத்தப்பித்துக்கொண்டால்நீயேசமர்த்தன்

வீரகுமாரன்சொல்லல்.

சமர்த்துடனீயிட்டவம்புகளெல்லாம்வீணாய்
சாம்பலாய்போனதைச்சார்ந்துநீபாராய்

சந்திரகிரிராசன்-சொல்லல்

கமழுங்கெருடன்முன்சொகுவெதிர்த்ததுபோலக்
கடுகவெறுத்தாய்க்காளையென்றல்லோபொறுத்தேன்

வீரகுமாரன்சொல்லல்

அடவுள்ளக்குஞ்சரபணுவளவிரும்பினால்
அகமடக்குவதைநீயறியாயோமூடா

சந்திரகிரிராசன்சொல்லல்

படிமீதிலின்னேரம்பார்த்தேனின்சாமர்த்தியம்
பாலகனுனுபயபாய்க்கொல்வேனே

வீரகுமாரன்சொல்லல்

காட்டினிலவைபஞ்சைத்தூற்றினதைப்போலுங்
கனத்தளங்களிதோமாண்டதேமூடா

சந்திரகிரிராசன்சொல்லல்

கூற்றுவன்போலவந்தோற்றினாநீயென்றனைக்
குணமாய்ரட்சித்தருளுவாயுன்னடியே

வீரகுமாரன்சொல்லல்

அடிமேலடியடித்தாலம்மிநகருமென்ற
வற்புதக்கதையைநானின்றிடங்கண்டேன்

சந்திரகிரிராசன்சொல்லல்

இடியிடித்ததுபோலென்னிருதயம்நடுங்குது
இமிசைபண்ணுதுபாணமெனசெய்வேனையா

வீரகுமாரன்சொல்லல்.

இந்தவம்பாலுன்றன்சிந்தனைவாங்கிறேன்
ஈசனைமனதினிலெண்ணடாபாவி

சந்திரகிரிராசன்சொல்லல்

எந்தனுயிருமெமலோகஞ்சேருதே
ஏனந்தப்பெண்ணைநானிச்சித்தேனையோ

வீரகுமாரன்சொல்-வசனம்

ஆ ஆ ஆ நல்லதடா துஷ்டனுகியராசனேபிறருடையமனைவியை தாயாகவெண்ணாமல் மனைவியாகநினைத்தாயே தெய்வம்பொறுக்குமோ பொறுக்காதாகையாலுனக்கிந்தவிதி வந்ததைபார்த்தையா.

வீரகுமாரன்-சொர்ணகாந்திக்குச்சொல்வசனம்:

சர்வ ஞ்சரணம்கேளுமம்மா என்னைப்பெற்றதாயே முன்காலத்தி ல்நீர்விறகுசிற்றசிவனம்செய்யுங்காலத்தில் உன்மேல்மோகங்கொண் டழைக்கப்பாவிசண்டாளனை நான்வாதில்லையென்றுசெயித்தேன் ஆகை யால்அந்தப்பாவியினுடைய பூமியின்செங்கோலைநமக்குத்துணையாகிய பிரானைப்போல்வளர்த்தநந்திச்சாம்புவருக்குப் பட்டங்கட்டிவைக்க வேண்டும் ஆகையால் சம்மதந்தானோவம்மா தாயே.

சொர்ணகாந்திசொல் வசனம்

கேளுமப்பா எனதாசைக்கிசைந்தகண்மணியே நமக்கு உபகார ஞ்செய்தநந்திச்சாம்புவர்க்கு இந்தச்சந்திரகிரிநாட்டைக்கொடுத் தால் அவர்செய்தஉபகாரத்திற்குப்பதிலுபகாரமாயிருக்குமப்பா.

வீரகுமாரன்சொல்விருத்தம்-இ-ம் அடாணா.

நந்திச்சாம்புவரே கேளீர்நானொருவார்த்தைசொல்வேன்
அந்தபாவியெனக்குமெனாய்க்கநாளிலுதவிசெய்தாய்
உங்களுக்கோர்கைமாறுஉண்மையாய்ச்செய்யவேண்டுஞ்
சந்திரகிரியையிக்கச்சதிநடனாளுவீரே.

வசனம்

கேளுமென்தாரையும் என்னையுங்காப்பாற்றியநந்திச்சாம்புவரே மூன்றுநாளிலென்றுயைக்குற்றமின்றிகாப்பாற்றிவந்தஉபகாரத்திற்குநா னென்னகொடுத்தாலுந்தீராது ஆகையாலிந்தசந்திரகிரியை நீயரசாட் சிசெய்துக்கொண்டிருமையா நந்திச்சாம்புவரே

நந்திச்சாம்புவன்சொல் வசனம்

அப்பாவீரகுமாரமகாராசசெல்வமேநீர்பார்த்துவைத்த கட்டளைப் பிரகாரந்தப்பாமல்அரசாட்சிசெய்கிறேனை அதுசரியல்லநானோநீச்சன் செங்கோற்கொண்டாளக்கூடாது அப்படியாண்டாலும அடுக்காது ஒ ருவேளையப்படியாகவடுத்தபோதிலும் மறுதேசத்துராசாக்கள் என்மீ துசமருக்குவருவார்கள் வேண்டாமப்பா

வீரகுமாரன்சொல் வசனம்.

ஐயாநந்திச்சாம்புவரேநானிருக்க உங்களுக்குப்பயமென்ன சுக மேயாண்டுக்கொண்டிரும் நான்போய்வருகிறேனையா

சொர்ணகாந்திசொல் வசனம்.

ஓய் அண்ணா நந்திச்சாம்புவரே இத்தனைநாளெங்களைக் காப்பாற் றினீராகையால் இப்போதென்மகனுடன்கூடஎன்பதியைச்சேரப்போ றேப்படியால் ங்காலச்சியத்தைக் கொள்ளும் எனக்குத்தாரந்தாருமை யா நந்திச்சாம்புவரே.

நந்திச்சாம்புவன்சொல் வசனம்.

அம்மா சொர்ன்னசாந்தியே அப்பாகுழந்தாய்வீரகுமாரமகாராசனே உங்களிட கிருபையால் நானிந்தநகரைக்கொண்டேனுனையால்நீங்கள் சுகமாய்ப்போய்வாருங்கள்.

சொர்ன்னசாந்திவீரகுமாரனுக்குச்சொல் வசனம்

அப்படியேபோய்வருகிறோம்ப்பா நந்திச்சாம்புவனே.

பொதுவிருத்தம் இ-ம் தோடி.

சந்திரகிரியின் மன்னனிறந்தபின்
சாசநந்திச்சாம்புவர்தனக்கு
விந்தைசேர மகுடஞ்சூட்டியபின்னால்
விளங்கியபடைகளுங்கூடி
வந்துநற்சாதவழியிற்றண்டிறக்கி
வைத்துவிட்டொருண்டியாய்த்தானே
அந்தமாநகரமதிற்செம்மைமழபா
லகத்துறவாரியன்வந்தான்

பொது வசனம்

அசோ தெதுப்படியென்றால்சந்திரகிரிராசன் இறந்தபிற்பாடுநந்திச்சாம்புவருக்குப அந்தராம்மகுடஞ்சூட்டிசேனைகளுடனே கூடிவந்துவி. ஐயநகரமருகில்தண்டுவிட்டிறக்கி வீரகுமாரன் தனியே விஜயபாகோமுட்டுசென்று வேடிக்கைப்பார்த்துக்கொண்டுபோகும்போது அந்தவேளையில்மழைபெய்ய அந்தப்பட்டணத்திலோர்வீட்டின் திண்ணையிலொண்டுருக்குபோது அந்தவழியாய் முன்னேங்காசியாத்திரைபோன பிராமணர்வருகிறவிதங்காண்க.

யாத்திரைபிராமணர்வருகிற—தரு-இ-ம் கமாசு ஆதிதாளம்

பல்லவி

யாத்திரைவேதியர்வந்தார் இதோ
யாத்திரைவேதியர்வந்தார்

அநுபல்லவி

காத்திரமாய்கையில் கரவடியுங்கொண்டு
காசிதீர்த்தமுங்கா வேரிதீர்த்தமுடன் யாத்தி

சரணங்கள்

ராமேஸ்வரலிங்க தெரிசனஞ்செய்து
ராமருச்சரித்த மந்திரமுங்கொண்டு - யாத்தி

திருவெண்ணீறுந்திரு மஞ்சள்முங்குமமும்
நீரதமெடுத்து திகம்பரரூபமாய - யாத்தி

காசிவிஸ்வேஸ்வர கனகவிசாலாட்சி
சுதிராமலிங்கக் கடவுளையென்றுமே - யாத்தி

வீரகுமாரன்சொல்-விருத்தம்-இ-ம்-தோடி

வேதனுஞ்சுணர்ந்தமிழ்க்கவேள்விபைநடத்துந்தேவே
ஆதாவாய்த்துதிக்கதேனருமறையோரேபோற்றி
நீதிலாதோளின்மீதுதீர்த்தக்காவடியைக்கொண்டு
வேதன்போலவநதீர்கண்டவிந்தைதனைவிளம்புவீரே

வசனம்

சரணஞ்சரணம்அசோவாரும்சுவாமியாத்திரைபிராமணரேவேத பாராயணத்திலும்மகாகாரியவேள்வியிலும்உயர்ந்த பெருமைபொருந்தியவரேகீர்தோளின்மீது தீர்த்தகாவடியைவைத்துபிரமாவைப்போலவருகிறீரே எந்தவூர்செல்கிறீர் அங்குகண்டவதிசயமென்ன அதுகளைச்சொல்லுமையா சுவாமிகளே

யாத்திரைபிராமணர்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

அறைகுவேன்கேளாயிவ்வூர்ராசனைமந்திரிதானுங்
கருவமாகிறிகிணற்றிற்றள்ளினதையானுங்கண்ட
பெரும்பாவந்தனைதுலைக்கப்பேணியேதீர்த்தமெல்லாம்
வரிசையாயாடியிப்போவந்தேன்விந்தையுமிதானே

வசனம்

கேளும்மப்புராசகுமாரா நான் தீர்த்தயாத்திரைபோனவிந்தையை நீ கேட்கிறபடியால்நானுஞ்சொல்லுகிறேன்கேளும்இந்தவிஜயமாநகரையாண்ட வீரகுமார ராசனை தத்துவப்பிரகாச மந்திரி வேட்டையாட இட்டுக்கொண்டுபோய்சர்வகிரிகிணற்றிற்றள்ளிவிட்டான் அதைப்பார்க்கநான் என்பாவந்துலையக்காசியாத்திரைபோய் இப்போதோநானுமென் வீட்டிற்குச்செல்லுகிறேனையா மகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்

ஆ-ஆ ஆ மகாவாச்சரியமாக விருக்கின்றது அப்பேர்க்கொற்றமந்திரியும் இந்தவூரிலிருக்கின்றனா உம்முடைய வீடுஇதுதானோ ஐயா பிராமணரே

பிராமணர்சொல் வசனம்

ஆம்ஆம் என்னுடையவீடு இதுதான்மகாராசனே

வீரகுமாரன்சொல் வசனம்

ஆனால்சரிதான் ஐயாசுவாமிகளே அவர்இறந்துபோய்விட்டாரே அவருடைய பெண்சாதி யிருந்தாளே அவளெங்கிருக்கின்றாள்சொல்லுமையாசுவாமி

யாத்திரைபிராமணர்சொல் வசனம்

ஐயாமகாராசனே அந்தம்மாளுக்குவயிற்றில்நான்குமாதம்கெற்பமென்றசேதிகேட்டு அவளைக்கொல்லநினைக்க அந்தம்மாளெவ்விடமோ போய்விட்டாளையா இதுதான்நானறிந்தசேதிபோபப்பாமகாராசனே

வீரகுமாரன்புலம்பல்-கண்ணிகள்-இ-ம்-கெண்டா-அடதாளம்.

என்னென்றுசொல்லுவேனென்றலைகிறிலைய — பிராமணரே-ஐயோ
இவ்விதியெவருக்குமாகாதாரிகளைய — பிராமணரே
அநியாயமனியாயமவனிதனிலுமுண்டோ — பிராமணரே - இந்த
அரசாட்சிசெய்திடுமவனிதனிலுமுண்டோ — பிராமணரே
என்தாய்சொர்ணகாந்திமினையுடன்காட்டில் — பிராமணரே-சென்று
இனியெல்லாதுபாரடைந்தென்னையீன்றவளோ — பிராமணரே
நன்றுதேளகோசலையின்பக்கர்தன்னிற் — பிராமணரே-நானும்
யெழிற்றமிழ்மடந்தையைக்கல்வியினில்வென்றேன் — பிராமணரே
வடிவானதமிழாளும்வாலைச்சவுந்தரியை — பிராமணரே - நல்ல
மணமுஞ்செய்தவுந்தென்வகையுடனையா — பிராமணரே
என்றகப்பனைக்கொன்றபிடர்பாவியைக்கொல்ல — பிராமணரே- நாங்
ளிங்குவந்தயிடத்திலினியும்மைக்கண்டேனன் — பிராமணரே
கடவுளைப்போலும்மைக்கண்டதேபாக்கியம் — பிராமணரே-என்னை
காப்பாற்றிடுவிதமுமதேயல்லாது — பிராமணரே
பாவியாகியமந்திரிபாழுங்கிணற்றினில் — பிராமணரே- அவனை
பதைக்கத்தள்ளவிடம்பார்க்கவேண்டுமையா — பிராமணரே
காண்பித்ததண்டாறுற்கனகபாத்திரந்தாரேன் — பிராமணரே- அந்தக்
கடுசர்வகிரிமலையெங்கேகாட்டுமையா — பிராமணரே
வாரும்வாருமந்தவழிதெரியாதையா — பிராமணரே-நீரும்

நீர்பயப்படவேண்டாம் அப்படியேபோய்வாரும்மகாராசனே.

பொது-வசனம்.

இந்தப்பிரகாரம்வீரகுமாரன் பிராமணனிடத்தில்தனது தகப்பனுடைய சங்கதிதெரிந்துக்கொண்டு தான் தண்டுவிட்டிறங்கியிருக்குமிடம்வந்துசேர அன்றிரவுபோய் மறுநாட்காலமே தனது தூதுவரையழைத்துச் சொல்லுகிறவிதங்காண்க

வீரகுமாரன்-சொல்கவி.

ஆரடா தூதர்கள் அதிசீக்கிரத்தில்
ஓராய்வருகுவீர் சேதியொன்றுரைப்பேன்
வ-ம்- ஆரடா தூதர்களே இங்கே ஓடிவாருங்கள்

தூதர்கள்சொல்வசனம்.

இதோவந்தோமையா மகாராசனே

வீரகுமாரன்சொல்-வசனம்.

ஆரடா தூதர்களே நீங்கள் இந்தவூரில்வடக்கேபிராமணர்வீதியில் யாத்திரைபோய்வந்த பிராமணரிருக்கின்றார் அவரையழைத்து வாருங்களடா தூதர்களே.

தூதர்கள்சொல்-வசனம்.

அப்படியே அழைத்துவருகிறோமைய்யா சுவாமி

தூதர்சொல்-வசனம்.

ஆரைய்யா இந்தவீட்டில் காசிக்குப்போய்வந்த பிராமணர் இங்கேவாருங்கள்

பிராமணர்சொல்-வசனம்.

ஏனப்பா தூதரே என்னையேனழைக்கிறீர்கள்

தூதர்சொல்-வசனம்

ஐயாபிராமணரே இந்தவூர்பரிபாலனஞ்செய்த வீரகுமாரமகாராஜன்மகனாகிய வீரகுமாரனழைக்கிறார்வாருஞ்சுவாமிகளே.

பிராமணர்சொல்-வசனம்,

இதோவந்தேன் நடவுமப்பாதூதரே

தூதர்சொல்-வசனம்.

ஐயாவீரகுமாரராசனேசரணம் இதோபிராமணரைஅழைத்துவந்தோமைய்யா

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியாநல்லகாரியம் ஐயாபிராமணரே இங்கேவாரும்நீர்இராத்திரிசொன்னீரே சர்வகிரியின் கிணற்றிற்றள்ளினவிடமெனக்குநீர்தெரிவிக்கவேண்டுமையா

அப்படியேபோவோமைய்யா

கேளுமப்பாஇராஜனே இதோநாம்சர்வகிரிக்குவந்துவிட்டோம். இதுதான்கிணறுபாருமப்பா

வீரகுமாரன்புலம்பல்-ஜம்பை-இ-ம்-புன்னாகவராளி.

இந்தகிணற்றிலிலந்த மந்திரியோர்தள்ளின அவிந்தையுடனேயெந்தன் தொந்தவந்தணரே
கால்லவரசருக்குக் காதகஞ்செய்ப மந்திரி கோலமென்சொல்வேனையோ கோதிலாயந்தணரே
பாவியேர்மாமாயஞ்செய்த பழிபாவமோவறியேன் ஆவிதமெராறுதையோ அருந்தவவந்தணரே
குடிபடைகளுக்கவருங்குறைகளுந்தான்செய்தாரோ அடியேனுமறிகிலேனே யருமையந்தணரே
இந்வினைக்கென்னசெய்வே னிக்கானகந்தனிலே வந்தெனக்கருடருவாய் பாஞ்சாலமுனியே
இவ்வேளைவந்தெனது இடுக்கங்கமேர்த்தருளும் பவமிலாமென துடைய பாஞ்சாலமுனியே
கோசலைபின்கானகத்திற் கொடுத்தவரம்போலுமின்று பாராசிமுடன்வந்தாதரிப் பாஞ்சாலமுனியே
சிலருள்ளசிவனபதத்தைச் சந்திக்குமனமுடைய பாலனெனைக்காத்திரைய்யா பாஞ்சாலமுனியே

பொதுவிருத்தம்-இ-ம்-கலியாணி.

அரசன்வீரகுமாரனை-சேனைக்கனுப்பிவிட்டுச்
சருவமாகிரியில்வந்து தானுமேபுலம்பும்போதே
பெருமையாஞ்சடையிலங்கப் பிரம்பதனைப்பற்றிக்கொண்டு
பவனருளாலேயாகம் பண்ணபாஞ்சாலர்வந்தார்.

வ-ம். இந்தப்பிரகாரம் வீரகுமார மகாராசன் புலம்பினதைக் கேட்ட பாஞ்சாலமுனியவ்விடம் வருகிறவிதங்காண்க

பாஞ்சாலமுனிவருகிற-தரு-இ-ம்-தோடி-அடதாளம்.

பல்லவி.

யாகமுஞ்செய்யவிவேகமாய்பாஞ்சால
யோகியும்வந்தார்

அநுபல்லவி.

தேகமெல்லாந்திரு நீறணிந்துமேநல்ல
செங்கையில்ருத்திராட்ச மேவிடவேவலே-யாகமு

சரணங்கள்.

பஞ்சாட்சரமந்த்ர மெஞ்ஞானிலேநினைத்து
சஞ்சலமனமுனைந்து
செஞ்சிலம்பணிசிவ காமிபாகனைநினைந்து
தியானித்துவரநல்லத் தியானமுடையவல்ல-யாகமு

பாஞ்சாலமுனிவர்சொல்-வசனம்.

அப்பாவீரகுமாரா என்னையேனழைத்தாய் சொல்லுமப்பா.

சரணஞ்சரணஞ்சுவாமிகளே தங்களையானழைத்தகாரணமென்விடபிதாவை தாங்கள்யாகஞ் செய்தெழுப்பவேண்டி நினைத்தேனையா. சுவாமிகளே-

பாஞ்சாலமுனிவர்சொல்-வசனம்.

நல்லதப்படியேயாகட்டும் பயப்படவேண்டாம்யாகதிரவியங்களைச்சேகரியும் இந்தப்பிராமணரையெழுந்தருளச்செய்யும் நீயிப்படியிரும் இதோயாகசாலைசெய்கிறேன் பாரும்.

வீரகுமாரன்சொல்-வசனம்.

அப்படியேநல்லதையா சுவாமி

பாஞ்சாலமுனிவர்சொல்-சுலோகம்.

ஓம்லம்போதராயநமா ஓம்வாமதேவாயநமா ஓம்பரமேஸ்வரபார்வதாய பிரம்மா விஷ்ணு ருத்திரமகேஸ்வர சதாசிவபஞ்சாட்சரபுண்யா இறந்துபோனவீரகுமாரராஜனெழுந்திருக்கக்கடவது சிவா அப்பாவீரகுமாரா இனியொருநாழிகைக்குள்ளாக உன்பிதாவெழுந்திருப்பார் நினைப்பில மேலிருக்குங்கல்லைத் திறந்துவிடு நான்போய் வருகிறேனப்பா

வீரகுமாரன்சொல்-வசனம்.

சரணஞ்சரணம் அப்படியேமகாபாக்கியம் போய்வாருஞ்சுவாமி.

அப்போதியானமடவியினிலேதான்
ஒப்புடன்கணையாலொன்றானைகண்டு
குறித்துயர்விடுக்கக்கோதையுமங்கே
அதிர்ந்துவோர்பிணமுமண்டியேவருக
இட்டியேயதனைக்கிலேசமில்லாமற்
கட்டியேபிடித்துக்கரையேயிவந்து
பார்க்கும்போதன்றுபாவிச்சென்றவெளிச்சந்
தீர்க்கமாய்காணவிதுசுகிசாடு
வென்றுநாளதிட்டுலேசமாய்ச்செல்லா
அன்றிராத்திரிபோயருணனுமுதைய
மாகியவேளையந்நகர்தோட்டி
யாகியநந்திசாம்புவர்வந்தார்
அன்றுவென்றனைக்கண்டினைவரும்
பெண்ணுய்நினைந்துபெரியவோர்குடிசை
கட்டியேதந்தார்கிளையைப்பெற்றேன்
சட்டமாய்ச்சுதனும்தான்வயதைந்தாக
கல்வியைக்கற்றுகளமுடனிருந்து
வில்வித்தையாலேவேட்டையுமாடி
சிலநாட்சென்றபின்செல்வனுமென்னை
நலமுடனென்பிதாவீட்டினிலுண்டோ
தாயேநீசொல்லத்தனையனுங்கேட்கவு
பாயமாயெல்லாம்பகர்ந்தெனவீர
குமாரனுங்கோசலைப்புரிதனைநாடிச்
சமானமாய்த்தமிழ்சிந்தாமணியருகில்
சென்றுமேகல்விகாற்றெரிவையைச்செய்வித்து
மன்றாத்தவனைமணஞ்செய்துவரும்போ
தங்கேகுபேரன்றன்புதல்வனைமுன்பு
இந்திரப்போரில்இருத்திக்கட்டியதின்
தீரத்தன்மையைத்தெளிவுடன்பார்த்து
வீரகுமாரன்விசையன்றனக்கு
தன்மகள்வாலைச்சௌந்தரிதன்னை
நல மணஞ்செய்துநாட்டினுமனுப்பினான்
தமிழ்சிந்தாமணியுந்தனிவாலைப்பெண்ணும்
கமழவுபென்முன்களையும்வந்தான்
வந்தவன்றனுடல்வளர்நந்திசாம்பன்
இந்தமாதர்களுமெழிலுடன்வந்து
சந்திரகிரியாளரசனைபுதல்வன்
முந்தியேசமரில்முனையமன்னிறந்தான்
இறந்தபின்னிவ்வூரீய்ந்தனன்றேட்டி
திறமுடனுளச்சிலவுதந்திப்போ
இவ்விடமெங்களையிருக்கவும்வைத்து

எவ்விடஞ்சென்றோ இப்போதும்முடன்
வேதியன்கூடவீரகுமாரனும்
காதலாய்வந்தான்காரணமறியேன்
இதுதான்சேதியெக்கவலையற்றோர்
விதமறியேனெனவிளம்புபிராணநாதா

சொர்ணகாந்திசொல்-வசனம்.

ஆ-ஆ-என்பிராணநாதா நான்பட்டபாட்டை இரண்டாயிரநாவுடைய ஆதிசேடனுஞ்சொல்லமுடியாது அப்படியிருக்கநானெப்படி சொல்லமுடியுங்கூடுமானவரையிற்சொன்னேன்பிராணநாதா

வீரகுமாரமகாராசன்-மனைவிக்குச்சொல்-விருத்தம்—இ-ம்-தெண்டா.

அரிசரியெந்தப்பாடு மணம்வைத்தோஉந்தனுக்குச்
சரிசரியெந்தன்மந்திரி சதிசெய்தபிழையினாலே
பரிகரித்திடவுமந்தப் பாவியைச்சிறையில்வைப்பேன்
திருவயிற்றினிலுதித்த சிறுவனும்யவனோபெண்ணே

வ-ம்-கேளாயெனதுபிராணநாயகி நீகோட்டியிவ்வளவுபாடுபட்டாயல்லவாசரிசரி-அரிஅரி அந்தப்பாவிமந்திரி செய்ததல்லவா ஆகட்டும் அவனை இந்தட்சணம்பிடித்துச்சிறையிலிடுகிறேன் உனவயிற்றிற் பிறந்த என்மகனிவன்றானோ சொல்வாய் பெண்ணே சொர்ணகாந்தி

சொர்ணகாந்திசொல்-விருத்தம்-இ-ம்-தோடி.

என்னிடபிராணநாதா வியம்புவேன்கேளீருந்தன்
றன்னையேகூடிவந்த தனயன்றானுந்தன்பிள்ளை
முன்னமேசொன்னேனென்தன் முறைபோலாமுமக்குநன்று
யன்னவன்பிள்ளையென்று மதித்துக்கொள்ராசமன்னா

வ-ம்-கேளும்பிராணநாதா உம்மைச்சருவகிரிமலையினின்று கூட்டிக்கொண்டுவந்த இந்தப்பிள்ளை தானுந்தன்பிள்ளைநான்முன்னமேயாதியோடந்தமாய்ச்சொன்னேனல்லவா இவன்றான் உமதுபிள்ளையாகியவீரகுமாரனை தெரிந்துக்கொள்ளும் பிராணநாதா

வீரகுமாரமகாராசன் ராசகுமாரனுக்குச்சொல்

விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

ஐயனேவாராயெந்த னருமைக்கண்மணியேவாராய்
தய்யனேவாராயிந்த தொல்லுலகாளவந்த
மெய்யனேவாராயென்னை வேந்தரால்வாவழைத்த
செய்யனேவாராயெந்தன் செல்வமேவாராய்வாராய்

வ-ம்- ஐயனே எனதாசைக்கிசைந்த கண்ணின்மணியே இந்த விஜயமாநகரத்தையாளவந்து பிறந்தராசகுமாரா காட்டிலிருந்த வெ

திருத்தமாய்மரங்கெட்டிசெலியெப்படிதான்கண்டாய்
தெரிந்தமட்டுக்குநீதான்சீக்கிரமாயுரைசெய்வீரே

வசனம்

சரணஞ்சரணமையா பிராமணரே நான்காட்டிற்சென்று சர்வகி
ரியின்மேல்வந்து வேடிக்கைபார்த்தமந்திரி யென்னைக் கொன்றிற்றன்
விவிட்ட சங்கதியெல்லாம் உமக்கெப்படிதெரியும் தெரிந்தவரைக்கு
ஞ்சொல்லுமையா சுவாமி பிராமணரே

பிராமணன் அரசனுக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி

மன்னவனேகேளாயும்மைமந்திரிதள்ளும்போது
நன்னயமரத்தின்மீதுநானேயிருந்தேன்கண்டாய்
முன்னமாயானுங்கண்டகொடும்பாவந்தொலைக்கவேண்டி
வன்னமார்தீர்த்தமாடிவந்தபின்னிவருங்கண்டார்

வசனம்

ஆசீர்வாதம் மகாராசனையிருக்கவேணும் வீரகுமாரராசனே
நீர்மந்திரியுடன்வந்து சர்வகிரியினில் வேடிக்கைபார்க்கும்போது மந்
திரியும்மைக் கொன்றிற்றன்ன நான்பின்பிரயார்பூசைக்காக வில்வம்ப
றிக்க வில்வமரத்தின்மீதிருந்து பார்த்தேன் இந்தபாவந்தீர நான்தீர்
த்தயாத்திரைபோய நமதுபட்டணத்தில் வரும்போது இந்தப்பிள்
ளையென்னைக்கண்டு விருந்தாந்தங்களையறிந்துஎன்னுடனும்மைக்கண்டா
ரையா மகாராசனே.

வீரகுமாரராசன்சொல்-வசனம்

ஆ-ஆ-ஆ-மகாபாக்கியம் எனக்காக இவ்வளவுபிரயாசைப்பட்டு
மெத்தவும் வருத்தமெடுத்துக்கொண்ட உமக்குநானென்ன உதவிசெ
ய்யப்போகிறேன் உம்மைமறக்கமாட்டேனப்படி உட்காருமையா பி
ராமணரே

வீரகுமாரன்பிதாவுக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-சுருட்டி

அண்ணலேயொருவிண்ணப்பமறைகுவேன்சமூகந்தன்னில்
மண்ணினையாளவென்றுமதித்துமேமோசமூர்தான்.
பண்ணியயுக்திதன்னைபடுசிறைதனிலிருத்த
வெண்ணினான்போவேனிங்குவேந்தரேயிருந்திடீரே

வசனம்

கேளுமையாஎனதுபிதாவேநமதுபூமியைக்கைக்கொண்டு இராச்
சிய பரிபாலனஞ்செய்ய உம்மைக்கொன்ற மந்திரியை இப்போது சி
றையில்வைத்துவருகிறேன் நீர்இங்கேதானே யிருமையா பிதாவே

வீரகுமாரராசன்சொல்-வசனம்

நல்லதப்படியே செய்துவாருமப்பா வீரகுமாரா

வீரகுமாரன்சொல்-வசனம்

ஆரடா அடா தூதுவர்களே இங்கேவாருங்கள் இந்த ஊரினைத்
தையும் அரசாட்சிசெய்யுந் தத்துவப்பிரகாச மந்திரியை இந்தட்சண
மேபிடித்துக்கட்டி இங்கேகொண்டுவாருங்கள் தூதுவர்களே

தூதுவர்சொல்-வசனம்

அப்படியேபோய்க்கட்டிக்கொண்டுவருகிறேனையா மகாராசனே

தூதுவர்சொல்-வசனம்

ஆரையாகாவற்காரர்களே இந்தவூராளும்வீரகுமாரமகாராசன் தனது பிள்ளையாலுயிர்பெற்று பிள்ளையுந்தானும வந்திருக்கிறார்கள் அவர்களெங்களைப்போய் மந்திரியைக்கொண்டுவரச் சொன்னார்களாதலால் வழிக்குகிறீர்கள் என்னசொல்லுங்காவலர்களே

காவற்காரர்கள்சொல்-வசனம்

ஆ-ஆ-மகாபாக்கியம் எங்களாண்டவர் வந்திருக்கிறாரா அப்படியே தடையின்றிப்போங்கள் தூதுவர்களே

தூதுவர்கள்சொல்-வசனம்

ஆரடா அடாமந்திரி இப்படிவா எனதாண்டவராகிய வீரகுமாரமகாராசனும் அவர்குமாரனும்வந்திருக்கிறார் எழுந்துவாரும் மந்திரி

தூதர்சொல்-வசனம்

ஆரடா அடா தூதுவர்களே இந்தத்துவப்பிரகாசமந்திரியைகமெண்கயற்றால்குண்டுகட்டாய்கட்டுங்கள் பிடிபிடி அடிஅடிகட்டுகட்டுகுத்துகுத்து சீக்கிரம்சீக்கிரம் இதோபார்த்தீரா தூதர்களே இந்தமந்திரியை குண்டுகட்டாய் கட்டினோம் இனிமேல் இராஜாவினிடம்கொண்டு போவோம் வாருங்கள் தூதர்களே

தூதர்சொல்-கவி

சுந்தரபிருத்துசந்திரவதன
மந்திரிதன்னைப்பந்தித்துவந்தோம்

வசனம்

சரணஞ்சரணம் வீரகுமாரமகாராசனே இதோமந்திரியைக் கட்டிக்கொண்டு வந்தோமையா.

வீரகுமாரன்சொல்-வசனம்,

சபாசு அடா தூதர்களே இவனைக்கொண்டுபோய் நமது சிறைச்சாலையிலடைத்து காவல்வைத்து வாருங்கள்பிள்ளாய்.

தூதுவர்சொல்-வசனம்.

அந்தப்படியேசெய்கின்றேனையா அடாமந்திரி சிறைச்சாலைக்குச் சீக்கிரமாய்நட இல்லாவிடில் உங்கள் தண்டுறைக் காலையொடிப்போம் போடாபோ.

மந்திரிசொல்-வசனம்.

அப்பா தூதரே என்னென்னசெய்தேன் வீரகுமாரமகாராஜன் இனற்விற்றனே காலுதவோடு விழுந்தார் நான்குற்றஞ்செய்யவில்லை பெண் பேயனடிக்கிறீரப்பா.

தூதுவர்சொல்-வசனம்.

ஆமடா திருட்டுத்தாயேழிமக்களே அரசனைக்கொன்றிற் றன்னிவிட்டு அம்மானைத்தூரத்திவிட்டு அவர்இராச்சியத்தைக் கைக்கொள்ளப்பார்த்தாயே தெய்வமிபொறுக்குமோடா சண்டாளப்பாவிநடவடா நட

மந்திரிசொல்-வசனம்

இதோநடக்கிறேனப்பா அடிக்கவேண்டாம் தூதர்களே

தூதர்சொல்-வசனம்

அடா காவலாளிகளே இந்ததத்துவப்பிரகாசமந்திரியை இந்தச்சிறைச்சாலையிற்போட்டுவைரும் இவனைபத்திரமாய்க் காத்திருங்கள்நாங்கள் போய்வருகிறோம்.

அப்படியே இராஜாக்கினைதவறாமல் காக்கின்றோம் தூதர்களே

தூதர்சொல்-வசனம்

சரணஞ்சரணமையா வீரகுமாரமகாராஜனே தங்களுடைய கட்டளைப்பிரகாரம் மந்திரியை சிறையிலிட்டு வந்தோமையா.

வீரகுமாரன்சொல்-வசனம்.

ஆரடா அடாதூதுவர்களே இங்கேவாருங்கள் நமதுநகரிலிருக்குந் தோட்டியையழைத்து இறந்துபோன வீரசூரமகாராஜன் உயிர்பெற்று தமது சிம்மாசனத்திற்கொலுவிற்கு வருகிறதாய் காவற்காரனிடஞ்சொல்லிப்பறையடிக்குந் தோட்டியைவரச்சொல்லுந் தூதர்களே.

தூதர்கள்சொல்-வசனம்.

அப்படியே செய்கின்றோமையா

தூதர்சொல்-வசனம்.

ஐயா காவற்காரரே நமது ராசா கொலுவிற்கு வருகிறபடியால் தோட்டியை உம்மிடஞ்சொல்லியழைக்கச் சொன்னாரையா.

காவற்காரத்தலைக்கட்டியக்காரன்சொல்-வசனம்.

அப்படியேநல்லதையா தூதர்களே.

பொது-விருத்தம்.

மந்திரிதனைவீர குமாரனுஞ்சிறையில்வைத்த
பிந்திதன்னிஜயகாபிறக்கவுமமைச்சர்சூழ
வந்தினிபுலவையான வையகத்தோர்கள்காண
சந்தரத்தோட்டிதானுந் தொனிபறையடிக்கவந்தான்.

வசனம்.

இந்தப்பிரகாரந்தத்துவப்பிரகாசமந்திரியை வீரகுமாரன் சிறையில் வைத்தபின் இறந்துபோன வீரசூரமகாராசனை உயிர்பெற்று மறுபடியும் அரசுபுரிய தமது சிம்மாசனத்துக்குவருங் கீர்த்தி புலகத்தார்களறிய பறையடிக்கத் தோட்டிவருகிறதென்னவென்க.

தோட்டிவருகிற-தரு-இ-ம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

பறையடிக்கிறேந்தோட்டிநானே சாமி
பறையடிக்குந்தோட்டிநானே
ம்மைமான்குமயிர்த்திடும். வள்ளுவர்குலத்திலில்
வந்துபிறந்திடும் சந்தாயிகுந்தபடி-பறை

சாதியுயர்ந்தவர்கள்-நாங்கள்
சாத்திரங்கள்கற்றவர்கள்
வேதியர்குலங்களு மெங்களுக்கீடோ
விண்ணவர்முனிவர் களுமினிசோடா-பறை

தேசமன்னர்களுக்குத்தான் சிராய்
சிறந்தபறையடிப்பேன்
பூகார்சொல் வேசரும்புகல்வேன்
பூமியிலுண்டான புராணத்தில்வெல்வேன்-பறை

வள்ளியுமெங்கள்குலப்-தெய்
வாணையுமெங்கள்குலம்
புள்ளியுபில்விரப் புனிதனாய்வேத
புக்கவகந்தா னெங்கள்குலநாதபறை

கட்டியக்காரன்சொல்-வசனம்.

அடா அடாதோட்டி இங்கேவா

தோட்டிசொல்-வசனம்.

சொல்லுமையா காவலாண்டேசொல்லும்.

அடாதோட்டி நமதுவிஜயநகராஜு மகாராஜர் மந்திரியவிறந்து போனானென்றல்லோ சொன்னார்கள் அவர்தமது குமாரனாகிய வீரகுமாரனால் உயிர்பெற்றும் மந்திரியைச் சிறையில்வைத்து இப்போது கொலுக்கூடம் வருகிறபடியால் சகலமானபெயர்களுக்குந் தெரியும்படி பறையடித்துவருக உத்தாரஞ்செய்தோம் ஆகையால் பறையறையும்பிள்ளாய்.

தோட்டிசொல்-வசனம்.

அப்படியேநல்லது காவற்காரஆண்டே

தோட்டி பறையறைவிக்கும்-தெம்மாங்கு-இ-ம்
சங்கராபரணம்-ஆதிதாளம்

பல்லவி.

கேட்டீரோகேட்டீரோ கேளுங்கள்கேளுங்கள்

அநுபல்லவி.

காட்டிலுண்டானவரே நாரியரோயாடவிர கேட்

சரணங்கள்

காட்டில்வேட்டையாடப்போன
  கனமாம்வீரகுமாரர்வந்தார் — கேட்டீ
மந்திரியின்குமாரன்கொண்ட
  முன்னன்குமார திருமார்வந்தார் — கேட்டீ
சொர்ணகாந்தியம்மன்பெற்ற
  துரைவீரகுமாரன்வந்தார் — கேட்டீ
வாலைப்பெண்டமிழரசுடன்
  வலுவீரகுமாரன்வந்தார — கேட்டீ
ஆனைசேனைசூழஅவர்
  நமதுவனமேவந்திருக்கின்றார் — கேட்டீ
விஜயமாநகர்சபைக்கு
  சேர்ந்தனிப்போவருகின்றார் — கேட்டீ

தோட்டிசொல்-வசனம்

சரணஞ்சரணமைய்யா காவலாண்டே

கட்டியக்காரன்சொல்-வசனம்

அடாதோட்டி அரசன் உத்திரவு செய்தபடியால் பறையறைவி
த்தையா

தோட்டிசொல்-வசனம்

அந்தப்படியே இந்தவுலகமெல்லாம்பறையறைவித்தேன்சுவாமி
காவலாண்டே

கட்டியக்காரன்சொல்-வசனம்

ஆனால் போய்வாருமையா தோட்டி

தோட்டிசொல்-வசனம்

அப்படியே போய்வாரேன் ஆண்டே

கட்டியக்காரன்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி

மணிபொழிசிலையநாட்டின் மன்னவனேநின்றாட்போற்றி
பணிதமிழ்ச்செரிவசன்வாலைப் பாவையர்கணவாபோற்றி
கணிகையர்வாழுநாட்டிற் கதித்திடுமெவருங்காண
துணிபுடன்தோட்டிதானுந் தொனியறைந்தானையா

வசனம்

நவரத்தினம்பொழிகின்ற விஜயமாநகரை யரசாட்சி செய்யும்
வீரகுமாரமகாராஜனே சரணஞ்சரணம் நல்ல அழகிற்சிறந்த தமிழ்சிந்
தாமணியையும் வாலைச்சௌந்தரியம்மாளையு மணர்ந்த வீரகுமாரம
காராசனேசரணம் தங்களுத்திரவின்படி இந்தவுலகமெல்லாம் தோ
ட்டி பறையறையுவித்தானசுவாமி

வீரசூரமகாராசன்சொல்-வசனம்

அப்படியானால்லது இருக்கட்டும்பிள்ளாய் கட்டியக்காரா.

பொது-வசனம்.

இந்தப்பிரகாரம்வீரசூரமகாராசன் தன்மனைவியோடும்வீரகுமாரனும் தமிழ்சிந்தாமணிவாலைப்பெண்ணும் யாவர்களுங்கொலுவிற்குவருகிற விதங்காண்க.

வீரசூரமகாராஜன் வீரகுமாரன் யாவர்களுங்கொலுவிற்கு
வருகிற-தரு-இ-ம்-அடாணா-திரிபுடை-தாளம்.

பல்லவி.

வீரசூரனும்வீரகுமாரனும்வேந்தர்களுங்கொலுவில்வந்தார்

அநுபல்லவி.

தீரமானமந்திரிகள்சூழதிசைமன்னரடிகளுந்தாழ — வீரசூர

சரணங்கள்.

தோகைசொர்ன்னகாந்திமாது தொன்மைதமிழ்சொரிமணிபாள்
போகவாலைப்பெண்ணுங்கூட்டோர் ஜெயவீரர்களுங்கூட — வீர

பூச்சக்கிரகுடைகள்பிடிக்க பூமியெங்குமுரசடிக்க
ஆச்சரியமாகவேவதனன் மாதர்களாடியவெகுவினோத — வீர

சிங்காரமாதர்களும்போற்ற ஜெயமாய்வாணர்கவிகள்சாற்ற
தங்கலானோர்மலர்கள்தூவ இலங்குசிம்மாதனமேல் — வீர

வீரசூரமகாராசன்சொல்-கடவுள்வணக்கம்.

விருத்தம்-சங்கராபரணம்.

வேதத்தின்வித்தாயெங்கும் விளங்கியமணியேபோற்றி
நாதத்துள்ளொளியாய்நின்ற நற்சுடர்பரனேபோற்றி
மாதவனயனுங்காணா மலரடியோன்தாள்போற்றி
சோதியாயிலகும்வாமித் துணைவனேபோற்றிபோற்றி

வீரகுமாரன் போற்றிவிருத்தம்-இ-ம்-மோகனம்.

இன்னிலம்புரக்கவந்த வேகசக்ரேசாபோற்றி
மன்னர்க்குமன்னனாக மணிமுடிதரித்தாய்போற்றி
கன்னியாஞ்சொர்ன்னகாந்திக் கணவனாகியவாபோற்றி
வன்னமேவழகுவுந்தன் மலரடிப்போற்றிபோற்றி.

இரண்டாவது மந்திரிசொல்.

போற்றிவிருத்தம்-இ-ம்-சாவேரி.

மாற்றலர்தன்னைவெல்லவந்தவதரிக்குமெல்லக்.
கூற்றனேவிரையநாட்டின்கொற்றவாநின்றாட்போற்றி
நாற்றிசைதிக்குமெங்காணாகனேமணியேபோற்றி
தோற்றவாவீரசூரதுரையேநின்பாதம்போற்றி